# எடுப்பானவை,

# சுகமானவை,

# சொகுசானவை



உங்களுடைய தேவைக்கேற்ப, எடுப்பான பல ரகங்களில் பாம்பே டையிங் ஸூட்டிங்குகளும் ஷர்ட்டிங்குகளும் உள்ளன. வெள்ளை மற்றும் இதர நிறங்களில் 'டெபிலீஸ்டு' அல்லது 'ஸான்ஃபரைஸ்டு' டஸ்ஸூர்கள், கேபர்டின்கள், டிரில்கள், மற்றும் பாப்ளின்கள், கிடைக்கும். பாம்பே டையிங் ஸூட்டிங்குகளும் ஷர்ட்டிங்குகளும் வாங்கினால் நீங்கள் கொடுக்கும் பணத்துக்கு முழு மதிப்பையும் பெறுவீர்கள்!

நாடெங்குமுள்ள எல்லா முக்கிய சில்லறை ஜவுளி வியாபாரிகளிடமும் கீழ்க்கண்டவர்களிடமும் கிடைக்கும்:

தென்னிந்தியாவிற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**செல்லாராம்ஸ்**

மதராஸ் & ஹைதராபாத்

# பாம்பே டையிங்

தி பாம்பே டையிங் & மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்

JWT-BD-1146

# கல்கி



பட விளக்கம் 76-ம் பக்கம் பார்க்க

## பொருளடக்கம்

சோபகிருது, ஆனி 16உ
ஜூன் 30உ 1963



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே. சம்பவங்களும் கற்பனையே.

# நன்றி கூறுகிறோம் உமது நல்லாதரவுக்கு!



தரத்தையும் தன்னகத்துப் பற்றையும் !
பெரிதெனக்கருதி, தாய்நாட்டுத்
தயாரிப்பாகிய எமது ரகத்தையே
தேர்ந்தெடுத்தது தங்கள் கரம்.
வற்புறுத்தலோ, கண்டனமோ எந்நிலையிலும்
விரும்பிய ரகத்தை விடாது பெருமையோடும்
துணிவோடும் பிடித்துவருகிறீர்கள்.

தந்திரமான பிரசாரங்களால் மதிமயங்கி-
விடவில்லை தாங்கள். இந் நாட்டில் தயாரிக்
கப்படும் சிகரெட்டுக்கள் சில, வேற்றுநாட்டு
ரகங்களோ என்று தவறுகக் கருதப்படு
கின்றன; அவற்றின் விலை உயர்வாக
இருப்பதுபோல தரமும் உயர்வாக இருந்து
விடுவதில்லை என்பதை உணர்ந்துள்ளீர்கள்.
தரமான சிகரெட்டுக்களை—ஆம், இன்றி
யமையாத அயல்நாட்டு நாணயமாற்றினைக்
காப்பாற்றித் தர உதவும் அசல் இந்திய
சிகரெட்டுக்களை - உற்பத்தி செய்வதற்கான
ஆள்பலம், நிதி, பொருள்வளம் யாவும்
படைத்ததே நம் நாடு என்பதை
நன்கறிந்துள்ளீர்கள்.

நீங்கள் காட்டும் வழியையும், புகை
பிடிப்பதிலே உங்களைப் பின்பற்றிப் பெருகி
வரும் மக்கட் திரளையும் பொறுத்துள்ளது
இவ் வியக் தொழிலின் வருங்காலம்.

அதிலே எமது பங்கை உணர்ந்து, செவ்வனே
தங்களுக்குப் பணிபுரிவதன்மூலம்
தாயகத்தின் தொழில்வளத்தை மேம்படுத்தும்
கடமையிலே எம்மை அர்ப்பணித்துக்
கொள்கின்றோம்.




கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட்
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 61. TAM. Graces' Advtg



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 48

# விஷத்திலிருந்து விடுதலை வேண்டும்

"**போ**ப் ஜான் அவர்களின் புனித ஆன்மா கென்னடியையும் குருஷேவையும் அணு ஆயுத சோதனை நிறுத்தத்தில் ஈடுபடுத்துமாக!" என்று சமீபத்தில் ராஜாஜி எழுதினார். போப் ஜான் அவர்களின் ஆன்ம பலமோ ராஜாஜி அவர்களின் பிரார்த்தனை விசேஷமோ இன்று அணு ஆயுத சோதனை நிறுத்தத்தில் வல்லரசுகள் நல்லதொரு முன்னேற்றத்தைக் கண்டிருக்கின்றன. குருஷேவ், கென்னடி, மாக்மில்லன் மூவரும் அனுப்பும் விசேஷப் பிரதிநிதிகள் ஜூலை மாதத்தில் மாஸ்கோவில் கூடி எப்படியேனும் சோதனை நிறுத்தத்துக்கு ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ள முயலப் போகிறார்கள். முயற்சி வெற்றி பெற வேண்டும் என்பதே அகில உலகிலுமுள்ளோரின் விருப்பமாகும்.

இத்தகையதொரு ஒப்பந்தத்துக்கு ஒரு சிறிய விஷயமே தடங்கலாக இருந்து வருகிறது. பூமியைத் தோண்டிக் குழியில் நடத்தப்படும் அணு ஆயுத சோதனைகளை எதிராளி ஏழு முறை கண்காணிக்க அநுமதிக்கப்பட வேண்டும் என்று அமெரிக்கா கூறுகிறது; மூன்று முறைதான் அப்படிக் கண்காணிக்கலாம் என்று ருஷியா கூறுகிறது. ரகசியச் சோதனையைத் தடை செய்ய ஒரு கருவியாகவே கண்காணிப்பு கருதப்படுகிறது. கண்காணிப்பினால் ரகசியம் வெளிப்பட்டுவிடும் என்கிற பயம் இருந்தால் போதும். இத்தனை கண்காணிப்பு என்கிற எண்ணிக்கையில் விசேஷம் ஒன்றுமில்லை. இந்தச் சிறிய விஷயத்தில் கென்னடி, குருஷேவ் இருவரும் தங்கள் கருத்தை இளக்கி இணக்கம் காண வேண்டும்.

அமெரிக்க அரசாங்கத்துக்கும், ருஷிய அரசாங்கத்துக்குமாக வாஷிங்டனிலிருந்து மாஸ்கோவுக்கு ஒரு நேரடி கேபிள் தொடர்பு ஏற்படுத்த இரு நாடுகளும் இணங்கி உடன்படிக்கையில் கையெழுத்திட்டிருக்கின்றன. இதனால், யுத்த நெருக்கடி முற்றும் ஒரு சந்தர்ப்பம் ஏற்படுமாகில் இரு சர்க்கார்களுமே, ராஜதந்திர வட்டாரங்களின் குறுக்கீடுகளும் சுற்றி வளைத்த காரியக் கிரமமும் இன்றி, நேரடியாகக் கலந்தாலோசிக்க முடியும் என்று சொல்லப்படுகிறது. யுத்தம் நேராமல் தடுக்க வேண்டும் என்பதே இந்தத் தொடர்பு ஏற்படுத்தக் காரணம் என்று கருதப்படுகிறது. அந்த அளவில் இந்த ஏற்பாட்டை உலகம் வரவேற்கும். அதே சமயத்தில் இப்படிப்பட்ட ஒரு நெருக்கடி நிலைமையே ஏற்படாதிருக்க வேண்டும் என்பதுதான் உலகத்தின் ஆசை.

போர் ஏற்படுமா, ஏற்படாதா என்பது தனிப் பிரச்னை. உலகச் சூழலை நாளுக்கு நாள் நச்சு மயமாக்கி வரும் அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவது உடனடி அவசியம். 'அணு சோதனையில் ஏற்படும் கதிரியக்க விஷவிளைவுகள் உலகெங்கும் தானே பரவுகின்றன? இதனால், பெரிய பாதகம் எதுவும் ஏற்படாது' என்று இவ்வளவு நாட்களாக ஒரு கருத்து நிலவி வந்தது. ஆனால் ராஜாஜி இந்தக் கருத்து சரியானது என எண்ணவில்லை. ஒரு சில இடங்களில் கதிரியக்கம் வலுவாகவும், மற்ற இடங்களில் நலிவாகவும் இருக்கக் கூடும் என்றே அவர் அநுமானித்தார். ராஜாஜியின் அநுமானம் சரியென்று இப்போது ரூர் பகுதியில் நடந்த ஆராய்ச்சிப் பரிசோதனைக்குப் பின் தெரிய வருகிறது. அதாவது, உலகின் எந்தப் பகுதி என்று முன்கூட்டியே நிர்ணயிக்க முடியாத ஒரு பகுதியில் கதிரியக்கத்தால் கொடூரமான விளைவுகள் ஏற்படக்கூடும். 'தங்கள் ஆணையிலில்லாத பகுதியின் சூழலை விஷமாக்க எந்த ஒரு சர்க்காருக்கும் உரிமை ஏது? ஏதேனும் ஒரு வல்லரசு ஒருதலைப்பட்சமாக அணு ஆயுத சோதனையை நிறுத்த வேண்டும்' என்று அறிஞர் பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் கூறுகிறார். எதிராளியை எதிர்பார்க்காமலே ஜூலை மாத வல்லரசுப் பேச்சு நடக்கும் வரையில் சோதனையை நிறுத்தியுள்ள கென்னடியைப் பாராட்டுகிறோம். தாற்காலிகமான இந்த ஏற்பாடு நிரந்தரமாக வேண்டுமென்று விரும்புகிறோம்.

# என்ன சேதி ?

## தகுதி வேண்டாம், நன்கொடை போதும்!

'எழுத்தறிவிப்பவன் இறைவன்' என்றால் அவ்வாறு எழுத்தறிவிக்கும் பள்ளிகளை ஆலயம் என்றே கருத வேண்டும். கோயில்களில் கமழ வேண்டிய புனிதம் பள்ளிகளிலும் இருக்க வேண்டும். இப்படி அவை இருக்கின்றனவா என்ற வேதனை நிறைந்த வினா இவ்வாண்டு பள்ளிகள் திறந்தபோது எழுந்தது. இட நெரிசல் தாங்க முடியாததால் பரீட்சை வைத்து மாணவர்களை அனுமதிக்கும் வழக்கம் இருந்து வருகிறது. 'இதில் பாரபட்சம் நேராமல் இருக்கிறதா, தகுதி பெற்றவர்கள் மட்டும்தான் தேர்ந்தெடுக்கப்படுகின்றனரா?' என்பது முதல் கேள்வி. அதை விட அருசியான விஷயம், மாணவர்களின் அறிவுத் திறனைக் கொண்டு அனுமதிக்காமல், அவர்களுடைய பெற்றோர்களின் பொருளாதார வசதியை முன் வைத்து அனுமதி தருகிற காரியமாகும். சில பள்ளிக்கூடங்களில் நன்கொடை வழங்கும் மாணவர்களுக்கு அனுமதி தரும் விஷயத்தைத்தான் குறிப்பிடுகிறோம். சர்க்கார் அளித்துள்ள கட்டணச் சலுகைகளை இந்த நன்கொடை நிர்ப்பந்தம் பயனற்றதாக்கி விட்டது என்று பெற்றோர்கள் குறை கூறுகிறார்கள். 'இன்று அனுமதிக்கு நன்கொடை என்றால் நாளைக்கு மேல் வகுப்புக்கு உயர்த்துவதற்குக் கூட நன்கொடை கேட்கக் கூடும்' என்கிறார் ஒரு கல்வித் துறை நிபுணர். தகுதியாலின்றி, திரவிய பலத்தால் தேர்தலில்தான் வெற்றி பெறுகிறார்கள் என்றால் கல்வித் துறையிலுமா இந்த அசங்கியம் புகவேண்டும்?

## பிரிட்டனைப் பாருங்கள் !

பிரிட்டனில் மந்திரி ப்ரொஃப்யூமோ பாதுகாப்பு ரகசியங்களைத் தம் அபிமானத்துக்குரிய ஒருத்தியிடம் வெளியிட்டு விட்டார் என்ற சந்தேகம் தோன்றியதிலிருந்து அந்த நாட்டில் ஏற்பட்ட கொந்தளிப்பை நாம் கூர்ந்து நோக்க வேண்டும். இந்த விவகாரத்தில் சில விஷயங்களை வெளியிடப் பாதுகாப்பு இலாகா மறுத்தது சரியா, மாக்மில்லன் இன்னும் பதவியில் இருப்பது சரியா என்பதெல்லாம் ஒருபுறமிருக்கட்டும். சந்தேகாஸ்பதமான மந்திரி ஒருவரை அமைச்சரவையில் வைத்துக் கொண்டதற்காகப் பிரதமரே பதவியைத் துறக்க வேண்டுமென கோரும் அந்நாட்டு மக்களின் கருத்தைத்தான் நாம் முக்கியமாகக் கருத வேண்டும். அதோடு, அவரிடம் நம்பிக்கை இருப்பதாகப் பாராளுமன்றத்தில் கன்ஸர்வேடிவ் கட்சி வாக்களித்த போதிலும் இன்னும் சிறிது காலம் தான் அவர் பிரதமர் பதவியை வகிக்கலாம் என்று கருதுவதையும் நாம் கவனிக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக மாக்மில்லன் தம் மீது நம்பிக்கை உள்ளதா என்று பிரேரித்த தீர்மானத்துக்கு 'இல்லை' என்று பல கன்ஸர்வேடிவ் அங்கத்தினர்களே வாக்களித்திருப்பதையும் பார்க்கவேண்டும்.

ராதையைக் கிருஷ்ணன் காதலிக்கிறான் !



## ஸ்ரீ தத்தாத்திரேய ஆலய கும்பாபிஷேகம்

அவதூதர்களாய், ஞான வைராக்கிய சீலர்களாய், சரீரத்தை முற்றும் மறந்தவர்களாய் வாழ்ந்தவர்கள் ஸ்ரீ ஸ்வயம் பிரகாச பிரம்மேந்திர சரஸ்வதி அவதூத ஸ்வாமிகள். இளமையிலேயே துறவு பூண்டு பாரத தேசம் முழுவதும் யாத்திரை செய்து கடைசியில் சேலம் ஜில்லாவில் சேந்த மங்கலத்திலுள்ள தத்தகிரி குகாலயத்தில் பல வருஷங்கள் இருந்து பக்தர்களுக்கு அநுக்கிரகம் செய்து கொண்டிருந்தார்கள்.



அவர்கள் லோக க்ஷேமத்தைக் கருதித் தாம் எழுந்தருளி யிருந்த தத்தகிரியின் உச்சியில் தத்தாத்திரேய மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தார்கள். அவர்கள் சித்தி யடைந்த பிறகு ஸ்ரீ தத்தாத்திரேய மூர்த்தியையும் ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தையும், பல அன்பர்கள் தரிசித்துத் தங்கள் விருப்பங்கள் நிறைவேறப் பெற்று வருகிறார்கள்.

தென்னாட்டில் தத்தாத்திரேயருடைய ஆலயம் மிக அருமை. ஒரு பெரிய தவ சிரேஷ்டரால் பிரதிஷ்டை செய்யப் பெற்ற இந்த ஆலயம் மிகவும் சிறப்பானது. இந்த ஆலயப் பிரதிஷ்டை ஆகிப் பல வருஷங்கள் ஆகிவிட்டன. ஆதலின் இதற்கு ஜீரணோத்தாரண கும்பாபிஷேகம் செய்ய வேண்டும் என்று அன்பர்கள் எண்ணிச் சில திருப்பணிகளை நிறைவேற்றி யிருக்கின்றனர். ஜூன் மாதம் 28-ந் தேதியன்று (ஆனி மாதம் 14-ந் தேதி) வெள்ளிக்கிழமை கும்பாபிஷேகம் நடைபெறப்போகிறது. பக்தர்களனைவரும் இந்த வைபவத்தில் கலந்து கொண்டு ஞான தெய்வத்தின் கருணையைப் பெறுவார்களாக!

— சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்

சம்பந்தப்பட்ட மந்திரி, குற்றச்சாட்டு முழுவதும் ருசுவாகாதபோதும், தாம் ஒரு பொய் கூறியதாக ஒப்புக்கொண்டு நாடு முழுவதும் அதிருப்தி உண்டாகு முன் ராஜிநாமா செய்ததையும், அதைப் பிரதமர் தாமதப்படுத்தாமல் ஒப்புக் கொண்டதையும் கவனிக்க வேண்டும். இவற்றோடு நம் நாட்டுச் சமீப காலத்திய நிகழ்ச்சிகளை ஒப்பிட்டுப் பார்த்தால் வித்தியாசம் மலைக்கும் மடுவுக்குமாக இருக்கிறது.

### புது வகை லஞ்சம்

திருவண்ணாமலையில் நடக்கவிருக்கும் உபதேர்தலுக்காகப் பிரசாரம் செய்யச் சென்ற முதன் மந்திரி ஸ்ரீ காமராஜரிடம் திருவண்ணாமலை வக்கீல்கள் சங்கத்தினர் அங்கு ஒரு மாஜிஸ்திரேட் கோர்ட் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கின்றனர். ''அதற்கென்ன? ஆகட்டும் பார்க்கலாம்'' என்று முதன் மந்திரியார் கூறியிருக்கிறார். இந்த 'ஆகட்டும் பார்க்கலாம்' ஒருகால் உண்மையாகி கோர்ட் கூட ஏற்படலாம். ஆனால் இப்படி 'வரம்' அளிக்கும் வசதி எதிர்க் கட்சியில் உள்ளவர்களுக்கு ஏது? காங்கிரசுக்குத் தன் கொள்கையை எடுத்துக் காட்டுவதைவிடச் சிறு சிறு வசதிகள் செய்து கொடுத்து வோட்டுச் சேகரிப்பதே தொழிலாகி விட்டது. தாமாகச் செய்யவேண்டியதை நிறுத்தி வைத்து உபதேர்தல் காலத்தில் அவற்றைச் செய்து திருப்தியளிப்பது லஞ்சமேயாகும். பிரிட்டனில் உப தேர்தலுக்கு முதன்மந்திரிகள் பிரசாரத்துக்குப் போவதில்லை என்று ஒரு சம்பிரதாயத்தை வைத்துக் கொண்டிருக்கின்றனர் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

# போகிற போக்கிலே!



இலங்கைப் பிரதமர் ஸ்ரீமதி பண்டார நாயகாவையும், எகிப்திய மந்திரி அலி சாப்ரியையும் எதிர்பார்த்துக் கொண்டு டெல்லி சர்க்கார் உட்கார்ந்திருக்கிறது. இப்படி உட்கார்ந்திருக்கிற டெல்லி சிறிது அசைந்தாவது கொடுக்க வேண்டும். ஈரப் புளிமூட்டை மாதிரி ஆடாது அசையாது உட்கார்ந்திருக்கவே, சீனாக்காரர்கள் தங்களது விஷம வேலையை ஆரம்பித்து விட்டார்கள்.

நேபா பகுதியிலும் லடாக் முனையிலும் ஊடுருவல் செய்து விட்டார்களாம். "யுத்த நிறுத்த ஒப்பந்தப்படி" போட்டிருந்த கோட்டைத் தாண்டி உள்ளே வந்துவிட்டதாகச் செய்திகள் வருகின்றன. சிக்கிம் எல்லையில் படைகள் குவிகின்றனவாம். குதிரைப் படைகளுடன் லடாக் முனையில் வந்தார்களாம். இப்படியாக நாள் தவறாமல் செய்திகள் வருகின்றன. இந்தச் செய்திகளைப் பார்த்தால் நல்ல வெய்யில் ஆரம்பமாவதற்கு முன்பே சீனரின் வேலை ஆரம்பமாகி விட்டதாகத் தெரிகிறது. இந்த ஆபத்தைக் குறைக்க நமது டெல்லி சர்க்கார் சிறிது காலைக் கையை அசைத்துக் கொண்டாவது இருப்பார்களாக!

ஃ ஃ ஃ

நேருஜி மாஸ்கோ போவதாகச் செய்தி வந்திருக்கிறது. இப்படி உலகத்தோடு "ஒட்டி வாழ" முயற்சி செய்வதில் குற்றமில்லை. ஆனால் அதை எப்போது செய்வது என்பதுதான் கேள்வி. இந்தியா சமாதானத்தில் இருந்து, மாதம் மும்மாரி பெய்து, கன்று காலிகளிலிருந்து சகல மக்களும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்தும்போது இப்படிச் செய்யலாம். யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். இன்றோ, எதிரிவீட்டம் எல்லை சிக்கிக் கொண்டு நாட்டு மக்களெல்லாம் வயிற்றைப் பிசைந்து கொண்டிருக்கிற நேரம். இந்த நேரத்தில் எங்கே போவது நல்லது, அவசியமானது என்பதை நன்கு உணர வேண்டும். அமெரிக்காவில் நமக்குச் சாதகமாக ராஷ்டிரபதி அவர்கள் உண்டாக்கிய பொதுஜன அபிப்பிராயத்தை இது குலைத்து அவர்களை மீண்டும் சந்தேகம் கொள்ளச் செய்யும்.

ஃ ஃ ஃ

கட்டாய சேமிப்புத் திட்டத்துக்கு இந்தியா முழுமையும் 60 லட்சம் பாஸ் புத்தகங்கள் தேவைப்படுகின்றனவாம். தமிழ் நாட்டுக்கு மட்டும் மூன்றரை லட்சம் புத்தகங்கள் தேவை என்று கணக்கொன்று வெளியாகியிருக்கிறது. இந்தப் புத்தகங்களைத் தபாலாபீஸ்கள் பராமரிக்க வேண்டும். அப்படிப் பராமரிக்க என்ன செலவாகும் என்ற கணக்கு இன்னும் வெளிவரவில்லை. இதில் ஈடுபடும் ஆட்கள் சம்பளம், இதற்கான பேனா - பென்சில் புத்தக விலை முதலிய விவரங்களும் வெளிவர வேண்டும். அப்படி வந்து அதைக் கூட்டிப் பார்த்து, அதோடு பல கோடி ரூபாய் நஷ்டஈட்டுக்குச் சமமான தொல்லையை மக்கள் அனுபவிக்கப் போவதையும் கணக்கெடுக்க வேண்டும். அப்போதுதான் திரு மொரார்ஜியின் 'துக்ளக் தர்பார்' நன்றாகப் புரியும்.

ஃ ஃ ஃ

ரஷ்யா மீது படையெடுத்துச் சென்ற நெப்போலியன் ஒரு கட்டத்தில் ஓர் அங்குலம் கூட மேற்கொண்டு முன்னேற முடியாதபடி போய்விட்டது. காரணம், கடுமையாக வீசிய பனிப் புயல்தான். இந்தப் பனிப் புயலைப் பார்த்த நெப்போலியன் திக்குமுக்காடித் திணறினான். அப்போதெல்லாம் "இந்தப் பனியை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லையே" என்றானாம்! உடனிருந்த தளபதிகள் எல்லாம் என்ன செய்ய முடியும்? நெப்போலியனுக்குப் புத்தி சொல்லத் தலைப்பட்டால் அவர்கள் கதி அதோகதி ஆகாதா?

நெப்போலியன் போலவே நேருஜியும் இருக்கிறார். சுதந்திரக் கட்சி பிறந்து பல ஆண்டுகள் ஆகியும், அதன் கொள்கை பட்டி தொட்டிகளிலெல்லாம் பரவி, இன்று பாராளுமன்றத்தில் 28 பேர் ஜாம் ஜாம் என்று அமர்ந்தும் அவருக்குச் சுதந்திரக் கட்சியின் கொள்கை புரியவில்லையாம்! என்ன பரிதாபம் பாருங்கள்! இதை லட்சம் தடவை கூறிவிட்டார். நெப்போலியன் கூட இத்தனை தரம் கூறியிருப்பாரா என்பது சந்தேகம்! உடனிருக்கிற பிரதபதிகள் யாராவது நேருவுக்கு விளக்கம் தரக் கூடாதோ? நெப்போலியன் காலத்தில் இல்லாத பேச்சுரிமை இப்போது இருப்பதாக அல்லவா நம்பப்படுகிறது? — சிட்டுக்குருவி

## திருவண்ணாமலை வாக்காளர்களுக்கு ஒரு வேண்டுகோள்

29ம்தேதி சனிக்கிழமை நடக்கப்போகும் தேர்தலில், தாங்க முடியாத வரிச்சுமை போட்டும், பொறுக்க முடியாத விலைவாசி ஏற்றம் உண்டாக்கியும், லஞ்ச ஊழல்களுக்கு வசதி தந்தும் நாட்டின் நிர்வாகத்தைப் பாழ்படுத்தி சுயராஜ்யத்தைப் பொய்யாக்கிய காங்கிரசுக்குத் திருவண்ணாமலையில் தோல்வி கொடுத்து ஜனநாயகத்துக்கு உதவி செய்யுமாறு எல்லா தேசபக்தர்களையும் வேண்டிக் கொள்கிறேன்.

ராஜகோபாலாச்சாரி

நமது தமிழ் நாட்டில் மதுரை வாசிகளைப் போல் பாக்கியசாலிகள் வேறெவரும் இருக்க முடியாது. வெறும் பாக்கிய சாலிகள் என்று மட்டும் சாமான்யமாகக் கூறி விட்டு விடுவதற்கில்லை. இணையற்ற பாக்கிய

# கோயில் மாநகரில் ஒரு கோலாகலம்

சாலிகள் என்று சற்றுத் தாராளமாகவே சொல்லலாம். கண் பார்வை சென்றதிசை யெல்லாம் தெருவுக்குத் தெரு-வீதிக்கு வீதி கோயில்களும், கோபுரங்களும் நிரம்பியிருப்பதால் மதுரைக்குக் கோயில் மாநகர் என்றும் ஒரு பெயர் சொல்லுகிறார்கள். அந்தக் கோயில் மாநகர் இப்போது கோபுர மாநகராக விளங்குகிறது. நகருக்குள் நுழையும் போது வைகைப் பாலத்தின் மேலேறி மதுரையைப் பார்க்கின்ற முதற் பார்வையிலேயே புதிய வண்ணம் பொலியும் மாபெரும் கோபுரங்கள் நான்கும் கம்பீரமாகத் தெரிகின்றன. இந்தக் கோபுரங்களின் புதிய அழகையும் வண்ணக் கோலத்தையும் பார்க்கிற போது மதுரைவாசிகளோடன்றி மதுரைக்கு வருகிற வெளியூர்க்காரர்களையும் சேர்த்துப் பாக்கியசாலிகள் என்று சொல்லலாம் போல் தோன்றுகிறது. மதுரைக்கு 'மீனாட்சி பட்டணம்' என்று நாட்டு வழக்காக ஒரு பெயர் உண்டு. இப்போதோ திருப்பணி முடிந்து புதுமையழகு பொலியும் ஆலயத்தோடு மெய்யாகவே மீனாட்சியின் பட்டணமாக விளங்குகிறது மதுரை நகரம்.

கோயில் மாநகராகிய மதுரை மாநகரத்துக்கும் மிகப் பெரிய மீனாட்சி சுந்தரர் திருக்கோயிலுக்கும் இப்படிப் புதிய தோற்றத்தையும் அருளழகையும் கொடுப்பதற்கு இடைவிடாமல் முயன்று உழைத்த பெருமை தமிழவேள் திரு பி. டி. இராஜன் அவர்களையே சேரும். 'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்' என்று திருவள்ளுவப் பெருந்தகையார் கூறியிருக்கிறார். திரு. இராஜன் அவர்களோ உயர்ந்த காரியங்களை நினைக்கும் ஆற்றலும், நினைத்தபடியே சாதித்து முடிக்கும் ஆற்றலும் பெற்றிருக்கிறார். திரு. இராஜன் அவர்களுடைய மனத்தில் மதுரை மீனாட்சி சுந்தரர் திருக் கோவிலுக்குப் பெரிய அளவில் ஒரு திருப்பணியைச் செய்து முடித்துக் கும்பாபிஷேகமும் நடத்த வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட நேர்ந்தது ஒரு விந்தையான வரலாறு. 1959 ஆண்டு செப்டம்பர் மாத நடுவில் மதுரைக்கு அருகில் உள்ள திருவாதவூர்க் கோவிலில் திருப்பணி முடிந்து கும்பாபிஷேகம் நடைபெற்றது.



மாணிக்கவாசகப் பெருமான் பிறந்த ஊராகிய திருவாதவூரில் நிகழ்ந்த கும்பாபிஷேகத்துக்கு மதுரையிலிருந்து திரு இராஜன் அவர்களும் அன்பர்களும் சென்றிருந்தனர். அக் கும்பாபிஷேக வைபவத்தையும் திரு இராஜன் அவர்களே தலைமையேற்று நடத்தினார். கும்பாபிஷேகம் நிறைவேறிய பின்பு திரு இராஜன் அவர்களும் அன்பர்களும் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கையில் மதுரை



மீனாட்சி சுந்தரர் திருக்கோயில் கோபுரங்களையும், பிற பகுதிகளையும் செப்பனிடும் திருப்பணியை இராஜன் அவர்கள் தலைமை யேற்று நடத்த வேண்டுமென்று அன்பர்கள் தெரிவித்தனர். அப்போது திரு. இராஜன் அவர்கள், ''காரியம் மிகவும் பெரியது! எப்படி முடியப் போகிறதோ? அன்னை மீனாட்சியின் அருள் துணை எனக்கு இருந்தால் ஒரு வேளை இந்தத் திருப்பணி நன்றாக நிறைவேறலாம்'' என்று தன்னடக்கமாகவும், விநயமாகவும் மறுமொழி கூறினார்கள். இது நிகழ்ந்து நான்கு ஆண்டுகளுக்குப்பின் இன்று மாபெரும் திருப்பணியாகிய மீனாட்சி கோயில் திருப்பணி நன்றாக நிறைவேறி, வருகிற 28-6-63 அன்று மகாகும்பாபிஷேகமும் நடக்கவிருக்கிற நிலையில், 'மீனாட்சியம்மையின் திருவருள் துணை இராஜன் அவர்களுக்குப் பரிபூரணமாக உண்டு' என்பது நன்கு நிரூபணமாகி விட்டது. மூன்றாண்டுகளுக்கு முன்பு 27-5-60 வெள்ளிக் கிழமையன்று காலை மதுரை மீனாட்சி அம்மன் சந்நிதியில் திருப்பணியின் தொடக்கவிழா மங்கல மரபுடன் நடைபெற்ற நாளிலிருந்து கடந்த மூன்றாண்டுகளில் படிப்படியாக வளர்ந்து நிறைவேறிவிட்டது. திருப்பணி முடிவதற்கு இருபது லட்சம் ரூபாய் செலவாகும் என்று வல்லுநர்கள் கணக்கிட்டுக் கூறியபோது திருப்பணிக் குழுவினருக்குப் பெரிதும் மலைப்பாக இருந்தது. 'எப்படி வசூலாகப் போகிறது? எந்தக்காலத்தில் திருப்பணி நிறைவேறப் போகிறது?' என்று எல்லாரும்



பொற்றாமரைக் குளமும் கோயிலும்



கோபுரங்களோடு நகரின் மொத்தமான தோற்றம்.

இகைப்பில் இருந்தார்கள். தமிழவேள் திரு இராஜன் அவர்களுக்கு மட்டும் 'மீனாட்சியின் அருள் நம்மைக் கைவிடாது' என்ற நம்பிக்கை உறுதியாக இருந்தது. இத்தகைய மகத்தான நம்பிக்கையாலும், நல்லெண்ணங்களாலுமே இராஜன் அவர்கள் மூன்றே மூன்று ஆண்டுகளில் இந்தப் பெரிய திருப்பணியை நிறைவேற்றித் தந்திருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும்.

''நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமிழ் உண்டு
 நயந்தசில
பாவுண்டு இனங்கள் பலவும் உண்டே
 பங்கில் கொண்டிருந்தோர்
தேவுண்டு உவக்கும் கடம்பாடவிப்
 பசுந்தேனின் பைந்தாள்
பூவுண்டு நார் ஒன்று இல்லையால்
 தொடுத்துப் புனைவதற்கே....''

என்பது போல் மீனாட்சியம்மையின் திருவடிப் பூக்களையும், திருவருளையுமே நம்பித் தொடங்கப் பெற்ற இந்தத் திருப்பணி பொருளாலும் அருளாலும், நிறைவுற்றுப் பரிபூரணமாகி விட்டது. பெருநிலக்கிழார்களும், தனிப்பட்ட செல்வர்களும், பொது மக்களும், வாணிப நிலையங்களும், மீனாட்சி கோயில் திருப்பணிக்குத் தாராளமாக வழங்கினர். தமிழ் நாட்டில் இருக்கும் பிற கோயில்களிலுள்ள சேமிப்பு நிதியில் இருந்து அறநிலையப் பாதுகாப்பு ஆணையாளரின் உத்தரவுடன் அந்தந்தக் கோயில் நிர்வாகிகள் தங்களால் இயன்ற பெருந்தொகையை மதுரைக் கோயில் திருப்பணிக்குக் கொடுத்துதவினார்கள். மடாதிபதிகளுடைய நன்கொடைகளும் போதுமான அளவுக்குக் கிடைத்தன. இந்தியப் பேரரசினர் மீனாட்சி கோயில் திருப்பணிக்கு அளிக்கப்படும் பெருந் தொகைகளுக்கு வருமான வரி விலக்களித்துப் பேருதவி புரிந்திருக்கின்றனர்.

'ஐந்து ஆறு ஆண்டுகளுக்கு மேல் காலம் செலவழியும்' என்று நினைத்து மலைத்த திருப்பணி மூன்றே ஆண்டுகளில் செம்மையாகவும் ஒழுங்காகவும் நிறைவேறியதற்குக் காரணம் மீனாட்சியின் திருவருள் திறனாகவும், திருப்பணிக் குழுவினரின் நல்லெண்ணமாகவுமே இருக்க வேண்டும். திருப்பணிக் குழுத் தலைவரின் மகத்தான நம்பிக்கையும் முயற்சியும் பூரணமாக வெற்றி பெற்றிருப்பதை இதிலிருந்து நாம் அறிகிறோம்.

கோபுரங்களைப் புதுப்பித்தல், சுதை வேலை வண்ணப் பூச்சு, திருமதில்களைச் செப்பனிடுதல், தளங்களைச் சரிப்படுத்துதல் ஆகிய திருப்பணிப் பிரிவுகளில் மிக முக்கியமானதும் அதிக காலம் செலவழித்துச் செய்ய வேண்டியிருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டதுமாக இருந்தது கோபுரங்களைப் புதுப்பித்தலே. மீனாட்சிசுந்தரர் திருக்கோவிலின் நான்குபுற மதிற் கோபுரங்களும் மிகவும் பெரியவை. மதுரைக்கு அப்பால் பல மைல் தொலைவிலிருந்து பார்த்தாலும் தெரியக் கூடிய அளவுக்குத் திருமதிற் கோபுரங்கள் பெரியவை. 160 அடி உயரமும் 67 அடி அகலமும் 1511 சுதை உருவங்களும் உள்ள மிகப் பெரிய தெற்குக் கோபுரத்தை 14–9–1960ல் முதல் முதலாகத் திருப்பணிக்கு எடுத்துக்கொண்டு சுமார் 40,000 ரூபாய்க்குச் சவுக்கு மரங்கள் வாங்கிச் சாரம் கட்டியபோது, அந்தக் கோபுரத்தைப் புதுப்பிக்கும் வேலை, எப்போது முடியும், எப்படி முடியும் என்று திருப்பணிக் குழுவினருக்கு மலைப்பாக இருந்ததாம். இலட்சம் இடங்களில் கயிறுகளால் சவுக்கு

அன்று பிட்டுக்கு மண் சுமந்தார் சிவபெருமான்





மரங்களை இணைத்து ஆட்கள் மேலேறிச் சுதைகளைப் புதுப்பித்து வண்ணம் பூசும் போது ஏறி வேலை செய்த ஆட்களில் யாருக்கும் ஒரு சிறு காயம் கூட ஏற்படவில்லை என்பது முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது. ஏறிப் பார்த்தால் தலை சுற்றுமளவுக்குப் பெரிய கோபுரங்களின் உச்சியில் நின்று பணி புரிந்தவர்களில் எவருக்கும் உயிர் நட்டமோ, உடற் குறைவோ நேரவில்லை என்பதும் நினைத்துப் பெருமைப்படத் தக்க ஒன்றாகும். தெற்குக் கோபுரத் திருப்பணி வேலை முடிந்த பின்பே திருப்பணிக் குழுவினருக்கும், பணியாளர்களுக்கும் தாங்கள் செய்ய வேண்டிய மற்றக் கோபுரங்களின் பணிகளுக்கும் பிறவற்றிற்கும் எவ்வளவு காலமாகும் என்பதைப் பற்றி அநுமானமே செய்ய முடிந்தது. பின்பு அடுத்தடுத்து 154 அடி உயரமும் 63 அடி அகலமும் 1124 சுதை உருவங்களும் உள்ள மேலைக் கோபுரமும், 152 அடி உயரமும் 66 அடி அகலமும் 404 சுதை உருவங்களும் உள்ள வடக்குக் கோபுரமும் 153 அடி உயரமும் 65 அடி அகலமும் 1011 சுதை உருவங்களும் உள்ள கிழக்குக் கோபுரமும் நாளடைவில் புதுப்பிக்கப்பட்டு வண்ணம் பூசப்பெற்றன. இவை தவிர உட்புறத் திருச்சுற்றுக்களில் உள்ள சிறிய நிலைக் கோபுரங்களும் திருப்பணி செய்யப் பெற்றிருக்கின்றன. திருப்பணி முடிந்து மகா கும்பாபிஷேகத்துக்குத் தயாராயிருக்கும் இந்த நிலையில் நகரின் எந்தப் பகுதியிலிருந்து பார்த்தாலும், நகருக்குள்ளே வருகிற எந்தச் சாலையிலிருந்து பார்த்தாலும் திருமதிற் கோபுரங்கள் கண் கொள்ளாக் காட்சியாய்த் தெரிந்து கவர்ந்து இழுக்கின்றன. மதுரையே இப்போது தெய்விக மானதோர் புதுமையாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது. மதுரை நகரம் தாமரைப் பூவைப் போல் அழகுற அமைக்கப்பட்டிருப்பதாகவும் தாமரைப் பூவின் நடுவில் உள்ள 'பொகுட்டை'ப்போல் நகரின் நடுமையமாகக் கோயில் அமைந்து இருப்பதாகவும் பரிபாடல் என்ற சங்க இலக்கியத்தில் ஒரு பாட்டுக் கூறுகிறது. மீனாட்சிசுந்தரர் திருக்கோயிலையும் மதுரையையும் தனித் தனியே பிரித்து நினைக்கக்கூட முடியாது. பல்லாண்டு பல்லாண்டுகளாக மதுரை நகரின் வீதிகள் எல்லாம் இந்தக் கோவிலையும் இதனுடைய திருவிழாக்களையும் வைத்தே பெயரிடப்பட்டு அமைக்கப்பெற்று வருகின்றன. ஆடி வீதி, சித்திரை வீதி, ஆவணி மூல வீதி, மாசி வீதி என்று கோவில் திருவிழாக்களாலேயே பெயர் பெற்ற வீதிகள் மதுரையில் உள்ளதை யாவரும் அறிவார்கள். வீதிகளின் இந்தப் பெயர்களாலும் மதுரையைக் கோயில் நகரம் என்றழைக்க வேண்டிய பொருத்தம் இருக்கிறது. தலைமுறை தலைமுறையாக மதுரை மீனாட்சி சுந்தரர் திருக்கோயில் பல வகையாலும் ஓர் ஆன்மீகப் பல்கலைக் கழகமாக விளங்கி வருகிறது. அந்த அருள் பண்ணையிலே இல்லாத வளங்கள் எதுவும் இல்லை. ஆலயத்தைச் சுற்றி உள்ள நான்கு ஆடி வீதிகளிலும் திருவள்ளுவர் கழகம், திருப்புகழ்ச்





**...கும்பாபிஷேகத்தை யொட்டித் தட்டுக்கு மண் சுமக்கிறார்கள் இங்கே**

சபை, தேவாரப் பாடசாலை, கோயில் நூல் நிலையம், பன்னிரு திருமுறை மன்றம், தெய்வ நெறிக்கழகம் போன்ற நிறுவனங்கள் அறநெறிக்கும் சமய உணர்வு பெருகுவதற்கும் பாடுபட்டு வருகின்றன.

தமிழ் நாட்டுக் கலைகளுக்கும் பண்பாட்டுக்கும் சமய உணர்ச்சிக்கும் இறை உணர்ச்சிக்கும் ஆன்மீக லட்சியமாக விளங்கிவரும் பெரிய ஆலயங்களில் முதன்மையானதாக விளங்கி வரும் மீனாட்சி சுந்தரர் திருக் கோயிலில் நாளது ஜூன் 28ந் தேதி வெள்ளிக் கிழமை காலை மாபெரும் கும்பாபிஷேக வைபவம் கோலாகலமாக நடைபெறவிருக்கிறது. இக் கும்பாபிஷேகத்துக்கு நம்முடைய குடியரசுத் தலைவர் டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் வந்திருந்து மீனாட்சி சுந்தரர் இருவருக்கும் பாத்திரமாகப் போகிறார். மகா கும்பாபிஷேகத்துக்கு முன் தினமாகிய 27-6-63 அன்று மாலையில் திருப்பணி வேலைகளைச் சுற்றிப் பார்த்த பின் திருப்பணிக் குழுவின் முதல்வருடைய தலைமையில் கோயில் கல்யாண மண்டபத்தில் நடைபெறும் மாபெரும் கூட்டத்தில் குடியரசுத் தலைவரவர்கள் கும்பாபிஷேக வைபவத்தை வைதிகமாகத் தொடங்கி வைக்கிறார்கள். மேற்கு நாடுகளில் இந்தியாவின் நல்லெண்ணத்தைப் பரப்புவதற்குச் சுற்றுப் பயணம் செய்து விட்டுத் திரும்பியவுடன் மீனாட்சி சுந்தரர் தரிசனத்தையும் பெற நேரிடுவது அவர் செய்த பெரும் பாக்கியமே. பாரதப் பண்பாட்டுக்கும் இலக்கிய ஆன்மீக இலட்சியங்களுக்கும் சிறந்த உருவகமாக விளங்கி வரும் டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் மதுரை நகருக்கு விஜயம் செய்து மீனாட்சி சுந்தரர் திருக்கோயிற் கும்பாபிஷேகத்திலும் கலந்துகொள்கிறார்கள் என்பதற்காகத் தமிழ் மக்களும் ஆத்திகப் பேரன்பர்களும் தாராளமாகப் பெருமைப்படலாம். அருளாலயமாகிய மீனாட்சிசுந்தரர் திருக்கோயிலைத் தரிசித்து மகிழ வருகிற குடியரசுத் தலைவர் தமிழாலயமாகிய பழம் பெரும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தையும் பார்வையிடுவாரெனத் தெரிகிறது.



திரு பி. டி. இராஜன்

கண்கண்ட பெரு முனிவராகவும் தெய்வ நெறிச் செல்வராகவும் விளங்கி வரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சங்கராச்சாரிய சுவாமிகள் கும்பாபிஷேகத்துக்கு விஜயம் செய்து முன்னின்று நடத்தித் தரப் போகிறார்கள்.

மதுரை மீனாட்சி சுந்தரர் திருக்கோயில் சீதளப் புத்தகத்தில் உள்ள குறிப்புக்களின்படி கி. பி. 1708 சர்வதாரி வருடம் சித்திரை மாதம் 31-ந் தேதி சொக்கநாதருக்கு அட்டபந்தனக் கும்பாபிஷேகம் நடைபெற்ற பின்பும் 1887, சுகவர வருடம் தை மாதம் 27ந் தேதி ஏழு கோயில் நகரத்தார்கள் நடத்திய கும்பாபிஷேகத்துக்குப் பின்பும், 1923 ஜூலையில் அதாவது ருத்ரோத்காரி வருடம் ஆனி மாதம் 17-ந் தேதி நடைபெற்ற அட்டபந்தனக் கும்பாபிஷேகத்துக்குப் பின்பும் இப்போது நாளது 1963 ஜூன் 28ந் தேதி நடைபெறுகிற இந்த வைபவமே நம் தலைமுறையில் நிகழ்கிற மாபெரும் திருப்பணியும், மாபெரும் கும்பாபிஷேகமும் ஆகும். கோலாகலமாக நடைபெறுகிற இந்தக் கும்பாபிஷேகத்துக்காக மீனாட்சி சுந்தரர் திருக்கோயிலில் உள்ள ஐந்நூறு விக்கிரகங்களுக்கு மருந்து சாத்துகிறார்கள். நவகுண்டங்கள் இரண்டும் பஞ்சகுண்டங்கள் பன்னிரண்டும் ஏக குண்டங்கள் முப்பத்திரண்டும், ஸ்நபனங்கம் நான்குமாக யாகசாலை ஏற்பாடாகியிருக்கிறது. சுமார் இருநூற்றைம்பது சிவாச்சாரியார்களும், நூறு வேத வித்தகர்களும் ஐம்பது ஓதுவார்களும், மந்திரமும் தமிழ்ப் பாட்டும், மறை முழக்கமும் செய்து ஆலயத்தின் எல்லையெல்லாம் தெய்விகம் முழங்கும்படி செய்யப்போகிறார்கள். ஆறு முழு நாட்களில் பத்துக் காலங்களாக வேலை பிரிக்கப்பட்டு யாகசாலை நடைபெறவிருக்கிறது. யாகசாலை அலங்காரம், பரிவாரம், பிரதானம், கட்டிட வேலை, தச்ச வேலை, ஒளி ஏற்பாடுகள் எல்லாம் மிக நன்றாக அமைக்கப்பட்டிருக்கின்றன. யாகசாலை நடைபெறும் ஆறு நாட்களில் ஒவ்வொரு நாளும் ஒரு லட்சம் மக்களுக்குக் குறையாமல் தரிசனத்துக்கு எதிர்பார்க்கப்படுகிறார்கள். ஆறு நாட்களிலும் சேர்த்து மொத்தம் ஐந்து லட்சம் மக்களுக்குக் குறை



மதுரைக் கல் பாலத்தருகிலுள்ள வைகையாற்று மைய மண்டபம்

யாமல் தரிசிக்க வருவார்கள் என முன்பே எதிர்பார்த்து அதற்கான ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்கின்றன. கும்பாபிஷேகம் நடை பெறும் காலையில் கோபுரங்களைத் தரிசிப்ப தற்காகக் கோயில் மேல் தளத்தின் மேல் முப்பத்தையாயிரம் பேர் வரை நின்றிருந்து தரிசனம் செய்ய இட வசதி ஏற்பாடு செய் திருக்கிறார்கள். மக்களின் நன்மைக்காகவும் எல்லாரும் தரிசனம் செய்ய வழி ஒழுங்கு செய்வதற்காகவும் போலீஸ் பாதுகாப்பு அதிகமாக இருந்தாலும் அவர்களால் கோயிலுக்கு வருகிறவர்களுக்கு யாதொரு இடையூறும் இருக்காது என்று திருப்பணிக் குழுவினர் உறுதி கூறியிருக்கிறார்கள். கும் பாபிஷேக நிகழ்ச்சிகளைத் திருச்சி வானொலி நிலையத்தாரும், இலங்கை வானொலியினரும் விளக்கவுரையோடு ஒலிபரப்பி நேரில் வந்து காண முடியாத பல்லாயிரம் மக்களுக்குச் செவி வழியே திருவருட் பயனை அடைவிக்கப் போகிறார்கள். இவ்வளவு கோலாகலமாக நடைபெறும் இந்தத் திருப்பணியும் கும்பாபி ஷேகமும் பிற்காலத்தில் தமிழகத்தில் நடக்க இருக்கும் பல பெரிய திருப்பணிகளுக்கும், கும்பாபிஷேகங்களுக்கும் முன் மாதிரியாக இருந்து வழிகாட்டும் என்று யாவரும் ஒப்புக் கொள்ளுவார்கள்.

'செயற்கரிய செய்வர் பெரியர்' என்ற வார்த்தைகள்தாம் எவ்வளவு பொருத்தமா யிருக்கின்றன? இவ்வளவு பெரிய கோபுரங் களையும், கோயிலையும் எந்தக் காலத்தில் யார் எவ்வளவு செலவழித்து எப்படிச் செப்பனிடு வது என்று எவர் நினைத்தாலும் மலைப்பையும் திகைப்பையும் தரக்கூடிய காரியத்தை மூன்றே ஆண்டுகளில் வெற்றிகரமாகச் செய்திருக்கிறார் திரு. பி. டி. இராஜன் அவர்கள். இந்தப் பெரிய சாதனையை எண்ணும்போது,

''சிறந்த பூசைக்கும் திருவிழாச்
சிறப்புக்கும் செல்வம்

நிறைந்த ஆலயத் திருப்பணித்
திறத்துக்கு நிரப்பி

அறந்த வாதபேர் அன்பர்க்கும்
செலுத்தி அந்நலத்தே

உறைந்(து) அவாவற இன்னணம்
ஒழுகுநாள் கழிப்பார்.''

என்று பரஞ்சோதி முனிவர் திருவாதவூரடி களைப் புகழ்ந்திருக்கும் புகழ்ச்சிதான் நினைவு வருகிறது. தமிழ்ப் பெருமக்களின் சார்பில் திரு. இராஜனவர்களைப் பாராட்டி அவருக்கு மீனாட்சிசுந்தரர் திருவருள் பெருகி மேலும் மேலும் இது போன்ற பெரிய சாதனைகளைச் சாதிக்கும் ஆற்றலை நல்க வேண்டுகிறோம்.

பல ஆண்டுகளுக்குப் பின்பு நேரும் தெய் விகத் திருவிழாவாகிய இந்த மகா கும்பாபி ஷேகத்தினால் விளையும் கோலாகலத்தை மதுரைவாசிகள் மட்டுமே அனுபவிக்கும்படி விட்டுவிடாமல் தமிழ் நாட்டின் எல்லாப் பகுதி மக்களும் வந்திருந்து உலக நாயகியாகிய




**அடுத்த இதழில்:**

மறக்க முடியாத திரைப் படங்கள்:

சேவாஸதனம்

★

கல்லூரிக் கதம்பம்

★

விம்பிள்டன் வரேளா ?

★

ஆட்சிமொழி — கருத்தரங்கம்

பங்கு கொள்வோர்:

பி. சிவராவ்

சா. கணேசன்

டாக்டர் கார்வே

மீனாட்சியின் திருவருளுக்குப் பாத்திரமாகு மாறு வேண்டுகிறோம்; 'சேர வாரும் செகத் தீரே' என்று தமிழ்ப்பெருமக்கள் எல்லோரை யும் மதுரைக்கு அழைக்கிறோம்.

ஃ ஃ ஃ

சர்வேசுவரியாகிய அம்பிகை தமிழ் மக ளாகப் பிறந்து, மயானருத்திரனைக் கலியாண சுந்தரனாக்கித் தன்னை மணக்குமாறு செய்து, மாயனாகிய மாலவன் தன்னைக் கன்னிகா தானம் செய்யுமாறு அழைத்து அற்புதம் நிகழ்த்திய புனித நகரம் மதுரை. இவ் வாரம் மதுரையில் நடக்கவிருக்கும் கும்பாபி ஷேக வைபவத்தில் பங்கு கொள்ளுவோர் களெல்லாம் பல யுகங்களுக்கு முன் நடை பெற்ற மீனாட்சி சுந்தரேசுவர விவாக வைப வத்தையும் நினைவுகூர்ந்து மதுரையம்பதியின் மஹாத்மியத்தை வணங்க வேண்டுமென்பதற் காக அந்தப் புனிதப் பெரு நிகழ்ச்சியை இவ்விதழ் அட்டைச் சித்திரத்தின் வாயி லாகக் குறிப்பால் உணர்த்துகிறோம்.

# அமிர்தாஞ்சனம் இப்போழுது புதியதோரு சிக்கன உறையில் கிடைக்கிறது




நாட்டின் சக்திகள் எல்லாம் தற்போது தேசப் பாதுகாப்பிற்காகத் தேவைப்படுகிறது. இக் காரணத்தினால் அமிர்தாஞ்சனம் பாக்கிங்கில் ஓரிரண்டு சிறு மாறுதல்கள் ஏற்படுத்தியுள்ளோம். இதுவரை வெள்ளிய டப்பாவில் பாக் செய்யப்பட்டு வந்த அமிர்தாஞ்சனம் சீசா இனி சாதாரண அட்டைப் பெட்டியில் பாக் செய்யப்படும். மேலும், சீசாவினுள்ளே இருக்கும் அமிர்தாஞ்சனத்தின் இரட்டிப்பு பாதுகாப்புக்காக 'அலு-காப்' ஸீல் செய்யப்பட்டுள்ளது. ■ தலைவலி, சுளுக்கு, மார்பில் ஜலதோஷம், கீல் வாயுவினால் ஏற்படும் வலிகள் மற்றும் எல்லா விதமான வலிகளையும் அமிர்தாஞ்சனம் போக்குகிறது. இந்த உபாதைகள் உங்கள் உடல் நலனை பாதிப்பதனால் தொழில் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. ஆகவே தொழில் உற்பத்தியைப் பெருக்கவேண்டிய இந் நிலையில் எப்போதையும்விட அமிர்தாஞ்சனம் இன்று அதிகமாகத் தேவைப்படுகிறது.

**அதிக சக்திவாய்ந்தது, சிக்கனமானது, பல உபாதைகளுக்கு சிறந்தது**

இன்று விற்பனையாகும் வலி நிவாரணிகளுள் அமிர்தாஞ்சனம் குறிப்பிடத்தக்க குணாதிசயங்களுடன் கூடியது. ஏனெனில், மற்ற மருந்துகளைவிட இதில் அதிக சக்தி வாய்ந்த மூலிகை சத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ■ அமிர்தாஞ்சனத்தின் இக் கூடுதலான சக்தி, சருமத்தினுள் உடனடியாக ஊடுருவிச் சென்று, ரத்த ஓட்டத்தை ஊக்கப்படுத்துவதன் மூலம் சீக்கிரத்தில் குணமளிக்கிறது. சிறிதளவு அமிர்தாஞ்சனமே வலிகளை அகற்றப் போதுமானது. வீட்டில் அனைவரும் உபயோகப்படுத்தும்போதுகூட ஒரு பாட்டில் அமிர்தாஞ்சனம் பல மாதங்களுக்குவரும்.




## அமிர்தாஞ்சனம்

உபாதைகளிலிருந்து
உங்களைப் பாதுகாக்கிறது

அமிர்தாஞ்சன் லிமிடெட், 14/15 லஸ் சர்ச் ரோடு, மதராஸ்

JWT/AM-2273A





அமெரிக்காவிலிருந்து பிரிட்டனுக்கு ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் கௌரவ விருந்தினராக விஜயம் செய்தபோது அவருக்குக் கோலாகலமான வரவேற்புக்கள் நடைபெற்றன. 1. காட்விக் விமான நிலையத்தில் டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கு அளிக்கப்பட்ட ராணுவ மரியாதை. 2, 3. பிரசித்தி பெற்ற லண்டன் வீதிகளிலே பாரத நாட்டின் ராஷ்டிரபதியும் பிரிட்டிஷ் ராணி இரண்டாம் எலிஸபெத்தும் ஊர்வலம் வரும் காட்சி. 4. எடின்பரோ சர்வ கலாசாலை நமது ராஷ்டிரபதிக்குக் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கியது. 5. லண்டனிலுள்ள வெஸ்ட்மின்ஸ்டர் அபேயிலுள்ள விருந்தினர் புத்தகத்தில் கையெழுத்திடுகிறார்.

6. இமாலய சிகரத்தை வென்ற அமெரிக்க கோஷ்டியினர் பாரதப் பிரதமர் நேருஜியைக் கண்டு தங்கள் மரியாதையைத் தெரிவித்துக் கொண்டனர். 7. நேருஜி தம் சென்னை விஜயத்தின்போது ஆர்க்காட்டு நவாபைத் திருவல்லிக்கேணியிலுள்ள அமீர் மஹாலில் சந்தித்து அளவளாவினார்.



# முதல் மூவர்

ராஜாஜி-சோமு

## 12

இதுவரை பொய்கையாழ்வார் பாடிய சில பாடல்களைப் பார்த்தோம். இனி பூதத்தாழ்வார் பாடல்கள்:

> அன்பே தகளியா
> ஆர்வமே நெய்யாக
> இன்புருகு சிந்தை
> இடுதிரியா — நன்புருகி
> ஞானச் சுடர்விளக்கு
> ஏற்றினேன் நாரணற்கு
> ஞானத் தமிழ்புரிந்த
> நான் !

என்று முதலில் பாடிய பூதத்தாழ்வார், திருமாலுடைய திருவடிகளைத் தரிசனம் பெறுவது எப்படி என்று பாடுகிறார்:

> அறிந்துஐந்தும் உள்ளடக்கி
> ஆய்மலர்கொண்டு ஆர்வம்
> செறிந்த மனத்தராய் —

[ அறிந்து – குணதோஷங்களை அறிந்து. பூரண ஞானம் பெற்று. ஐந்தும் உள்ளடக்கி— ஐந்து புலன்களையும் உலக இச்சைகளிலே செல்லாதவாறு அடக்கி. ஆய்மலர் கொண்டு— பூஜைக்கென்று தேடி யெடுத்த மலர் கொண்டு. ஆர்வம் செறிந்த மனத்தராய்— பக்தி நிறைந்த மனம் உடையவர்களாய். ]

> செவ்வே—அறிந்துஅவன்தன்
> பேர்ஓதி ஏத்தும்
> பெருந்தவத்தோர்

[ செவ்வே அறிந்து – பொருள் உணர்ந்து. அவன் தன் பேர் ஓதி – அவனுடைய திருநாமங்களைச் சொல்லி. ஏத்தும் பெருந்தவத்தோர்— துதி செய்கிற புண்ணியசாலிகள். ]

> பேரோதி ஏத்தும்
> பெருந்தவத்தோர் காண்பரே
> கார்ஓத வண்ணன்
> கழல்.

[ கார் ஓத வண்ணன்—கரிய கடல் வண்ணன். ஓதம் – ஒலிக்கும் கடல். கார் – கரிய. கழல் – திருவடி. ]

பாவ புண்ணியங்களை ஆராய்ந்து அறிந்து, இந்திரியங்களை வெளியே திரிய விடாமல் அடக்கி, தேர்ந்தெடுத்த மலர் கொண்டு எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி அர்ச்சித்துத் துதிப்பவர்கள், கடல் நிறக் கடவுளுடைய திருவடிகளின் உண்மைத் தரிசனத்தைப் பெறுவார்கள், சந்தேகமில்லை.

> அறிந்துஐந்தும் உள்ளடக்கி
> ஆய்மலர்கொண்டு ஆர்வம்
> செறிந்த மனத்தராய்ச்
> செவ்வே—அறிந்துஅவன்தன்
> பேர்ஓதி ஏத்தும்
> பெருந்தவத்தோர் காண்பரே
> கார்ஓத வண்ணன்
> கழல் !

இறைவனின் அருளைப் பெறுவதற்கு மார்க்கம், அவனுடைய திருவிக்கிரகத்துக்குப் பக்தியுடன் பூஜை செலுத்துவதே என்கிறார்.

# நகையில் நாகரீகம்

புகழ்பெற்ற சினிமா நட்சத்திரம் நஸீம் பானு கூறுகிறார் :

நேர்த்தியான நகைகளைக் கண்டு மகிழாத பெண்களை உலகில் காணவே முடியாது. தான் அணியும் ஆபரணங்கள் தனிப்பட்ட கவர்ச்சியுடன் இருக்க வேண்டுமென்று விரும்பாத ஆரணங்கையும் காண முடியாது ; தான் நவநாகரீக மனப்பான்மை உள்ளவள் என்பதைக் காட்டிக்கொள்ள விரும்பாத நாரீமணியையும் காணமுடியாது.




அழகை விரும்பும் பெண்களுக்குப் புதிய ரக "ஜோதி" பிளாஸ்டிக், கண்ணாடி வளையல்களையும் "ஸன்ஷைன்" தயாரிப்பான கண்ணைப் பறிக்கும் கல் பதித்த நகைகளையும் அணிந்து கொள்ளும்படி நான் சிபாரிசு செய்கிறேன். தன் அழகுக்கு அழகு செய்துகொள்ள விரும்பும் எல்லாப் பெண்களும் வாங்கும்வண்ணம் விலை குறைவாயிருக்கிறது !"

**ஜோதி மெட்டலைஸிங் கார்ப்பொரேஷன்**
உத்யோக் பவன், 250-D, வொர்லி, பம்பாய்-18


மிஸ்டர் தனபால்! ஜெயராமனின் இரண்டாவது உயிலை மோசக் கருத்துடன் கைப்பற்றிய குற்றத்துக்காகவும், கடந்த காலக் கொலை வழக்கில் ஏற்பட்டுள்ள புதிய திருப்பத்தின் படி தங்கள் மீது கொண்டுள்ள சந்தேகத்துக்காகவும் உங்களைக் கைது செய்ய உத்தர...
சந்திரனே சாட்சி
28
கதை
கௌசிகன்
சித்திரம்


இது அக்கிரமம்! அநீதி! என்றோ நடந்து முடிந்து போன ஒரு விஷயத்தை இத்துடன் கொண்டு வந்து இணைப்பது முறையல்ல.


கொலை என்றோ நடந்தது தான். ஆனால் அதை முடிந்து போன வழக்காக எப்படிச் சொல்வது? இந்தச் சொத்துரிமை வழக்கில் கூடத்தான் நடந்த அன்று இந்த நீதி மன்றம் தீர்ப்பளித்தது. ஆனால் இன்றைய நிலையில்? உண்மைக் குற்றவாளிகள் கண்டு பிடிக்கப்படும் வரை எந்த வழக்குமே முடிந்ததாகாதே.


குறிப்பிட்ட வழக்கில் தண்டனை பெற்ற ரகுநாதன் சிறையிலிருந்து தப்பிச் சென்று பல வருஷங்களாகியும் இன்னும் கண்டு பிடிக்கப் படவில்லை என்பது கனம் நீதிபதி அவர்களுக்குத் தெரிந்திருக்குமென்று நினைக்கிறேன்.
அவ்வளவும் ரகுநாதன் நிரபராதியா இல் சிறையிலிருந்து தப்பியோட முயன்று போவானேன்?


உண்மைக் குற்றவாளி உல்லாச வாழ்க்கை நடத்த, நிரபராதியான தான் தண்டனை அனுபவிக்க நேர்ந்ததே என்ற தாபத்தினால் தப்பி யோடியிருக்கலாம்
தாபத்தினால் தாக்குண்டு தப்பி யோடிய வாறே இருக்கட்டுமே தெரியாத போது வழக்கை யாருக்காக எப்படி நடத்திப் போகிறார் இந்த வக்கீல்?


ரகுநாதன் இருக்கிறான்! எங்கே? சிறை யிலிருந்து தப்பியோ டிய குற்றத்துக்காக அவனை யல்லவா முதலில் கைது செய்ய வேண்டும்


அந்தக் கவலை உங்களுக்கு வேண் டாம். அவர் தற்போது அரசாங் கத்தின் பாதுகாப்பில் தான் இருக்கிறார். ஆனால் இங்கு ஆஜராகும் நிலையில்லை. ஆஸ்பத்திரியில் தீவிர


கனம் கோர்ட்டார் அவர்களே இந்தப் புதிய வழக்கை ஆரம் பிக்குமுன் நான் எனது கட்சிக் காரருடன் கலந்து கொள்ள அவகாசம் வேண்டும். ஆகவே அவரை ஜாமீனில் விடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.
ஜாமீனில் செல்ல லாம். ஆனால் வழக்குமுடி யும் வரை உங்கள் கட்சிக் காரர் இந்த ஊரை விட்டு எங்கும் போகக் கூடாது. தினமும் போலீஸ் ஸ்டேஷ னில் தன்னை ஆஜர்ப் படுத்திக் கொள்ள வேணும்.


தீர்ப்புச் சொல்லவில்லையே தவிர வழக்கின் முடிவு உங்க ளுக்குச் சாதகமாகவே இருக்கும்.
என்மீது கற்பிக்கப்பட்ட மாசு நீங்க விரும்பினேன். அதற்காக பாடுபட்ட உங்களுக்கு நான் மிகவும்...


அதற்குள் நன்றி செலுத்தி விடாதீர்கள் ஜெனி யம்மா! உங்கள் மாமாவின் மீது சுமத்தப்பட்டுள்ள கொலைகாரன் என்ற பழியை அழிப்பது தான் எங்கள் முக்கிய வேலை. அதில் அடையும் வெற்றிதான் வெற்றி!


என் அண்ணா ரகுநாதன் உயிரோடு இருப்ப தாகச் சொன்னீர்களே, நிஜமாகத்தானா?
அவர் இல்லாவிடில் நாங்கள் இங்கு வந்தி
ருக்கவே மாட்டோம். உங் கள் அண்ணனின் கதையைக் கேட் டிருக்க மாட்டோம். இந்த வழக்கை நடத்தி இருக்கவும் மாட்டோம்!


கிணறு வெட்டப் பூதம் புறப் பட்ட கதையாக ஆகிவிட் டதே மிஸ்டர் தனபால்.
பூதமுமில்லே பூசணிக் காயுமில்லே வக்கீல் சார்! அந்த கொள்ளைப் பயலைக் கொண்டு வந்து இந்தக் கேசை ஜெயிச்சப்புறமே இந்த வழக்கையும் அவ மா ஜெணச்சிட்டாறுவ. நீங்க வேறப் பாருங்களேன்


தனபால், என்னிடம் நீங்க மனம் விட்டுப் பேசணும். அந்த ரகுநாதன் வழக்கின் ஒரு பக் கம் எனக்குத் தெரியும். அதன் மறு பக்கத்தைப் பற்றி எதையும் மறைக்காமல் என்னிடம் விவ ரிக்க வேண்டும்.
மறுபக்கமாவது மண்ணாவது. ஒன்று மறைவுக்கே அதிலே ஒன்றுமில்லீங்க. நீங்க அழச்சு 'ஆர்க்யு' பண்றதிலே தான் இருக்கு.


அது சரி அந்த வழக்கில் முக்கியமான சாட்சிகளில் இப்போ யார் யார் இருக்காங்க? சிலரை எனக்குத் தெரியும். அவனாலே நமக்குப் பயன் இல்லே. கொலையுண்ட துரை சாமியோட வேலைக்காரன் கானியப்பன் என்ன ஆனான்?


நாலைந்து வருஷங்களுக்கு முன்னாலே அவனுக்குப் புத்தி மாறாட்டம் ஏற்பட்டது. அவ னைக் கிராமத்துக்குக் கூட்டிப் போனாங்க. அது தான் தெரியும். அப்பவே அவன் மோசமாகத் தான் இருந்தான். இப்போ எப் படியோ?
ஆனதை விசா ரித்துப் பாருங்க.


அடடே! சிவகாமியம்மாளா! வாங்க. நானே உங்களைப் பார்க்க வர இருந்தேன்.
அன்றைக்கே உண்மையைச் சொல்லி இருந்தால் உங்களுக்கு உதவியாக இருந்திருப்பேனே.


அதனால் என்ன? உங்கள் உதவி இன் றைக்கும் தேவைதான்!
ரகு எப்படி இருக்கிறார்? ஆஸ்பத்திரியிலிருந்து வந்ததாகச் சொன்னீர்களே.
ஆமாம், அதனால் பயமொன்றுமில்லே.


இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவங்கள் எதையும் நீங்கள் மறந்தி ருக்க மாட்டீர்களே!
மறக்கவா? என் வாழ்நாள் பூராவும் மறக்க முடியாத சம் பவமாயிற்றே அது...

தொடரும்

---

# ஈறு உபாதைகள் மற்றும் பற்சிதைவு போர்ஹான்ஸ் பற்பசையினால் வெற்றிகரமாக முறியடிக்கப்படுகின்றன

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் * இவற்றை நிரூபிக்கின்றன.

* இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.



தங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த 20 வருடங்களுக்கு மேலாக உபயோகித்துவருவதால், எனக்கு இன்று 65 வயதும் 5 மாதங்களும் ஆகியும் என்னுடைய 32 பற்களும் இன்னமும் வலுவுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கின்றன. காரணத்தினால் நான் எவ்விதமான பற்கோளாறிலும் அவதிப்பட்டதில்லை.

டி. என். டி.
அல்வாய்

எனக்கு போர்ஹான்ஸினால் ஏற்பட்ட நல்ல பலனைக் கண்டபின் இப்போது என் குடும்பத்தில் எல்லோரும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள். அதற்கு முன்னால், நான் எப்பொழுதும் பல்வலி மற்றும் ஈறு உபாதையால் அவதிப்பட்டு வந்தேன். இப்போது போர்ஹானின் பயனாக, என் பற்கள் வெண்மையாகவும், உறுதியாகவும் ஈறுகள் வலுவாகவும் இருக்கின்றன. பலவருடங்களாகவே எனக்கு ஈறுகளில் புண் ஏற்பட்டதில்லை. அப்பப்பா! நான் வேறெந்தப் பற்பசையை உபயோகிப்பதாகக் கனவுகூடக் காணமாட்டேன்.

ஜி. என். டில்லி.




**போர்ஹான்ஸ்**

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.

என்னுடைய பற்களின் வெண்மைக்கும், ஒளிக்கும் நான் ரொம்ப நாட்களாகவே உபயோகித்து வரும் போர்ஹான்ஸ் பற்பசைக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். நான் 27 வயதுள்ள இளைஞன், வெற்றிலே, பாக்கு மற்றும் புகையிலை உபயோகிக்கிறேன். புகையிலைபோடுவதால் பற்களில் கறையும், பழுப்பும் ஏற்படுகின்றன என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் போர்ஹான்ஸ் பற்பசை மந்திரஜாலம்போல, என் பற்களில உள்ள கறையைப்போக்கி, அவற்றை வெண்மையாகவும், ஒளி வீசும்படியும் இருக்கச் செய்கிறது.

பி. பி பங்களூர்.

இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு,

**போர்ஹான்ஸ் டிவின்-ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்.**

- இந்த டூத் பிரஷ் மட்டுமே உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு, ஈறுகளையும்
- இதமாகத் தடவிக்கொடுக்கிறது.



T 32 A. TAM

# அறிவுப்பசிக்கு ஆங்கிலம்

டாக்டர் ஸி.பி.ராமஸ்வாமி அய்யர்



[டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யரின் கட்டுரைகளில் பொருட்சுவையும் சொற்சுவையும் நிரம்பியிருக்கும். எந்த விஷயத்தைப் பற்றியும் அறிவுப் பிரகாசத்துடனும் அநுபவ முதிர்வுடனும் எடுத்துச் சொல்லும் ஆற்றலும் திறனும் உள்ளவர் அவர். பல பல்கலைக் கழகங்களில் துணை வேந்தராகப் பணியாற்றியுள்ள டாக்டர் ஸி. பி. ஆங்கிலத்தின் சிறப்பையும் அவசியத்தையும் பற்றி மிகுந்த ஆராய்ச்சிக்குப் பின் ஆணித்தரமாக விளக்குகிறார்.—ஆசிரியர்]

**பிரதேச மொழிகள் : புராதனமானவை**

'மொழிப் பிரச்னை' என்று சொல்லப்படுகிற விஷயத்தைக் குறித்துச் சென்ற சில ஆண்டுகளில் வெளியாகியுள்ள பேச்சுக்களிலும், கட்டுரைகளிலும் பெரும்பாலானவை உணர்ச்சியின்மீதே உருவாகியுள்ளன. இவற்றில் பல தீவிரமான கட்சி நோக்கத்தில் பிறந்தவை. இதன் விளைவாக, பிரதேச மொழிப் பிரச்னை, இந்தியக் குடியியலில் ஹிந்திக்குரிய இடம், கல்வி, பண்பாடு, நிர்வாகம் இவற்றில் ஆங்கிலத்துக்குரிய ஸ்தானம் ஆகியவை விருப்பு வெறுப்பின்றி மனப் பற்றில்லாமல் மதிப்பிடப்படவில்லை. நான் இவ்விஷயத்தில் பூரணமாக மனப் பற்றுக்கள் இல்லாதவன் என்றோ, குறிப்பிட்ட ஒரு கொள்கையைத் தீவிரமாகப் பின்பற்றாதவன் என்றோ உரிமை கொண்டாடவில்லை. இருந்தாலும் இந்தக் கட்டுரையில் என்னாலியன்ற அளவுக்குப் பாரபட்சமின்றிச் சில அம்சங்களைப் பொது மக்களுக்கு அளிக்க முயல்கிறேன்.



முதலாவதாக, தென்னிந்தியாவில் உள்ள நமக்கும் சரி, பாரதத்திலுள்ள யாருக்குமே சரி, அவரவர் தாய்மொழியை அல்லது பிரதேச மொழியைச் சிறுவர், சிறுமியரது ஆரம்பப் பருவத்திலிருந்து கற்பிக்க வேண்டும் என்பதில் எந்த மாறுபட்ட கருத்தும் கிடையாது. நமது பிரதேச மொழிகள் அவ்வளவு பழைமையும், பெருமையும் வாய்ந்தவை. ஆந்திர இலக்கியம் தோன்றிக் குறைந்தபட்சம் ஆயிரம் ஆண்டுகளேனும் ஆகின்றன. கன்னட இலக்கியம் இதைவிடப் பழைமையானதாகக் கருதப்படுகிறது. எகிப்தில் ஆக்ஸிரிந்தஸ் என்ற இடத்திலுள்ள கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த 'பேபிரிஸ்' சின்னங்களில் கண்டெடுத்த கிரேக்க மொழி நாடகமொன்றில் கன்னட மொழிப் பதங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. பழந் தமிழ் மொழியிலிருந்து விருத்தியான மலையாளம் அம்மொழியுடன் பொதுவான ஒரு மரபைப் பெற்றிருந்து, பதின்மூன்று அல்லது பதினான்காம் நூற்றாண்டிலிருந்து தனி வாழ்வு பெற்று விளங்குகிறது. தமிழ் இலக்கியத்தைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அது ஒப்பில்லாதது. குறைந்தபட்சம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அது ஒரு தனிப்பட்ட பண்பாட்டு மரபை வளர்த்துள்ளது. கிறிஸ்து சகாப்தத்துக்கு மிகவும் முன்பிருந்தே தமிழ்ச் சங்கங்கள் மகோன்னதமான இலக்கியத்தைப் படைத்துள்ளன.

**ஹிந்தி : குழந்தை மொழி**

இது ஒரு புறம். மற்றொரு புறம் ஹிந்தி. தரமான ஹிந்தி என்று கருதப்படுவதும், தில்லியில் பேசப்படுவதுமான 'கரிபோலி' தனது தனி வாழ்வை, தனக்கென்று குறிப்பான அம்சங்களுள்ள வாழ்வை, பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் தொடங்கிற்று. இது மறுக்க முடியாத உண்மையாகும். இதற்கு முன் 'வ்ரஜ பாஷை'யிலும் 'புந்தேலி'யிலும் இலக்கியம் இருந்தது. பதினான்காம் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையுள்ள ஹிந்தி இலக்கியம் வ்ரஜ பாஷையைச் சேர்ந்ததே என்றும் சூர்தாஸ், பூஷணர் முதலிய மகா கவிகள் இந்த மொழியில்தான் கவிதை இயற்றினர் என்றும் தேர்ந்த அறிஞர்கள் கூறுகின்றனர். ஹிந்தி இலக்கிய கர்த்தர்களில் மிகவும் புகழ் பெற்றவரும், 'ராம சரித மானஸ' ஆசிரியருமான துளசிதாஸர் அவதி மொழியில் எழுதினார். இது நவீன காலத்து ஹிந்தியிலிருந்து நிச்சயமாக மாறுபட்டது. 'ஹிந்தி இலக்கிய வரலாறு (History of Hindi Literature) என்ற நூலில் ஸ்ரீ ராமச்சந்திர சுக்லா, ஹிந்தி மொழி 1800ல்தான் உபயோகத்துக்கு வந்ததென்றும், ஹிந்தியில் இயல்நடை இலக்கியம் 1860ல்தான் தொடங்கியது என்றும்

கூறுகிறார். ஸ்ரீ ராம் நரேஷ் திரிபாடி தாம் எழுதிய உருது இலக்கிய வரலாற்றில் உருதுவும், விரஜ பாஷையும் ஹிந்தி மொழியைவிட வளத்திலும் விளக்கும் திறனிலும் சிறந்தவை என்கிறார். உருது இலக்கியம் தனது சிறப்புக்களை வலியுறுத்தி வருவதையும் நாம் கவனியாமலிருப்பதற்கில்லை. 'ராஜஸ்தானி'யை ஹிந்தியிலிருந்து வேறுபட்ட தனி மொழியாகக் கருத வேண்டும் என்று ஒரு தீவிரமான இயக்கம் வற்புறுத்தி வருகிறது.

என்னுடைய முன்னுரையுடன் டாக்டர் ஸுநீதி குமார் சட்டர்ஜி 'நவ பாரதத்தின் மொழிகளும் இலக்கியங்களும்' (Languages and Literatures of Modern India) என்பதாக ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியுள்ளார். இதில் அவர், ''இன்று வழங்குகிற இலக்கிய ஹிந்தி என்பது நூற்றைம்பதே ஆண்டுகளான சமீப காலத்திய மொழியாகும்'' என்று கூறுகிறார்.

தேசிய மொழி — அல்லது, ராஷ்டிர பாஷை — என்பதாக இந்திய மொழி ஒன்றை வைத்துக் கொள்ள வேண்டும் என்று நாட்டில் ஓர் உணர்வு ஏற்பட்டிருப்பது உண்மையாகும். என்றாலும், மேலே கூறிய சரித்திர பூர்வமான அடிப்படைகளைக் கொண்டு நோக்கினால் இவ்விஷயத்தில் பிரதேச மொழிகளின் உரிமையையும் ஹிந்தியின் உரிமையையும் சமரசப்படுத்துவது மிகவும் சிரமம்; அல்லது இயலாத காரியமே எனலாம். தில்லி, உத்தரப் பிரதேசம், பீஹார், மத்தியப் பிரதேசம் இவற்றில் மட்டுமின்றி, பஞ்சாபிலும், வங்காளத்திலும் கூட கரிபோலி என்கிற நவீன காலத்து ஹிந்தி மொழியை ஏராளமான மக்கள் பேசுகிறார்கள்; அல்லது புரிந்துகொள்ளுகிறார்கள் என்பது வாஸ்தவம். பதினேழாவது பதினெட்டாவது நூற்றாண்டுகளில் பிரெஞ்சு மொழி ஐரோப்பாவில் பெற்றிருந்த ஸ்தானத்தை ஹிந்தி வட இந்தியாவில் பெற்றுள்ளது என்று கூடச் சொல்லலாம். இதை மனத்தில் கொண்டுதான் முப்பதாண்டுகளுக்கு முன்பு நான் சென்னையில் ஹிந்திப் பிரசார சபையைத் தொடங்கி வைத்தேன். தாய்நாட்டு உணர்வுகளைப் புண்படுத்தாமல் ஆங்கிலத்தைத் தேசிய மொழியாகச் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறார்கள். நிகழ் காலத்தில் உலக நாகரிகத்தை விரிந்தமுறையில் பரப்பும் மொழி ஆங்கிலம் என்பதை ஒப்புக் கொள்பவர்களிடம் கூட இந்த வாதம் செல்லுபடியாகிறது. எனினும் அறிவுப் பசிக்கும், ஆன்மப் பசிக்கும் ஆங்கில மொழியிலிருந்து கிடைக்கும் உணவை இன்றோ, இன்னும் பலப் பல ஆண்டுகளுக்குப் பின்போ ஹிந்தியிலிருந்து பெறலாம் என்று வாதிடுவது அவிவேகமாகும். மக்கள் குலம் முழுவதற்கும் ஆங்கிலம் ஒரு பரம்பரைச் சொத்தாகி வருகிறது. அறிவாளிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதோடு ஆங்கிலம் நிற்கவில்லை. இலக்கியம், கலை, விஞ்ஞானம், நுணுக்கத் தொழில், வர்த்தகம், தத்துவ சாஸ்திரம் இவை எல்லாவற்றிலும் உதித்துள்ள சிந்தனைகளில், உரைக்கப்பட்ட சிந்தனைகளில் சிறப்பானவற்றை அறிய விரும்பும் எவருக்குமே ஆங்கிலம் தேவைப்படுகிறது.

**ஆங்கிலம் : பரம்பரைச் சொத்து**



ஆகையினால், பண்பாடு, பொருளாதாரம், அரசியல் ஆகிய எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், ஆங்கிலத்துடன் நமக்குள்ள தொடர்பால் நாம் பெற்றுள்ள அநுகூலங்களை அவசரப்பட்டுக் கைவிட முயல்வது தற்கொலைக்குச் சமானமாகும். இந்தியாவில் உள்ள எல்லா மொழி மக்களுக்கும் பொதுவாகத் தராசைத் தூக்கி நிறுத்துகிற மொழி ஆங்கிலமே என்று கூறுவது மிகவும் உண்மையாகும்.

எளிமைப்படுத்திய சம்ஸ்கிருத மொழி இந்தியாவில் மிகப் பெரும்பாலோரால் தேசிய மொழியாக ஏற்கக் கூடியதாகும். சம்ஸ்கிருதத்தை இவ்வாறு எளிமைப்படுத்துவதற்கு முன்பே முயன்றிருக்க வேண்டும். இப்போதும் இதற்கான வழிமுறைகளைக் காணக் காலம் தாழ்ந்துவிடவில்லை. இந்திய இளைஞர்கள் அறிவு வளர்ச்சியும் ஆன்ம வளர்ச்சியும் பெறுவதற்குச் சம்ஸ்கிருதம் ஆங்கிலம் இரு மொழிகளையும் கற்க வேண்டியது அவசியம் என்று வலியுறுத்த இடமுண்டு.

**சம்ஸ்கிருதம் : ஆன்மீகச் சொத்து**

ஹிந்திக்கும் ஆங்கிலத்துக்கும் இடையே எழுந்துள்ள பூசல்களின் விளைவுகளில் ஒன்றாகப் 'பிரதேச பக்தி' தூண்டப்பட்டிருக்கிறது. உள்ளூர் மொழி, பிரதேச மொழி அல்லது ராஜ்ய மொழி ஒன்றையே போதனை மொழியாகவும், ராஜ்யத்தின் நிர்வாக மொழியாகவும் செய்ய வேண்டும் என்று பரவலான முயற்சி தோன்றுமளவுக்கு இந்தப் பிரதேச பக்தி தீவிரமாகியுள்ளது. இதன் உட்பொருளை ஆராய்ந்து பார்த்தால் இது ஒரு தற்காப்பு இயக்கமே என்று தெரியும். என்றாலும் இந்தக் கருத்தில் நாட்டின் நாகரிக ஒற்றுமையையும், அரசியல் ஐக்கியத்தையும் பாதிக்கும் அபாயமான விளைவுகள் அடங்கியுள்ளன. ஆங்கிலம் — ஹிந்தி — பிரதேச மொழி மூன்றுக்கும் இடமளிக்கும் 'மும்மொழித் திட்டம்' ஒரு சமரசத்

இட்டம் என்பது உண்மை. ஆனால் இந்தியப் பண்பாட்டின் ஆணி வேராகிய சம்ஸ்கிருதத்தை இது புறக்கணிப்பதால் இதிலும் குறைபாடு உள்ளது.



இந்தக் கட்டுரையை முடிக்கும் முன்பு மறுக்க முடியாத சில உண்மைகளைக் கூற நான் விரும்புகிறேன். ஆங்கிலத்தின் முக்கியத்துவத்தை அழுத்திக் கூறுவதற்காகவே நான் இவற்றைக் கூறுவதாக எண்ணலாகாது. அவையாவன:



(1) இன்று கலைகள், விஞ்ஞானங்கள், தொழில் நுணுக்க இயல் இவற்றின் அபிவிருத்தியானது புத்தகங்களையும் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் மட்டும் சார்ந்திருக்கவில்லை. அவ்வப்போது வெளியாகும் குறிப்பேடுகளையும், சஞ்சிகைகளையும், பத்திரிகைகளையும் அவை சார்ந்திருக்கின்றன. இவற்றில் பெரும்பாலானவை ஆங்கிலத்தில்தான் பிரசுரிக்கப்படுகின்றன. எனவே ஆங்கில ஞானமின்றி மனித குலத்தின் அறிவு வளர்ச்சிக்கு இசைவாக நாம் முன்னேற முடியாது. (2) உலகத்தில் மிக அதிகமான மக்கள் அறிந்திருக்கும் மொழி ஆங்கிலமே. (ஒருவேளை சீன மொழி இதில் முதலிடம் வகிக்கக்கூடும்; என்றாலும் சீனாவின் அரசாங்க மொழியாகிய 'மாண்டரின்' எனப்படும் திரிபு சீனா முழுவதும் புரிந்துகொள்ளப் படுவதில்லை. இப்படிப் பார்த்தால் ஆங்கிலம் அறிந்தவர்களே மற்ற யாவரையும் விடப் பெருந்தொகையினராக இருப்பார்கள்.) (3) உலகில் உள்ள செய்தித் தாள்களில் பாதியும் உலகிலுள்ள ரேடியோ நிலையங்களில் ஐந்தில் மூன்று பாகமும் உலகிலுள்ள விஞ்ஞான ஏடுகளில் ஐம்பது சத விகிதமும் ஆங்கிலத்தைப் பயன்படுத்துகின்றன என்பது புள்ளி விவரம் கூறும் உண்மையாகும்.

**பிரச்னையும் விடையும்**

மக்களின் அறிவை எப்படி உறுதிப் படுத்தி வளர்க்க வேண்டும், இந்தியாவின் பிரதேச மொழிகளை உண்மையான முறையில் எப்படி அபிவிருத்தி செய்து வளப்படுத்த வேண்டும் என்பது கல்வித் துறை நிபுணர்களும் சாமானிய மக்களும் முடிவெடுக்க வேண்டிய முக்கியமான பிரச்னையாகும்; தேச அபிவிருத்தியை முன்னிட்டு — இந்திய மொழிகளின் நலனை முன்னிட்டும்கூட — ஆங்கிலமானது ஆரம்ப கட்டத்துக்குப் பிற்பாடு தாய் மொழியுடன் இணைந்த முறையில் கல்வியின் எல்லாப் பிரிவுகளிலும் முக்கியமான போதனை மொழியாகத் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதொன்றே இந்தப் பிரச்னைக்கு விடையாக இருக்க முடியும்.

# அயர்லாந்து வழிகாட்டுகிறது

### எம். ரத்தினசுவாமி



*[பேராசிரியர் எம். ரத்தினசுவாமி சுதந்திரக் கட்சி அங்கத்தினராக ராஜ்ய சபையில் பணியாற்றி வந்தாலும், ஆட்சிமொழி விவாதத்தில் கட்சி நோக்கு எதுவுமின்றிச் சரித்திர வரலாற்று ஆராய்ச்சியாளர்களும் அரசியல் அறிஞர்களும் கல்லூரிகளில் விவாதிப்பது போன்ற தெளிவுடன் பிரச்னையை விளக்கி வைக்கிறார். ஆங்கிலம், ஹிந்தி விவாதத்தைப் பற்றிப் பல புதிய விஷயங்களை இவருடைய கட்டுரையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.—ஆசிரியர்]*

தேசிய மொழி வேறு; அரசாங்க மொழி வேறு. தேசிய மொழி விவாதங்களில் தேசாபிமானம், தேசிய உணர்ச்சி முதலியவற்றுக்கு இடமுண்டு. விவாதிப்பவர் தமக்குச் சாதகமாகவோ எதிராகவோ உணர்ச்சிகளைத் தூண்டக் கூடும். ஆனால் அரசாங்க மொழி விஷயத்தில் அவ்விதம் இல்லை. 'அந்நிய மொழியை உபயோகிப்பது தேசிய கௌரவத்துக்கு உகந்ததல்ல, தேசத்துக்குத் துரோகம் செய்வது' என்ற வாதம் அரசாங்க மொழிப் பிரச்னையில் துளிக்கூட இடம் பெறவே கூடாது. அரசாங்க மொழி அரசாங்கக் காரியங்களுக்காக மட்டுமே. அதாவது, நிர்வாகத்திலும், பார்லிமெண்டு விவாதங்களிலும், நீதிமன்றங்களிலும், உபயோகிக்கப்படுவது.

**பயன்தரும் கருவி**

ஆங்கில மொழி ஒரு கருவிதான். ஒரு யந்திர சாதனத்தைத் தொழில் துறையில் அயல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்வது போலவே அரசாங்க மொழியும் இறக்குமதி செய்யப்பட்ட ஒரு கருவி என்று பாவிக்க வேண்டும். நம்முடைய அரசாங்கக் காரியாலயங்களில் இலாகாக்கள், தனி அறைகள், மேஜை நாற்காலிகள், பைல்கள், சிவப்பு நாடாக்கள், குறிப்புக்கள்

எழுதும் முறைகள், பதவி பாகுபாடுகள், காரியதரிசி, உதவிக் காரியதரிசி போன்ற பதவிக் கிரமங்கள் முதலிய அமைப்புக்கள் நிலவி வருகின்றன. இவை எல்லாம் ஆங்கிலேயர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டவை. இந்த அமைப்புக்கள் அனைத்தையும் நாம் அப்படியே வைத்துக் கொண்டிருக்கிறோம். அதனால் அந்த அமைப்புக்குச் சம்பந்தப்பட்ட ஆங்கில மொழியையும் கூடவே வைத்துக்கொள்வதில் அகௌரவமில்லை.

பார்லிமெண்டு சபையில் அங்கத்தினர்கள் அரசியல் கட்சிகளாகப் பிரிந்து, விவாதமுறைகள், சம்பிரதாயங்கள் முதலிய எல்லா அம்சங்களிலும் ஆங்கிலேயர்கள் ஆரம்பித்து வகுத்துக் கொடுத்து நடத்திய முறைப்படியே எல்லாக் காரியங்களும் நிகழ்கின்றன. ஆகவேதான் பார்லிமெண்டு வாத விவாதங்களிலும் ஆங்கிலேயர் பழக்கிக் கொடுத்த ஆங்கில மொழியே பிரதான மொழியாகத் தொடர்ந்து இருக்க வேண்டும் என்று கோரப்படுகிறது.



நீதித் துறையில் நீதி மன்றங்களின் சுயேச்சை அந்தஸ்து, நிர்வாகமும் நீதியும் ஒன்றுக்கொன்று சம்பந்தமின்றி இயங்கும் தனி இயல்பு, சட்டத்தின் ஆட்சி முதலியவை போன்ற கருத்துக்களும் சம்பிரதாயங்களும் ஆங்கிலேயர்களால்தான் ஆரம்பிக்கப்பட்டவை. அதனால்தான் அவற்றின் கருவியான ஆங்கிலமே நீதி மன்றங்களில் தொடர்ந்து செயலாற்ற வேண்டும் என்று கோரப்படுகிறது.

சமீப காலத்தில் தசாம்ச நாணய முறைகளையும் மெட்ரிக் முறை அளவைகளையும் மேற்கொண்டு, வெகு காலமாக நாம் உபயோகப்படுத்தி வந்த அணா, தம்பிடிகளையும், மணங்கு, வீசைகளையும், கெஜம், மைல்களையும் உதறி எறிந்துவிட்டோம். எதற்காக? அவற்றினால் கிடைக்கக்கூடிய உயர்ந்த உபயோகத்துக்காக.

இப்படி நாம் நடைமுறையில் கையாண்டு வரும் அமைப்புகள், சாதனைகள், செயல் முறைகள், அரசாங்க பரிபாலன கருத்துக்கள் முதலியவற்றில் நமக்குச் சொந்தமானவை, இந்திய மண்ணிலேயே பிறந்தவை என்று சொல்லக் கூடியவை மிக மிகச் சில. எனினும் நாடு சுதந்திர மடைந்த பின்னரும், இவற்றை யெல்லாம் நாம் அப்படியேஏற்றுக்கொண்டு உபயோகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறோம். ஏன்? உபயோகமாக இருக்கின்றன என்பதனால்தான். உபயோகமாக இருக்கிறது என்ற அதே காரணத்துக்காகவே அரசாங்க மொழியாக, நிர்வாகத் துறையில் ஆங்கிலம் தொடர்ந்து செயலாற்ற வேண்டும் என்று கோரப்படுகிறது.




இவ்விதம் கோருவதில் அக்கிரமம் ஒன்றும் இல்லை. டாக்டர் லோஹியா போன்றவர்கள் அன்னிய மொழியை அரசாங்க மொழியாக வைத்துக் கொள்வது நாட்டின் சுயமரியாதைக்கு இழுக்கு என்று சொல்லும் வாதத்துக்குப் பதில் கூறும் வகையில் சுயேச்சை அயர்லாந்தின் உதாரணத்தை எடுத்துக் காட்டலாம். ஏழு நூற்றாண்டு காலம் ஆங்கிலேயர்களால் மிகவும் கொடுமைக்கு உள்ளானவர்கள் அயர்லாந்து மக்கள். ஆங்கிலேயரையும் ஆங்கிலத்தையும் அறவே வெறுப்பதற்கு அவர்களுக்கு எல்லா விதக் காரணங்களும் இருந்தன. எனினும் ஆங்கில மொழியை அரசாங்க மொழியாக, அவர்களது ஒரே தாய் மொழியான ''காலிக்'' மொழியுடன் சம அந்தஸ்து அளித்துச் சுயேச்சை அயர்லாந்து ஏற்றுக் கொண்டது.

தவிர அரசாங்கக் காரியங்களுக்கு ஆங்கிலம் மற்றெல்லா மொழிகளைக் காட்டிலும் மேலான விதத்தில் மிகத் திருப்திகரமாக உபயோகப்படுவதுடன் தற்போது செயல் புரிந்து வருகிறது. உலக சரித்திரத்திலேயே அரசியல் அறிவு மிக்கவர்கள் என்று புகழ் பெற்றவர்களின் மொழி ஆங்கிலம். அரசியல் அகராதியில் மிக்க வளமுள்ள மொழி ஆங்கிலம். அரசியலில் உள்ள எல்லாவிதமான சாயல்களையும் தெளிவாகப் பிரதிபலிக்கும் சொல் வளம் கொண்டது ஆங்கில அகராதி. இதைத் தவிர பண்டைக் கால கிரேக்க, லத்தீன் மொழிகளிலிருந்து நமது நாட்டுத் தமிழ், ஹிந்துஸ்தானி மொழி வரையில் பல வேற்று மொழிகளிலிருந்து சொற்களைத் தனதாக்கிக் கொண்டு ஆங்கிலம் வளர்ச்சியடைந்து வந்துள்ளது. சென்ற இருநூறு ஆண்டுகளாக நம் நாட்டில் அரசாங்க மொழியாக ஆங்கிலம் உபயோகத்தில் இருந்து வருகிறது. அரங்கத்தில் இதுதான் நாயகமாகத் திகழ்கிறது. எனவே, அரசியல் காரணங்களுக்காகவும், செயல் முறைவாகவத்திற்காகவும் ஆங்கிலம் அரசாங்க மொழியாக நீடிக்க வேண்டும் என்று கோருவதில் நியாயமிருக்கிறது.

**கையிலுள்ளதை விடுவதா ?**

நாடு முழுவதிலும் ஆங்கிலம் நிலவ வேண்டும் என்று யாரும் கேட்கவில்லை. பிராந்தியங்களில் அந்தந்தப் பிரதேச மக்களின் பெரும்பான்மை மொழி வழக்கில் இருக்கத்தான் செய்யும். மத்திய நிர்வாகத்தில் ஒரு

இலாகாவுக்கும் மற்றொரு இலாகாவுக்குமிடையே கடிதப் போக்குவரத்துக்கு அவசியமுள்ள கட்டங்களிலும் மத்திய அரசாங்கத்துக்கும் பல்வேறு ராஜ்ய அரசாங்க இலாகாத் தொடர்புக்கும் மட்டுமே ஆங்கிலம் நீடிக்க வேண்டுமென்று விரும்பப்படுகிறது.



ஆங்கிலத்துக்குப் பதிலாக ஹிந்தியை ஏற்றுக்கொள்ளும்படி ஆட்சி மொழி மசோதா கூறுகிறது. மொழிகள் ஜாபிதாவில் பதினன்கு புராதன மொழிகள் இருக்கும்போது ஹிந்தி என்ற இளம் மொழியை மட்டும் இந்தச் சிறப்புக்கு ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்? உத்தரப் பிரதேசம், பீஹார் இவ்விரு ராஜ்யங்களில் சென்ற நான்கு அல்லது ஐந்தாண்டுகளைத் தவிர வேறு எங்குமே ஹிந்தி நிர்வாகக் காரியங்களுக்கு உபயோகப் படுத்தப்படவில்லையே!

ஹிந்தியின் சிறப்பைப் பற்றிச் சொல்லப்படுவதுதான் என்ன? நாட்டு மக்களின் 40 சத விகிதத்தினர் இந்தி மொழியைப் பேசுகிறார்களாம். இதில் 90 சத விகிதத்தினர் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள். உத்தரப் பிரதேசத்திலும் பீஹாரிலும் எழுதப் படிக்கத் தெரியாதவர்களின் எண்ணிக்கை 90 சதம் என்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆகவே 40 சத மக்களில் 10 சத மக்கள் மட்டுமே ஹிந்தி எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்று ஆகிறது. ஆனல் நாட்டு மக்களில் 60 சத விகிதத்தினர் ஹிந்தி தெரியாதவர்கள். அரசியல் சட்டத்தில் 1965ம் ஆண்டுக்குப் பின் ஹிந்திதான் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. இதைவிட உடனடியாகவே அப்போதிலிருந்தே ஹிந்தி ஆட்சி மொழியாக இருக்க வேண்டுமென்று அரசியல் நிர்ணய சபை செய்திருக்கலாமே! அவர்கள் அவ்விதம் செய்யவில்லை. ஏன்? எனக்குத் தோன்றுகிறது, 1965ம் ஆண்டுக்குள் ஹிந்தியை எல்லா மக்களும் கற்றுக்கொண்டு பேசத் தெரிந்துகொண்டுவிடுவார்கள் என்று அவர்கள் எதிர்பார்த்திருக்க வேண்டும். ஆனல் அவ்விதம் நடைபெறவில்லை.

**சதவிகித ஜாலம்**

இப்போது செய்ய வேண்டியது என்ன? அரசியல் சட்டத்தை நாம் புனித வஸ்துவாக மதிக்கவில்லை. ஏற்கனவே பதினன்கு தடவை இதைத் திருத்தியாகி விட்டது. மேலும் ஒரு திருத்தம் செய்வதனல் அரசியல் சட்டம் ஒன்றும் முறிந்துவிடாது. ஆகவே, இந்த ஆட்சி மொழிப் பிரச்னையின் தீர்வு மிக எளிது.

பார்லிமெண்டில் பெரும்பான்மையான அங்கத்தினர்கள் ஹிந்தியை ஆட்சி மொழியாக்க விரும்புகின்றனர். ஆனல் நாட்டின் முன்னேற்றத்தை, அரசியல், சமூகம், பொருளாதாரம் முதலிய எல்லாத் துறைகளிலும் வளர்ப்பதற்காக மட்டும் வாக்காளர்களால் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்டுள்ள பெரும்பான்மை அங்கத்தினர்கள், அரசாங்க மொழியை மாற்றி அந்த மொழி தெரியாத பல ராஜ்யங்களை அதன் மூலம் ஆளப் பார்ப்பது செய்யக் கூடாத ஒரு காரியம். இதுவரையில் நிர்வாகத்தில் வழக்கத்தில் உள்ள ஒரு மொழியை மாற்றுவதானலும் இம் மாறுதலினல் பாதிக்கப்படும் எல்லா ராஜ்யங்களும் விரும்பினலொழிய செய்யக் கூடாது. ராஜ்யங்கள் பெருமளவு சுயேச்சை அந்தஸ்து படைத்துள்ள இந்தியாவைப் போன்ற ஐக்கிய குடியரசு நாட்டில் இப்படிச் செய்வதுதான் ஜனநாயகமுறை.

**எங்கே ஜனநாயகம்?**

'பயப்படவேண்டிய அவசியமே இல்லை' என்று ஆட்சி வர்க்கத்தினரால் அடிக்கடி சொல்லப்படுகிறது. ஏனெனில் ஆங்கிலம் துணை ஆட்சி மொழியாகத் தொடர்ந்து இருக்குமாம். இந்த அபய தானத்தை ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஏனெனில் இந்தி மொழியைக் கூடவே செயல்பட அனுமதித்தால் ஆங்கிலம் வெகு நாட்களுக்குத் துணை மொழியாக நீடிக்காது; அதற்கு வாய்ப்பும் இருக்காது. அதிகாரத்தின் பலம் முழுவதும், நிர்ப்பந்தம் முழுவதும் இந்தியின் சார்பிலேயேதான் பிரயோகிக்கப்படும். மத்திய அரசாங்க அமைச்சர்களும் அதிகாரிகளும் தங்கள் செல்வாக்கு அனைத்தையும் ஹிந்திக்குச் சாதகமாகவே உபயோகிப்பார்கள். இப்போதே இந்தியைப் பரப்புவதற்காக மத்திய அரசாங்கம் 30–35 லட்சம் ரூபாய் செலவு செய்து வருகிறது. இவ்வளவு வலிமையோடு நடத்தப்படும் போரில் ஆங்கிலம் புறமுதுகு காட்டி ஓடத்தான் வேண்டியிருக்கும். வெகு சீக்கிரத்தில் — இப்போது நிறைவேற்றப்பட்டுள்ள மசோதாவின்படி 1975 ஆண்டில் ஏற்படுத்த வேண்டிய பரிசீலனைக் கமிட்டி அமைக்கப்படுவதற்கு முன்னரே — ஆங்கிலம் தனது துணை ஆட்சி மொழி என்ற அந்தஸ்தை இழந்து அந்த ஸ்தானத்தை ஹிந்தி கைப்பற்றிக் கொள்ளக் கூடும்.

**வரம்பற்ற விரயம்**

மத்திய அரசாங்கம் துணை மொழியாக ஆங்கிலம் நீடிக்க வேண்டும் என்று விரும்புவது உண்மையானலும், சர்க்கார் அலுவலகங்களில் ஹிந்தியைப் பரப்ப எந்த வித நிர்ப்பந்த நடவடிக்கைகளும் மேற்கொள்ளக்

கூடாது: ஹிந்தியை விஸ்தரிப்பதற்கு இப்போது செய்யப்படும் செலவை உடனே நிறுத்த வேண்டும்; ஹிந்தியின் வளர்ச்சியை ஹிந்தி ராஜ்யங்களான உத்தரப் பிரதேசத்துக்கும் பீகாருக்கும் அம்மொழியில் மோகம் கொண்ட தனி மனிதர்களின் முயற்சிக்கும் விட்டுவிட வேண்டும்?

**பரீட்சைகளில் பாரபட்சம்**

ஹிந்திக்காரர்களுக்கு, இது தாய்மொழியாக இருப்பதால் எடுத்த எடுப்பிலே சலுகை கிடைக்கிறது. அதனுடைய லிபியும் சிறுவயதிலிருந்தே கற்பிக்கப்படுவதால் சர்க்கார் பதவிப் போட்டிப் பரீட்சை (Competitive Examination) களில் அவர்களுக்கு அசாதாரணமான அனுகூலமும் கிடைக்கிறது. ஹிந்தி புஸ்தகங்களை மட்டும் படித்துப் பெற்ற பரீட்சைப் பரிசோதகர்கள் மாணவர்களுக்கு நிர்ணயிக்கும் தரம் ஆங்கில மொழிப் புத்தகங்களைப் படித்துப் பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு நிர்ணயிக்கப்படும் தரத்தைவிடக் குறைவாகவே இருக்கும். பரீட்சைகளில் ஹிந்தி பேசாத மக்களுக்கு நியாயம் கிடைக்காமல் போகும்.

இப்படிப்பட்ட பிரதிகூலங்களால் ஹிந்தி பேசாத மக்கள் மனத்தில் எழும் மனத்தாங்கல்கள் இந்திய மக்களின் ஒற்றுமைக்கும் ஒருமை உணர்ச்சிக்கும் உலைவைத்துவிடும். இத்தகைய ஒரு மனத்தாங்கலைச் சீனப் படையெடுப்புச் சமயத்தில் நாட்டு மக்களிடையே ஏற்படுத்தியிருப்பது துரதிர்ஷ்டமாகும். இந்த நிலைமையை உண்டாக்கியதற்கு ஹிந்தியைப் பிரதான அரசாங்க மொழியாக ஆக்கிய அரசாங்கம்தான் முழுப் பொறுப்பும் ஏற்க வேண்டும்.

# இதோ ஒரு நிகழ்ச்சித் திட்டம்!

கே. கே. ஸின்ஹா



**[திரு கே. கே. ஸின்ஹா இந்திய மொழிகளை வளர்ப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட சங்கத்தின் காரியதரிசி. ஆங்கிலத்தின் தகுதியை மிக எளிமையாகவும் அழுத்தமாகவும் எடுத்துச் சொல்லுகிறார். அதை அகற்றினால் ஏற்படும் விளைவுகளை விண்டு சொல்லுகிறார். அதோடு இந்த நிலை நேராது தவிர்க்க இப்போது ஹிந்தி பேசாதார் என்ன செய்ய வேண்டும் என்பதற்கும் உருப்படியாக ஒரு காரியக் கிரமத்தை வகுத்து நமக்கு அளிக்கிறார். —ஆசிரியர்]**

**இப்போதா? பிற்பாடா?**

ஹிந்தி மொழி அறியாத இந்தியாவின் பெரும்பான்மை மக்களுக்கு ஒரு ஜீவாதாரமான பிரச்னை எழுந்துள்ளது. ஆட்சி மொழிச் சட்டத்தின் விளைவுகளை மக்கள் தாங்களாகவே அநுபவித்து அதன் கசப்பையும் விஷத்தையும் உணர நாம் விடலாமா, அல்லது இன்றிலிருந்தே ஆட்சி மொழிச் சட்டத்தை எந்தப் பிரதேச மொழிக்கும் பாரபட்சமில்லாமல் மாற்றுவதற்கு முனைய வேண்டுமா என்பதே இன்று நம் கண் முன் நிற்கும் கேள்வி. காலக்கிரமத்தில் பார்த்துக் கொள்வோமே என்று ஆலஸ்யமாக இருப்போமேயானால் சட்டத்தை பிற்பாடு ஒருகாலும் மாற்ற முடியாமல் போகும். ஆட்சி மொழிச் சட்டத்தை இப்போதே எதிர்க்கத் தொடங்கலாம் என்றால், இந்தப் பிரச்னையின் தன்மையானது பாமர மக்களின் அன்றாட வாழ்க்கையை உடனே பாதிக்காததால் ஏராளமான மக்கள் இந்தச் சட்டத்தின் உட்கிடக்கையைக் கவனிக்காது இவ்விஷயத்தில் அசிரத்தையாக இருக்கிறார்கள்.



**உள்ளம் ஒன்று உரைப்பது ஒன்று**

ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்துக்கு ஏற்பட்டுள்ள சதி பாதை இது. இதைப் புரிந்து கொண்டு, குருட்டுத்தனமாக உணர்ச்சி வயப்படாமல் நாம் ஒரு வழி முறையை உருவாக்க முயல வேண்டும்.

ஆட்சியாளர்கள் மிகவும் தந்திரமான ஒரு முறையைக் கடைப்பிடித்து வருகிறார்கள். ஹிந்திதான் வேண்டும் என்பதே அவர்கள் உள்ளத்திலிருப்பது. என்றாலும் ஹிந்தியை நிர்வாகக் காரியங்களுக்குப் பயன்படுத்தவேண்டுமானால் அந்த மொழியை வளப்படுத்த வேண்டியிருக்கிறது. இதற்குச் சில ஆண்டுகள் தேவைப்படும். அது வரையில் ஹிந்தியைத் தனியொரு ஆட்சி

மொழியாக்க முடியாது. எனவேதான் அரசினர் ஹிந்தியை உடனடியாகத் தனியொரு ஆட்சி மொழியாக்கவில்லை. இந்த யதார்த்த நிலையை மறைத்துத் தாங்கள் ஹிந்தி பேசாதாருக்கு மிகவும் தயாளமாக விட்டுக் கொடுப்பதாகவும், இப்போதே ஹிந்தி அரியாசனம் ஏற வேண்டும் என்பவர்களின் ஆத்திர வற்புறுத்தலை எதிர்த்துச் சமாளிப்பதாகவும், ஆட்சியாளர்கள் சாதுரியமாகக் கூறுகிறார்கள். 'நாங்கள் எவ்வளவு நேர்மையாக நடக்கிறோம் பாருங்கள்' என்கிறார்கள். ஆனாலும் அவர்களுடைய எண்ணம், எப்படியும் ஹிந்தியைச் சிறிது சிறிதாக அரசியல் நிர்ணயச் சட்டத்தின்படி ஆட்சி பீடத்தில் பூரணமாக அமர்த்திவிட வேண்டும் என்பதே. இப்போது மழுப்பி விட்டால் பிறகு வேகம் ஏறிக் கொண்டே வரும் போது யாரும் எதிர்க்க முடியாது என்று நினைக்கிறார்கள். புரிஜகந்நாதத்துப் பிரமாண்டமான ரதம் வேகமாக ஓடத் தொடங்கி விட்டால் அதன் சக்கரத்தில் யார் அரைபட்டால்தான் என்ன? தேரைச் சிறுபான்மையினர் நிறுத்த முடியுமா?



வேறெந்தப் பிரச்னையிலும் இல்லாமல் ஆட்சி மொழிச் சட்ட எதிர்ப்பில் மட்டுமுள்ள சிரமங்களைப் பார்ப்போம். ஆட்சி மொழிப் பிரச்னை ஓர் அகில இந்தியப் பிரச்னை. என்றாலும் எதிர்ப்பு இயக்கத்தை எந்த அகில இந்திய அரசியல் கட்சியும் நடத்த இயலாது. ஏனெனில் அப்படிச் செய்தால் ஹிந்தி வட்டாரத்தில் அதன் செல்வாக்கு குன்றத் தொடங்கும். இரண்டாவதாக, ஹிந்தியை எதிர்க்கும் ராஜ்யங்களிலும் ஆட்சி மொழிச் சட்டம் ஒரே போன்ற விளைவுகளை ஏற்படுத்தவில்லை. தமிழகத்தில் உண்டாகியுள்ள விளைவுகள் வேறு, மேற்கு வங்காளத்தில் ஏற்பட்டுள்ள விளைவுகள் வேறு. மூன்றாவதாக, இது வரையில் இந்த இயக்கத்தில் படித்த மத்தியதர மக்கள் மட்டும்தான் ஈடுபட்டுள்ளனர். நாட்டின் பெரும்பகுதியினரான பொதுமக்கள் இதில் ஈடுபடவில்லை. தங்களுக்கு இது உடனடியான, ஜீவாதாரமான பிரச்னை அல்ல என்பது அவர்கள் கருத்து. கடைசியாக, நடுத்தர மக்களிலும், படிப்பாளிகளிலும் கூடச் சிலரே தீரத்தையும் கடமை உணர்ச்சியையும் விடாமல் சர்க்கார் கொள்கையை எதிர்க்க முன்வந்திருக்கிறார்கள். காரணம் நமது 'க்ஷேம அபிவிருத்தி சர்க்காரின்' விஷக் கொடுக்குகள் நாள்தோறும் பல விதத்தில் வளர்ந்து கொண்டே வந்து அவர்களை வளைத்துக் கொள்வதுதான். சர்க்காரிடமிருந்து பெறும் லாபத்துக்காகவோ அதன் கொடுமையில் சிக்கிக் கொண்டதாலோ, ஆட்சி மொழிக் கொள்கையின் தீமைகளை உணர்ந்த போதிலும் அவர்கள் அதனை எதிர்க்கத் துணிவு பெறவில்லை. ஹிந்திக் கொள்கையில் அடங்கியுள்ள பாரபட்சத்தை நடைமுறையில் அநுபவிக்கும் வரையில் இளம் தலைமுறையினரும் கொதித்தெழ மாட்டார்கள் எனத் தோன்றுகிறது.

**பிரச்னையின் இடர்ப்பாடுகள்**



இந்தச் சந்தர்ப்பங்களை மனத்தில் கொண்டுதான் ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்தை நடத்த வேண்டும். எதிர்ப்பு இயக்கம் எப்படிச் செயல்பட வேண்டும் என்பதற்கு ஒரு நிகழ்ச்சித் திட்டம் தேவை. இது குறித்த என் கருத்துக்களை இங்கே தருகிறேன்.

முதலில் எதிர்ப்பு இயக்கத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறுகிறேன். எதிர்ப்பு இயக்கம் நீண்ட கால அடிப்படையில் நடைபெற வேண்டுமென்பது என் அபிப்பிராயம். உடனடியாக ஒரு குறுகிய காலத் திட்டம் வகுத்துத் துடிப்பான எதிர்ப்பைத் தொடங்கினால், இந்தப் பிரச்னையில் ஈடுபாடு கொள்ளாத சாமானிய மக்கள் மட்டுமின்றி நகரங்களில் வாழும் படிப்பாளிகளும் கூட அதில் சேர மாட்டார்கள்.

**கண்டனம் மட்டும் போதாது!**

இந்த எதிர்ப்பு இயக்கமானது ஆட்சி மொழிச் சட்டத்தைக் கண்டிப்பதோடு மட்டும் நில்லாமல், தனது கொள்கையின் சிறப்புக்களையும் எடுத்துக் கூற வேண்டும். அப்போதுதான் இது வெறும் கண்டன இயக்கமல்ல; நற்பலனளிக்கிற ஒரு காரியத்தில் இது ஈடுபட்டிருக்கிறது என்ற உணர்வு மக்களுக்கு ஏற்படும். வெறும் கண்டனத்தைக் கேட்டு அலுத்துப் போகக் கூடியவர்கள் அப்போதுதான் இயக்கத்தால் கவரப்படுவார்கள். தாங்கள் தாக்குவதை மட்டும் சொல்லாமல், ஆக்குவதையும் சொன்னால்தான் இது வரை எதிர்ப்பு உணர்வு பரவாத பகுதியில் உள்ளோரையும் ஆகர்ஷிக்க முடியும். எதிர்ப்பு இயக்கம் ஒரு போதும் பிரதேச அடிப்படையில் பிரிந்து போகாமல் மற்ற எல்லாருடைய இணைப்பையும் கோரிப் பெற்றுச் செயல்பட வேண்டும். இல்லா விட்டால் 'பிரிவினை'ப் பட்டம் சூட்டி எதிர்ப்பை அமுக்கி விடுவார்கள். அகில இந்திய பிரச்னையை அகில இந்திய அடிப்படையில்தானே எதிர்க்க வேண்டும்?

இனி இந்த இயக்கத்தின் செயல் திட்டம் குறித்த என் யோசனை களைத் தருகிறேன். தற்சமயம் எனக்குத் தோன்றும் யோசனைகளே இவை. இவற்றைக் கவனமாகப் பரிசீலிக்க வேணும்.

(1) 'ஆங்கிலமே இந்திய யூனியனின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும். சம்பிரதாயமான அரசியல் சடங்குகளில் மட்டும் சம்ஸ்கிரு தத்தை உபயோகிக்கலாம். யூனியன் பப்ளிக் ஸர்வீஸ் கமிஷன் பரீட்சை களும் ஆங்கில மொழி ஒன்றிலேயே நடைபெற வேண்டும்' என்பதாக அரசியல் நிர்ணயச் சட்டப் பிரிவைத் திருத்துவதற்கு ஆதரவாகப் பொது மக்களின் கருத்தைத் திரட்ட வேண்டும்.

இதற்காகத் தில்லியில் பாராளுமன்ற அங்கத்தினர்கள், அரசியல் கட்சிகள் இவற்றின் ஆதரவைப் பெற ஒரு சுறுசுறுப்பான சிறு அலுவ லகத்தை அமைக்க வேண்டும். பரவலான முறையிலமைந்த ஒரு தேசியக் குழுவின் கீழ் இந்த அலுவலகம் பணி செய்ய வேண்டும்.

**மனச்சாட்சிக்கு அறைகூவல்**

(2) அரசாங்கத்தை எதிர்பாராமல், ஒவ்வோர் ஊரிலுமுள்ள மக்களின் முயற்சியைக் கொண்டு முதியவர்களுக்கும், குழந்தைகளுக்கும் ஆங்கிலம் கற்பிக்கப் பயிற்சிக் கூடங்கள் நிறுவ வேண்டும். பொதுமக்கள் ஆங்கில இலக்கியத்தை ரசிக்குமாறு செய்ய வேண்டும். ஆங்கிலத்தை விரைவிலும் நன்றாகவும் கற்றறியத் தகுந்த புத்தகங்கள் பிரசுரிக்க வேண்டும். உள்ளூர் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் போதனைத் தரத்தை உயர்த்த உதவி புரிய வேண்டும். இது செயல் உருவில் நடைபெறவேண்டிய பணி. ஹிந்தி பேசுகிற பகுதிகளிலும் இந்தப் பணியைச் செய்ய வேண்டும்.

(3) கடிதங்கள் இயக்கமென்று இதைச் சொல்லலாம். ஏராளமான ஹிந்தி பேசாத மக்களைக் கொண்டு நாட்டின் எல்லா பகுதிகளிலுமுள்ள ஹிந்தி மக்களுக்குக் கடிதங்கள் எழுத வேண்டும். ஹிந்தி மக்கள் இச்சட் டத்தின் மூலம் மற்றவர்களைவிடச் சலுகை பெறுவது எவ்வளவு அதர்ம மாகும் என்பதை அவர்களுக்கு இவற்றின் மூலம் உணர்த்த வேண்டும். 'எதிராளி'களின் மனச்சாட்சியைத் தூண்டுவதே இதன் நோக்கம். கடி தத்தின் வாசகம் ஹிந்தி மொழியிலேயே இருக்கலாம். கடிதத்தின் நகலாக இதோ நான் ஒரு 'மாதிரி' தருகிறேன்:

அன்பரே,

1965லிருந்து ஹிந்தி ஆட்சி மொழியாக அமுலுக்கு வருவதால் நாடு முழுவதிலும் நீங்கள் எங்களைவிடச் சர்க்கார் உத்தியோக விஷ யங்களில் அநுகூலநிலையை அடைகிறீர்கள். இதேபோல் உங்களுடைய குழந்தைகளும் வேறு இந்திய மொழிகளைப் பேசும் பகுதியில் பிறக்க நேர்ந்த எங்கள் குழந்தைகளைவிட அநுகூல நிலையிலிருப்பார்கள். ஒவ்வொருவரும் மற்றவரைப் போலவே சமமான வாய்ப்புக்கள் பெற்றிருக்க வேண்டிய ஜனநாயக நாடொன்றின் பிரஜை என்ற முறையில் நீங்கள் இதனை எவ்விதத்தில் ஏற்பீர்களோ என்றெண் ணிப் பார்க்கிறேன். நான் உங்கள் நிலையிலிருந்தால் என்னுடைய தகுதி எதுவுமின்றி இத்தகைய ஓர் அநுகூலத்தைப் பெறுவது குறித்து நாணமடைவேன். எனக்குச் சாதகமாகவே பாரபட்சம் நடந்திருப் பினும் கூட இத்தகைய ஒரு பயங்கரமான ஏற்றத் தாழ்வு முடிவுறும் வரையில் நித்திரையற்ற இரவுகளைக் கழிப்பேன். நண்பரே, தங்களது மனச்சாட்சியின் குரலைக் கேட்டால் நீங்களும் இவ்வாறுதான் உணர் வீர்களென்று நம்புகிறேன்.

அன்புடன்,

உங்கள் ஹிந்தி பேசாத சகோதரன்

..............................

**பிரசங்கமும் பிரசாரமும்**

(4) 'அரசாங்கத்தின் மொழிக் கொள்கை ஒருசாராருக்கு விசேஷ நலனும், மற்றவருக்குத் தீமையும் உண்டாக்குவது; நாட்டின் ஐக்கியத் தைக் குலைப்பது' என்பதை விவரமாக விளக்கி ஏராளமான துண்டுப் பிர சுரங்கள் வெளியிட்டு விநியோகிக்க வேண்டும். இப்பிரசுரங்களில் தினந் தோறும் நிர்வாகத்தில் அரசாங்கம் எடுக்கிற நடவடிக்கைகளை அலசி அவற்றின் உட்கருத்தைப் பகிரங்கப்படுத்த வேண்டும். இதோடு மூலை முடுக்குகளிலெல்லாம் பொதுக் கூட்டங்கள் நடத்த வேண்டும்.

இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு மக்கள் கருத்தை வலுப் படுத்தினால் பிறகு நம்முடைய எதிர்ப்பு நிச்சயமாகப் பலனளிக்கும் என் பதே என் நம்பிக்கை.

# ஆஹா, என்ன குளிர்ச்சியளிக்கிறது

# பின்னியின்

# மொகோலின்




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் எங்களது அனுமதி பெற்ற விற்பனையாளரிடமிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்குங்கள்.

இந்த கோடை வெய்யிலில் நாள் முழுவதும் குளுமையாகவும், புத்துணர்ச்சியுடனும், சுகமாகவும் இருக்க என்ன ஷர்ட்டிங் அணிவதென்று யோசித்துக் கொண்டிருக்கிறீர்களா? ஏன், பின்னியின் மொகோலின் அணிந்து பாருங்களேன்! ஓடியாடி வேலை செய்பவர்களுக்கு உகந்த ஷர்ட்டிங் அது. சந்தேகமில்லாமல் உங்களைக் குளிர்ச்சியாக இருக்க உதவுகிறது.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்

பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒரு கிளை

JWT/BC/MK-2276a

# நந்தனார்



## மறக்க முடியாத திரைப்படங்கள்

சென்ற சில மாதங்களாகவே தமிழ் நாட்டின் மூலைமுடுக்குகளிலெல்லாம் என்ன விழாவானாலும் சரி கர்நாடக சுத்தமான பக்திப் பாடல்கள் இரண்டு ஒலிபெருக்கிகள் வாயிலாக வெளிப்பட்டுக் கேட்போரின் நெஞ்சை நிறைத்துக் கொண்டிருக்கின்றன. 'ஞானப் பழத்தைப் பிழிந்து', 'தனித்திருந்து வாழும் தவமணியே' ஆகிய இவ்விரு பாடல்களும் எவ்வளவு பிரசித்தம் என்பதை ஒப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் எவ்வளவு பிரசித்தமோ அத்தனை பிரசித்தம் என்று எளிதாகக் கூறி விடலாம்!

ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் 'நந்தனார்' படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டதற்குக் காரணம் காலம் சென்ற தீரர் சத்தியமூர்த்தி அவர்கள்தான். "தீண்டாமையை ஒழித்து, ஹிந்து சமுதாயத்தில் வேற்றுமையைக் களைந்தெறிய ஆதிகாரணமாயிருந்த நந்தனார் பாகத்தை நீங்கள் ஏற்று, உங்களுடைய சாரீரத்தினால் நந்தன்கீர்த்தனைகளைப்பாடி, தமிழ்கூறும் நல்லுலகமெல்லாம் அவைகளைப் பரப்பினால்அதுமாபெரும் தேச சேவையாகும்" என்று சத்தியமூர்த்தி அவர்கள் கூறியதும் ஸ்ரீமதி சுந்தராம்பாளால் மறுக்க முடியவில்லை; ஆஸன்தாஸ் கிளாசிகல் டாக்கீஸின் தயாரிப்பான 'நந்தனார்' படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டார்.

ஆண்மணி ஏற்க வேண்டிய பாத்திரத்தை ஒரு பெண்மணி ஏற்று நடித்தது அந்த நாளில் மிகப் பெரிய புரட்சி. நாடக மேடையில் கணீர் என்று பாடிப் பெரும் புகழ்பெற்று விளங்கும் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் கோபால கிருஷ்ண பாரதியாரின் பாடல்களை 'நந்தனார்' படத்தில் அருமையாகப் பாடி நடித்திருக்கிறார்.

இடப்பக்கம்: நந்தனார் ஷூட்டிங்கின்போது எடுக்கப்பட்ட படம்.

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்ப் படத்தில் நடிக்க ஒரு லட்சம் ரூபாய் வாங்கிய முதல் நடிகை ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள். மருந்துக்குக் கூடக் காதல் காட்சி இல்லாத கதை நந்தனார்.

எனினும் பல நாட்கள் தொடர்ந்து ஓடிய பெருமை 'நந்தனா'ருக்கு உண்டு. காதல் இல்லாமற் போகவே வில்லன் பாத்திரத்துக்கும் இடம் இல்லை. ராணி இல்லை; ராஜா இல்லை. மந்திரி, தந்திரி யாரும் இல்லை. மாடமாளிகைகள், கூடகோபுரங்கள், கோட்டை கொத்தளங்கள் ஆகிய எதுவும் இல்லை. ஆனால் விண்ணை இடிக்கும் கோயில் கோபுரங்கள், உள்ளத்தை உருக்கும் உயர்ந்த பாடல்கள் இவைகளுக்குக் குறைவில்லை.

வயல் வரப்புக்களில் வேலை செய்யும் நந்தன் அடர்ந்த கூந்தலுடன் மேலே துணியைப் போர்த்திக் கொண்டு சற்றுப் புது மாதிரியாகக் காட்சியளித்ததைக் கண்டு யாரும் வியப்படையவில்லை. ஸ்ரீமதி சுந்தராம்பாவின் கணீரென்ற குரலில் பிரசித்தி பெற்ற நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளைக் கேட்டதும் எல்லோரும் படம் பார்க்கிறோம் என்பதையே மறந்து விட்டனர். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட அவர் பாடிய பாடல்களை யாரும் மறக்கவில்லை. "இல்லையம்பல ஸ்தலம் ஒன்றிருக்குதாம்", "சிவலோக நாதனைக் கண்டு", "வழி மறித்தொரு மாடு மலை போல் கிடக்குது" என்னும் பாடல்கள் இன்னும் இதயத்தில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.



காலஞ்சென்ற எஸ். ஜி. கிட்டப்பாவுடன் கே. பி. எஸ். நாடகங்களில் நடித்த காலத்தில் நாடக மேடையை சங்கீத மேடையாக்கிய பெருமைஅவர்கள் இருவரையுமே சேரும்! "வள்ளித் திருமணம்" நாடகத்தில் சுந்தராம்பாள்வள்ளி; கிட்டப்பா வேலன், வேடன், விருத்

தன். அது அவர்களுடைய புகழ் பெற்ற நாடகம். இரவு பத்து மணி சுமாருக்கு நாடகம் ஆரம்பமாகும். கிட்டப்பா நாடக மேடையில் தோன்றுவார். இரண்டொரு காட்சிகளுக்குப் பிறகு வள்ளியும், வேடனும் சந்தித்ததும் மாறி மாறி ஸ்வரப் பிரஸ்தாரங்களுடன் பாடுவார்கள். பொழுது புலர்ந்து மணி ஐந்தாகி விடும். அதற்கு மேலும் நாடகத்தை நடத்திக் கொண்டு போக முடியாதாகையினால் கிட்டப்பாவும் சுந்தராம்பாளும் மாலை மாற்றிக் கொள்ளும் காட்சியுடன் நாடகம் இனிதாக முடிந்து விடும்! நாடகம் பார்க்கவந்தவர்கள் அவர்கள் விரும்பிக் கேட்க வந்த பாடல்களை 'ஒன்ஸ் மோர்' கேட்ட திருப்தியுடன் வீடு போய்ச் சேர்வார்கள்.

''நந்தனு''ரை டைரக்ட் செய்தவர் ஹாலிவுட்டைச் சேர்ந்த எம். எல். டாண்டன். அவருக்கு உதவியாயிருந்தவர் திரு எஸ். கே. வாசகம் அவர்கள்.

''நந்தனார்'' படத்துக்கு இன்னொரு பெருஞ் சிறப்பை ஏற்படுத்தியவர் யார் தெரியுமா? சங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாதய்யர் அவர்கள்தான். '' 'சங்கீத பூபதி' என்று இவர் பட்டம் பெற்றது எதனால் என்று நான் பல நாட்கள் யோசித்ததுண்டு. மகாராஜபுரம், பூப் ராகத்தைப் பாடக் கேட்டதும், எனக்குக் காரணம் தெளிவாய்ப் புரிந்து விட்டது' '' என்று கல்கி அவர்கள் ஒரு முறை கூறினார்கள். இத்தகைய பிரசித்தி பெற்ற ஒரு சங்கீத வித்துவான் சினிமாவில் நடித்ததே அந்தக் காலத்தில் பெரிய புரட்சி. வேதியராக வந்து, சங்கீத பூபதி தமது இணையற்ற இசைச் செல்வத்தினால் எல்லோரையும் கவர்ந்துவிட்டார்.

''சங்கீத வித்வானுகிய தாங்கள் சினிமாவில் நடிக்க எப்படிச் சம்மதித்தீர்கள்?'' என்று மகாராஜபுரம் அவர்களைக் கேட்டேன்.

'' என்னைச் சினிமாவில் நடிக்கச் செய்த பெருமை ஸ்ரீமதி சுந்தராம்பாள் அவர்களையே சேரும். அவர் வற்புறுத்திக் கூறியிருக்கா விட்டால் நான் சினிமாவில் நடித்திருக்கவே மாட்டேன். நான் 'மேக்கப்' ஒன்றும் போட்டுக் கொள்ளவில்லை. என்னுடைய இயல்பான தோற்றத்தோடு நான் வருவதைத்தான் டைரக்டர் எம். எல். டாண்டன் விரும்பினார். ஆறு மாதங்கள் கல்கத்தாவில் படப் பிடிப்புக்காகத் தங்கியிருந்தோம். அங்கு ஈஸ்ட் இந்தியா ஸ்டுடியோவில் படம் எடுத்தார்கள். நான் பேச வேண்டிய வசனங்களை இரண்டொரு முறை பார்த்ததும் மனப் பாடமாகி விட்டது.



படத்துக்கு என்று நான் ஓர் அலங்காரமும் செய்து கொள்ளவில்லை. பஞ்சகச்சம் கட்டிக் கொண்டு பட்டை பட்டையாக விபூதியுடனும், யோக வேஷ்டியுடனும் நின்றேன். நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளில் எனக்கு என்றுமே ஈடுபாடு உண்டு. மனம் ஈடுபட்டுப் பாடினேன். படத்தில் எனக்கு நல்ல பெயரே கிடைத்தது. 'நந்தனு'ரில் நானும் கே. பி. எஸ்.ஸும்தான் முக்கியமான நடிகர்கள். மற்ற நடிகர்கள் சிவலிங்கம், கோபுரம், வயல் வரப்புகள், நந்திகேசுவரன் ஆகியவைதாம்!''

'நந்தனு'ரின் உதவி டைரக்டரான திரு எஸ். கே. வாசகம் திரை உலகின் அநுபவம் மிக்கவர்; 'நந்தனார்' திரைக்கதை, வசனம் எழுதியவரும் அவர்தான். கே.பி.எஸ். பாடுவதைக் கேட்க வடநாட்டுப் பிரபல நடிகரான கே. சி. டே ஷூட்டிங் சமயத்தில் வந்து விடுவார் என்று திரு எஸ். கே. வாசகம் கூறினார். சிதம்பரம் கோவிலுக்குள் சென்று படம் எடுக்க முயன்ற அவர்கள் பட்ட பாட்டையும் சுவாரஸ்யமாகக் கூறினார். காமிராவை எடுத்துக் கொண்டு உதவி டைரக்டர், அவரது உதவியாளர்கள், கே. பி. எஸ். எல்லாரும் வெளிப் பிராகாரத்தில் பிரவேசித்துப் படமெடுக்கப் போகும் சமயத்தில் கோவில் நிர்வாகிகள் படமெடுக்கக் கூடாது என்று ஒரே யடியாகத் தடுத்து விட்டனராம். பிறகு உதவி டைரக்டரும் காமிரா மேனும் தரிசனம் செய்யச் செல்லும் சாதாரண பக்தர்கள் போல் பூக்கூடைக்குள் காமிராவை மறைத்து வைத்துக் கொண்டு ஆலயத்தினுள் புகுந்து விட்டனர். அவர்களை யாரும் தடுக்கவில்லை. ஓசைப்படாமல் வேண்டிய 'ஷாட்டு'களை எடுத்துக் கொண்டு வெளியே வரும் வரையில் அவர்களுக்கு ஒரே நடுக்கம்தானும்!

'நந்தனார்' படத்தைப் பற்றி மேலும் விவரங்களை அறிய ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாளை நேரில் பார்த்துப் பேசலாமாஎன்று யோசித்துப் பின்னர் அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். ஏனெனில், ஸ்ரீமதி சுந்தராம்பாளிடம் சென்று ஏதாவது பேசலாம் என்று ஆரம்பித்தால், '' இசைச் செல்வம் முருகப் பெருமான் எனக்கு இட்ட பிச்சை. அதைக் கொண்டு ஆடும் மயில் மீது அமர்ந்திருக்கும் முருகனைப் பாடும் பணியையே பணியாகக் கொண்டு வாழ வேண்டும் என்பதே என் ஆசை....'' என்று தமக்கே உரிய அடக்கத்துடன் கூறி அவர் பேட்டியை முடித்து விடுவார் என்பதை நான் அறிந்திருந்ததுதான்.

—விஜயம்

“என்னுடைய மாமா, கதாதரர் என்று பேர், இங்கே இந்தக் காளி கோயிலில் அர்ச்சகராக இருக்கிறார். அவர் உங்களைப் பார்க்க வேணுமென்று.....” என்று ஹிருதயர் இழுத்தபோதே ஓடத்தில் வந்த நாரீமணியின் கண்கள் விரிந்தன. அவளுடைய உதட்டில் ஓர் ஆனந்தச் சிரிப்பு நெளிந்து தன்னை அழகுபடுத்திக் கொண்டது.

பரபரப்புடன், “அப்படியா? இதோ வந்தேன்!' என்று கூறிக் கொண்டே ஹிருதயரைப் பின்தொடர்ந்தாள் சந்நியாசினி.

கதாதரரின் அறையை அடைந்ததும் அவரைக் கண்ட அவளது கண்கள் அப்படியே பனித் துண்டமாயின. சிறிது பொழுதிலேயே பனி உருகத் தொடங்கியது. உறைந்திருந்த அவளது திருவாயும் திறந்து களிப்புத் திணறலில் உரைத்தது:

“ஆஹா, என் மகனே, நீ இங்கு அல்லவா இருக்கிறாய்! கங்கைக் கரையில் எங்கோதான் நீ இருக்க வேண்டும் என்று தெரிந்து உன்னை எங்கெல்லாமோ தேடிக் கொண்டிருந்தேனே! எத்தனை எத்தனை காலமாகவோ தேடிக் கொண்டிருந்தேனே! அதெல்லாம் வியர்த்தமாகவில்லை. கடைசி கடைசியாக உன்னைக் கண்டே விட்டேன்.”

அந்தச் சந்நியாசினிக்கு அப்போது சுமார் நாற்பது பிராயம் இருக்கலாம். என்றாலும் அமிருத தத்துவமாகிய பரம்பொருளை உபாசித்ததன் பலனாக, மூவா மருந்து உண்டவள் போல் அவள் யௌவன சௌந்தரியத்துடனே விளங்கினாள். உடலில்தான் யௌவனம். உள்ளத்திலோ, தான் அகில ஜீவராசிகளுக்கும் தாய் என்ற உணர்வு நிரம்பியிருந்தது. அகில ஜீவராசிகளிலும் இந்த கதாதரருக்கு ஆருயிர்த் தாயாகத் தன்னை உணர்ந்தாள் அவள்.

ஏதோ கல்பகோடி காலம் அவளுடன் பழக்கம் இருந்தது போல் கதாதரர் அவளருகே உட்கார்ந்து கொண்டார். அம்பாளிடம் உட்காருவது போலவே, தம்மை 'மகனே' என்றழைத்த இந்தத் துவராடைத் திருமாதின் அருகிலும் பச்சிளம் குழந்தையாக அமர்ந்தார். தாயை விட்டுப் பிரிந்திருந்து பிறகு கூடிய குழந்தை தன் மனசில் தோன்றியதை யெல்லாம் அவளிடம் பொரிந்து கொட்டுவது போல் கதாதரர் அந்தப் பெண்மணியிடம் என்னென்ன வெல்லாமோ சொல்லிக் கொண்டே போனார்.

'என்னென்ன வெல்லாமோ' என்று அவ்வளவு எளிதாகத் தள்ளி விடுகிற விஷயங்களா அவை? அற்புதம் செறிந்த அநுபவங்களாயிற்றே! கதாதரர் மட்டும் அறிந்திருந்த அந்த அற்புதங்கள் அன்று வெளிப்பட்டன.

“அம்மா, என்னுடைய உடம்பிலிருந்து அடிக்கடி ஒரு சந்நியாசி வெளியிலே வருகிறார். சாதனை புரியும்படி என்னிடம் ஆக்ஞாபிக்கிறார். செய்யாவிடில் தண்டிப்பேன் என்றும் அச்சுறுத்துகிறார். கையில் சூலத்தை வைத்துக் கொண்டு, 'நீ எல்லா எண்ணத்தையும் நிர்மூலம் செய்து விட்டு முழு இதயத்துடன் தியானம் புரியா விட்டால் உன் இதயத்தை இதனால் குத்திக் கிளறுவேன்' என்று மிரட்டுகிறார். அவர் யார்? உனக்குத் தெரிந்திருக்க வேண்



# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

21

டுமே, சொல் அம்மா'' என்று கேட்டார் கதாதரர்.

''தெரியாமல் என்ன குழந்தாய்? அவர்தான் உன் குரு. உன் மனசு என்னும் ஆசாரியர் அவரே'' என்றாள் அந்தப் பெண்மணி.

உருவங்கள் தத்துவங்களாவதுபோல், தத்துவங்கள் உருவங்களாவதும் உண்டு என்று முன்பே பல முறை கண்டிருக்கிறோம் அல்லவா?

துறவி மாதிடம் கதாதரர் கூறுவார்: ''அப்புறம் அம்மா, போன ஆண்டு நான் கமார்புகூரிலிருந்து ஸிஹாரிலுள்ள ஹிருதயனின் வீட்டுக்குப் பல்லக்கில் போகும்போது அற்புதங்கள் கண்டேன். குழந்தை மீனாக்ஷியை நாராயணன் எடுத்து வைத்துக் கொஞ்சுவது போல், அன்றைக்குத் தெள்ளிய நீல ஆகாசத்தின் மடியில் பசும் நிலங்கள் சார்ந்து நின்றன. சூரிய வெளிச்சமும் மேகத்தின் நிழலும் அவற்றில் மாறி மாறிப் படியும்போது அவை இளம் பச்சையிலும், கரும் பச்சையிலும் மாறி மாறி முழுகி எழுந்தன. பாட்டை ஓரத்தில் அத்தி மரங்



களும், ஆலமரங்களும் குளுமை தாவிக் கொண்டிருந்தன. எனக்கு இனம் தெரியாமல் ஒரே ஆனந்தமாக இருந்தது. அந்த ஆனந்தமே உருவம் எடுத்தாற் போல் திடீரென்று என் கண் முன் இரண்டு சுந்தர பாலர்கள் தோன்றினார்கள். அவர்கள் என்னிடமிருந்தே வந்தவர்கள் என்று உணர்ந்தேன். அவர்கள் ஒரே களிப்பும் கும்மாளமுமாக என்னைத் தொடர்ந்தார்கள். சில சமயம் மெதுவாக நடந்து பல்லக்குக்குப் பின் தங்கி விடுவார்கள். அப்புறம் இரைக்க இரைக்க ஓடி வந்து தொடருவார்கள். விளையாடிக் கொண்டே புஷ்பச் செடிகளின் அருகில் சென்று மலர்களைக் கொய்து வருவார்கள். என்ன என்னவோ பேசிச் சிரித்தபடியே அவர்கள் வெகு தூரம் என் பின் வந்தார்கள். பிறகு தோன்றினாற் போலவே திடுமென மறைந்தார்கள். எனக்குள்ளேயேதான் அவர்கள் மறைந்தார்கள் என்று உணர்ந்தேன். இது என் பிரமையா, நிஜமா? நிஜமானால் அவர்கள் யார் என்று நீ அறிவாய். எனக்கும் சொல் அம்மா.''

சந்நியாசினியின் கண்கள் கலங்கின. அவளது அழகிய நாசி நுனி சிவந்தது. உதடுகள் படபடத்தன.

''பிள்ளாய்! நீ கண்டதெல்லாம் உண்மைதான். நவத்வீபம் என்னும் இந்த வங்காளத்தில் விஷ்ணு பக்தி வெள்ளத்தைப் பாய்ச்சிய நிமாயி ஸ்வாமி, கௌரங்க தேவர், சைதன்ய மஹாப் பிரபு — அவரே நீ கண்டவர்களில் ஒருவர். மற்றவர் அவருடைய சிஷ்யரும், சகாவுமான நித்தியானந்தர். இருவரும் அவதார புருஷர்கள். அவ்விருவரும் நீயே'' என்று கூறி மெய் மறந்தாள்.

தர்மத்தைக் காக்கவென்றே வந்த அவதார புருஷர் கதாதரர் என்பதைத் தெரிந்து கொண்டு, முதன் முதலாக வெளிப்படக் கூறி விட்டாள் அந்தச் சந்நியாசினி. கதாதரருக்கு அது ஓர் அதிர்ச்சியாகவே யிருந்தது.

''என்ன சொல்கிறாய் தாயே! நானா அவதார புருஷன்? என்னைப் பைத்தியம் என்றல்லவா எல்லாரும் சொல்கிறார்கள்?'' என்று கள்ளமில்லாமல் கேட்டார்.

''பைத்தியமா? நீயா? பைத்தியங்களுக்குத் தாங்கள் புத்தி ஸ்வாதீனம் உள்ளவர் போலவும், பிறரைப் பார்த்தால் பைத்தியம் போலவும் தானே தோன்றும்? என் அப்பனே, நீ பைத்தியமில்லை.

''சாகேத புரியில் ராமச்சந்திரனாகப் பிறந்தவன் எவனோ, ஜானகியின் காந்தனாக வாழ்ந்த ரகுவீரன் எவனோ, திருஆய்ப்பாடியில் கிருஷ்ண சந்திரனாகப் பிறந்தவன் எவனோ, ராதையின் காந்தனாக வாழ்ந்த யதுவீரன் எவனோ — அவனே நீ.''

புதிதாக மகா மந்திரமொன்றைக் கண்ட மகரிஷி அதனை எவ்வளவு ஆழ்ந்த உணர்ச்சியுடன் ஜபிப்பாரோ அப்படி இந்த மொழிகளை அந்தரங்கத்திலிருந்து கூறினாள் சந்நியாசினி.

'ராமனாகவும் கிருஷ்ணனாகவும் இருந்தது நீயே' என்று அந்த உத்தம சந்நியாசினி கூறிய பின்னரும் நம் சரித்திர நாயகரை நாம் கதாதரர் என்று அழைக்க வேண்டியதில்லை. உலகமெல்லாம் அறிந்த ராமகிருஷ்ணர் என்ற திரு நாமத்திலேயே — உலகமெல்லாம் உள்ள ஆன்மிகப் பண்ணைகளான மடங்கள் எந்த நாமத்தில் எழுந்துள்ளனவோ, அந்த நாமத்திலேயே — இனி அவரை நாம் அழைக்கலாம். *

ஆனால் ராமகிருஷ்ணர் அவ்வளவு எளிதில் தாம் அவதார புருஷர் என்பதை ஒப்புக் கொள்ள வில்லை. மனிதனைத் தெய்வமாக்குவதற்காகத் தெய்வம் மனிதனாகும் போது, பிற மக்களில் எல்லாம் மறைந்திருக்கும் தெய்வீகத்தை அது புலர்த்தும்; ஆனால் தனது தெய்வத் தன்மையை மறந்து போகும். 'மறப்பது' என்று சொல்வதை விடத் 'துறப்பது' என்று சொல்வது பொருத்தமாக இருக்கலாம். மக்களோடு மக்களாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தெய்வம் செய்யும் மகாத் தியாகம்இது. தாரக நாமமாகிய ராமனும் தான் அவதாரம் என்பதை அறியாதது போலவே வாழ்ந்தான் அல்லவா ?

அம்பிகையை எண்ணித் தாம் அலறுவதையும், சிரித்து மகிழ்வதையும், அவளது தரிசனத்தைப் பெறுவதையும், பெற்ற தரிசனத்தைச் சந்தேகிப்பதையும் கூறிய ராமகிருஷ்ணர், ''தெய்வத்துக்காக ஏங்கும் என்னையா, தெய்வ தரிசனம் பெற்றோமா என்று திடமாக அறியாத என்னையேவா தெய்வம் என்கிறாய்? என்றால் நம்ப முடிய வில்லை தாயே '' என்றார்.

அவதாரமாக வைத்து ராமகிருஷ்ணரின் அனுபவங்களை அவருக்கு விளக்க

* கதாதரருக்கு ராமகிருஷ்ணர் என்ற பெயர் எப்படி, எப்போது ஏற்பட்டது என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. சந்நியாசினி வந்ததிலிருந்து நாலாண்டுகளுக்குப் பின்னர் கதாதரருக்குச் சந்நியாசம் அளித்த அத்வைத ஞானியாகிய தோதாபுரி அளித்த துறவற நாமமாக அது இருக்கலாமோ என்று கருதப்படுகிறது.

# புகழ்ச்சிக் குரிய தலைவி

அவள்தான் வகுப்பில் ஒழுங்கை நிலைநாட்டும் தலையாய மாணவி, அவள் தன்னம்பிக்கையோடு, தான் அணிந்திருக்கும் பிரகாச முடன் வெண்மையான ஆடை களால் பெருமையும் கொண்ட வள்: வெள்ளை ஆடைகளை, துவைத்தபின், "ராபின் புளூ" கலந்த நீரில், அவள் தாய கடைசியாக அலசுவதால், இத்தகைய பிரகாசம் ஏற்படு கிறது.

## ராபின் புளூ




**வெள்ளைத் துணிகளை பிரகாசிக்கச் செய்கிறது**

இயலாத அந்தப் பெண்மணி அவரை மனிதராக வைத்து விளக்கலானாள். "உன் நடவடிக்கைகள் பித்தில் பிறந்த வையல்ல, மகனே! "ஆண்டவனிடம் சித்தத்தை வைத்த உண்மையான பக்தர்கள் எவர்களோ அவர்களுக்குரிய மகா பாவத்தில் நீ அமிழ்ந்திருக்கிறாய். ராதையும், சைதன்யரும் உற்ற நிலையை நீ பெற்றிருக்கிறாய்" என்றாள்.

மஹா பாவம் என்பது பத்தொன்பது குணங்கள் அடங்கிய பரம பக்தி நிலை. இறை நினைவில் மயிர்க் கூச்செறிவதும், உடல் புளகிப்பதும், நீர் சோர்வதும் இதில் அங்கங்களாகும்.

ராதிகாதேவியும், கௌரங்க தேவரும் மட்டுமின்றி,

> மெய்தான் அரும்பி விதிர் விதிர்த்
> துன் விரை யார் கழற்கென்
> கைதான் தலைவைத்துக் கண்ணீர்
> ததும்பி வெதும்பி

என்றும்,

> உடல் குழைய என்பெலா நெக்குருக
> விழி நீர்கள்
> ஊற்றென வெதும்பியூற்ற....
> படபடென நெஞ்சம் பதைத்துள்
> நடுக்குறப்
> பாடியாடிக் குதித்து

என்றும் பாடியுள்ள நம் தமிழகத்தின் அடியார்களெல்லாம் அநுபவித்த நிலை அது. உலகெங்கிலுமுள்ள உத்தமமான மெய் அடியார்கள் உற்ற நிலை அது.

உலகத்தவர்களின் சாமானிய பாவங்களாகிய அன்பையும், அழுகையையும், ஆனந்தத்தையும் கடவுளின்பால் திருப்பும் போது அவை 'மகா' என்ற அடைமொழி பெற்ற பெரும் பாவங்களாகி விடுகின்றன.

பொழுது ஏறிக் கொண்டே போயிற்று. தேவிக்கு நிவேதனம் செய்த கந்தமூல பழங்களையும் வெண்ணெயையும், இனிப்புப் பண்டங்களையும் அந்தப் பெண்மணிக்கு அளித்தார் ராமகிருஷ்ணர்.

அவரையே பார்த்தாள் அவள்.

'குழந்தை உண்ணும் முன்பு அன்னை உண்பதுண்டா?' இந்தக் கேள்வி அவள் பார்வையில் நிறைந்திருந்தது.

ராமகிருஷ்ணர் முதலில் உண்டார்.

பிறகு அவள் தேவதா ஆராதனம் செய்து விட்டு, அந்தப் பிரசாதத்தை உட்கொண்டாள்.

பகல் பொழுது வந்தது. ஸ்ரீ ராமபிரானைப் பூஜிக்கப் பஞ்சவடிக்குக் கிளம்பினாள் சந்நியாசினி—அவனுக்கு நிவேதனம் சமைப்பதற்குத் தேவையான பொருள்களை ஆலய உக்கிராணத்திலிருந்து எடுத்துக் கொண்டு.

ஹிருதயருக்கு வியப்பாக இருந்தது. 'சர்வ சகஜமாக இதுவே தனது வாசஸ்தானம் போலல்லவா இவள் நடந்து கொள்கிறாள்? மாமாவும் இவள் இங்கேயே இருக்க வேண்டியவள்தான் என்று எண்ணுவதாக அல்லவா தெரிகிறது? யார் இவள்?'

உண்மையிலேயே அவள் யார்? நம் மீது விடாமல் வீசிக்கொண்டிருக்கிற காற்று—நாம் சுவாசித்து உயிர் வாழ அவசியமாக உள்ள காற்று — எங்கு பிறந்தது, நம்மை அடையு முன் எங்கெல்லாம் சஞ்சரித்தது என்பதை நாம் அறிவோமா? ராமகிருஷ்ணரின் சாதனைக்குப் பிராண வாயுவாக இருந்த இந்தப் பெண்மணியும் எங்கே பிறந்தவள், வளர்ந்தவள் என்பதை இதுவரை யாரும் நிச்சயமாக அறியவில்லை.

'யோகேச்வரி என்று பெயர் பெற்றவள் அவள்; தந்திர சாஸ்திரங்களைக் கசடற உபாசித்தவள்; சகல தந்திரங்களையும் அநுஷ்டித்திருந்தாலும் சாக்தர்களின் ஒரு பிரிவினரான 'பைரவ' சம்பிரதாயத்தைச் சிறப்பாகப் பின்பற்றியதால் அவள் பைரவி பிராம்மணி என்று வழங்கப்பட்டாள்' - என்ற விவரங்களே நாளா வட்டத்தில் தெரிய வந்தன. வங்காளத்தைச் சேர்ந்த அவள் மணமானவளா ஆகாதவளா என்பது இன்றுவரை தெரியவில்லை. தான் மூன்று பேருக்குத் தந்திரசாதனையைப் போதிக்க வேண்டும் என்பதாக தேவியின் ஆக்ஞை என்றும் இருவரை ஏற்கனவே பயிலுவித்துவிட்டு மூன்றுமவருக்காகவே தக்ஷிணேசுவரம் வந்திருப்பதாகவும் அவள் தெரிவித்தாள்.

இனி, தந்திரங்கள் என்றால் என்ன என்று சுருக்கமாகத் தெரிந்துகொள்வோம். மாயாஜாலங்கள் அல்ல தந்திரம் என்பது. வழிபாட்டு முறைகளே தந்திரங்கள் எனப்படும். தெய்வ வழிபாடு என்பது வேத காலத்திலிருந்தே இங்கு இருந்திருக்கிறது. வேத காலத்துப் பெருமக்கள், உபநிஷதத்தை அளித்த உயர் மக்கள், காண்பனவெல்லாம் ஈசுவர சக்தியின் தோற்றமே என்பதை அறிந்தவர்கள். அந்த ஈசுவர சக்தியைப் பல தேவதைகளாகப் பெயரிட்டு, ஈசுவரனுக்கடங்கி இப் பிரபஞ்சத்தைப் பரிபாலிக்கும் பல அதிகாரிகளாகக் கருதி அவர்களைத் திருப்திப் படுத்தி உலகத்துக்கு நல்வாழ்வு பெறவும், இயற்கையை நமக்கு அநுகூலமாக அவர்கள் ஆக்கித் தரவும் யாகம்

முதலிய கர்மங்களைச் செய்து வந்தனர். இதுதான் பாரத சரித்திரத்தின் ஆரம்ப கால வழிபாடு. ராமாயண, மகாபாரத காலங்களிலெல்லாம் இப்படி ஞான உபாயங்களாகவே கர்மங்கள் அனுஷ்டிக்கப்பட்டன. ஆனால் காலக் கிரமத்தில் கர்மங்கள் மட்டும் முக்கியம் பெற்று அவற்றின் மர்மங்கள் மங்கியதால் சநாதன தர்மம் தனது இயல்பான பெருமையை இழக்கத் தொடங்கியது. பரம்பொருள் என்ற ஒன்றின் நினைவின்றி, நம்மில் உள்ளது எதுவோ அதுவே எல்லாவற்றுக்கும் காரணம் என்ற நினைவின்றி, தேவர்களுக்குரிய கர்மங்கள் செய்யப்பட்டன. தேவர்களான அதிகாரிகளை நம் வசமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஒரே கருத்தில் செய்த யாக யக்ஞங்களில் அன்பு குறைந்தது. நாமேயான பரம்பொருளிடம் கொள்ளும் அன்பை அதிகாரிகளிடம் கொள்ள முடியுமா? ஆத்ம விடுதலையான மோக்ஷத்தில் நாட்டம் குறைந்து, இறப்புக்குப் பின் இன்ப வாழ்வு வாழ்கிற ஸ்வர்க்க போகங்களுக்காகவே கர்மங்கள் நடைபெற்றன.

கௌதம புத்தர் தோன்றிய பின் இந்த நிலை மாறியது. வேத கர்மாக்களை அடியோடு கண்டித்தவர் அவர். ஆத்மா என்ற பெயரைச் சொல்லாமலே, அதன் இலட்சியத்தையும் கூறாமலே, அகப் பொருளில் மக்கள் மனசை மீண்டும் திருப்பி விட்டார் புத்தர். ஆத்ம சிந்தனையில் ஈடுபடுவது சாமானிய மக்களுக்கு முடிகிற காரியமா? பொருட்களை வைத்துக்கொண்டு ஸ்தூலமான புறச் செயல்களில் ஈடுபடத்தான் அவர்களால் முடியுமே தவிர தம்மையே வைத்துக் கொண்டு ஸூக்ஷ்மமான உணர்வுகளில் திளைக்க இயலவில்லை. இதன் விளைவாகத்தான் ஸ்தூலத்தை ஸூக்ஷ்மத்தோடு இணைக்கவும், பொருளைச் சிந்தனையுடன் இணைக்கவும், புறத்தை அகத்துடன் இணைக்கவும் தந்திர சாஸ்திரம் பிறந்தது. உருவும் குணமுமற்ற ஆத்மாவாகிய பரம்பொருளைச் சிந்திப்பது கடினமாதலால், அதனை உருவும், குணமும் படைத்த தெய்வங்களாக வடித்துத் தந்தது தந்திர சாஸ்திரம். எல்லாமாகிய பரம்பொருள் தன்னை நாடியவர்களுக்காகத் தெய்வ வடிவங்களாகிறது என்ற உண்மையில் பிறந்தவை தந்திரங்கள். தெய்வங்களைக் கூட எப்போதும் **சிந்திப்பது** இயலாது. எனவே **செயல்** மூலமாகவும் தெய்வத்திடம் அழைத்துச் செல்கிறது தந்திர சாஸ்திரம். இந்தச் செயல்தான் புறப் பூஜை. இயற்கையில் இருக்கும் அழகுகளையெல்லாம் இயற்கையான உணர்ச்சிகளையெல்லாம் தெய்வத்தின்பாற் படுத்தும் வழிமுறையே பூஜை. வேத கர்மாக்களைப் போலன்றி இந்தப் பூஜா கர்மத்தில் ஒருவன் தான் வணங்கும் தெய்வம் பரம்பொருள் என்பதையும், அது இக உலக இன்பம் மட்டுமின்றி ஆத்ம விடுதலையும் அளிக்க வல்லது என்பதையும் மறக்காமல் இருக்கிறான். வேத கர்மாக்களில் போலன்றி இங்கு உணர்ச்சிகளுக்கு இடம் இருப்பதால், அன்பு செழிக்கிறது. சுருக்கமாகச் சொன்னால் வேதத்தின் கர்ம காண்டத்தைப் போலப் புறப் பொருட்களைக் கொண்டு செய்யும் சடங்குகள் இருப்பினும், வேதத்தின் நிறைவிடமும் ஞான காண்டமுமாகிய உபநிஷதத்தின் வழியில் அகப்பொருளால் புறத்தையும் புறப்பொருளால் அகத்தையும் துலக்கி ஆத்ம வாழ்வில் நிலைக்கும் உபாயமே தந்திர சாஸ்திரம். பரம்பொருளைத் தெய்வங்களாகக் காணவழி வகுக்கும் தந்திரங்கள் இறுதியில் தெய்வங்களைப் பரம்பொருளாக அநுபவித்து ஒன்றுகிற ஆத்ம விடுதலையை அளிக்கின்றன.

புறப் பொருளால் செய்கிற பூஜை மட்டுமின்றி, ஜபம், தியானம், உடலிலுள்ள பிராண சக்தியை எழுப்பிச் சிவமாக்குவது இவையும் தந்திரத்தில் அடங்கும். இயற்கையின் எல்லையற்ற பரப்பு முழுவதிலும் பரம்பொருளின் சக்தியைப் பல படித்தாகக் காட்டும் தந்திர சாஸ்திரம், இயற்கை உணர்ச்சிகளான அன்பு, வீரம், பயம், பீபத்ஸம், பால் உணர்வு யாவற்றையும் கொண்டு வழிபாடு செய்யும் அறுபத்துநாலு சாதனங்களைக் கூறுகிறது. இடுகாட்டில் சவத்தின் மீதிருந்து ஜபிப்பதிலிருந்து, கல்யாணக் கோலத்திலுள்ள அம்பிகைக்கு அலங்கரிப்பது வரை எல்லாம் இவற்றில் அடங்கும். எதிலும் பரம்பொருளின் சக்தியைக் காண வேண்டும் என்பதற்காக, நாம் கூச்சம் கொள்கிற பல சாதனைகளிலும் சாதகனை ஈடுபடுத்தும் சில தந்திரங்கள் உண்டு.

இந்தச் சிலவற்றின் காரணமாகத் தந்திர சாதனையின் மகத்துவமே பிற்காலத்தில் குறைந்து வரத் தொடங்கியது. வேத கர்மங்களைப் புரிந்து கொள்ளாத பிற்காலத்தவரால் அவை மிகமிக நலிவுற்றது போல், தந்திரங்களின் கருத்தைப் புரிந்து கொள்ளாமல் இன்ப நுகர்ச்சி நோக்கத்துடன் அவற்றில் தங்களுக்குப் பிடித்த சில சாதனங்களைப் பலர் மேற்கொண்டதால், பிற்காலத்தில் தோன்றிய நாம சங்கீர்த்தன பக்தி






மாப்பிள்ளை: **பிரின்சிபால் ஸார்! உங்க அட்மிஷன் சீசன் முடிந்துவிட்டது. நானும் தாலிகட்டி முடிச்சாச்சு. இனிமே நம்ம ரெண்டுபேரையும் சீண்டுவாரில்லே.**

**அட்மிஷன் 'க்யூ'வைப் பார்த்து மிரண்டு போன பிரின்ஸ்பால் மாறு வேடத்தில் தம் அறைக்குள் நுழைகிறர்.**

---

இயக்கம் தந்திர மார்க்கத்தையே நலிவுறச் செய்தது. எந்த வங்கத்தில் தந்திரங்கள் மிகவும் சிறப்பாக அநுஷ்டானத்தில் இருந்தனவோ அங்கும் அவை மங்கத் தொடங்கின.

ஈசுவரனையும், திருமாலையும் விநாயகனையும் — எல்லாத் தெய்வங்களையுமே — தந்திர சாஸ்திரப்படி ஆராதிக்கலாம். என்றாலும் காண்பதையெல்லாம் பரம்பொருளின் சக்தியாகக் காண வேண்டும் என்பதை ஆதாரமாகக் கொண்ட தந்திர சாஸ்திரங்களில் சக்தியாகிய தேவியே முக்கியமானவள்.

பசுபாவம், வீரபாவம், திவ்யபாவம் என மூன்று உபாஸனை முறைகளைத் தந்திரங்கள் கூறி, படிப்படியாகச் சாதகனை ஜீவ நிலையிலிருந்து சிவ நிலைக்கு உயர்த்தும்.

ராமகிருஷ்ணரின் இயல்பான அநுபவங்களை மெய்ப்பிக்கவும், தவருன அநுஷ்டானங்களின் காரணமாக இகழ்ச்சிக்கு உரித்தாகிவிட்ட தந்திர சாஸ்திரங்களின் உண்மையை நிரூபிக்கவும் தேவி திருவுள்ளம் கொண்டு தூண்டியதன் மீதே பைரவி பிராம்மணி ராமகிருஷ்ணரை வந்தடைந்தாள். கன்னிகையை வளர்த்துத் தக்க வரனிடம் ஒப்பிப்பது போலத் தனது அநுபவங்களை ராமகிருஷ்ணருக்கு வழங்குவதற்காக அவரைத் தேடி வந்தாள் யோகேச்வரி பைரவி பிராம்மணி.

—

**சா**க்த வழிபாடுகளில் தேர்ந்திருந்த போதிலும் சமரஸ உணர்வுடன் குல தெய்வமான ராமபிரானை வழிபடுபவள் பைரவி பிராம்மணி.

ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன் தண்டகாரண்ய பஞ்சவடியைப் பாவனப்படுத்திய பரமனைத் தசுஷிணேசுவரத்துப் பஞ்சவடியில் பூஜித்தாள் பைரவி. நிவேதனத்தை ராமனுக்குப் படைத்து விட்டுத் தியானத்தில் ஆழ்ந்தாள்.

தமதறையில் இருந்த ராமகிருஷ்ணர் திடீரெனப் பரவச நிலையை அடைந்தார். ஏதோ ஒரு மகா சக்தியில் வசீகரமானவர் போலத் தமது உணர்வின்றி அங்கிருந்து கிளம்பினர். நேராகப் பஞ்சவடியை வந்தடைந்தார்.

பைரவி பிராம்மணியின் அல்லிக் கண்கள் மடலவிழ்ந்தன. அவள் எதிரில் நிவேதன உண்டி வகைகளை ராமகிருஷ்ணர் உண்டு கொண்டிருந்தார்!

ராமகிருஷ்ணரா? இல்லை. பைரவி பிராம்மணிக்கு மேனி புளகித்தது. சாக்ஷாத் ராமச்சந்திரமூர்த்தியே அவள் அருகில் அமர்ந்து கொண்டு நிவேதனத்தைப் புசித்துக் கொண்டிருந்தார்.

''அம்மா, அபசாரம் செய்துவிட்டேன். நான் வேண்டுமென்று இப்படிச் செய்யவில்லை தாயே. என்னையும் அறியாமல் இப்படி ஐயனுக்குரிய நிவேதனத்தை உண்டுவிட்டேன்'' என்று வெட்கமும், வேதனையும், வியப்புமாகக் கூவினர் பரவச நிலை கலைந்த ராமகிருஷ்ணர்.

''நீ ஏதும் தவறு செய்யவில்லை குழந்தாய். நான்தான் காலையிலேயே நீ யார் என்று சொன்னேனே...'' என்று கூறிய பைரவி பிராம்மணி, ராமகிருஷ்ணர் மிகுதி வைத்திருந்த உணவைப் பிரசாதமாகக் கருதி உண்டு உதரமும் உள்ளமும் நிறைந்தாள்.

(தொடரும்)

# பிரார்த்தனை புரியும் பூச்சி



அருகில் உள்ளதைப் போன்ற பூச்சியைத் தோட்டங்களில் பார்த்திருப்பீர்கள். பச்சையாக, இலையும் குச்சியுமாக இருக்கும். இங்கு நீங்கள் காண்பது இந்தப் பூச்சியின் மூன்றில் ஒரு பாகம்தான். இதற்கு 'மாண்டிஸ்' என்று பெயர். கைகூப்பித் தொழுவது போன்ற நிலையில் இருப்பதால் 'இதற்குப் பிரார்த்தனை செய்யும் மாண்டிஸ்' என்றுகூட ஒரு பெயர். இதன் குணத்துக்கும் பெயருக்கும் சம்பந்தமே கிடையாது. பகாசுரப் பசியையுடைய பூச்சி இது. செடியோடு செடியாகக் கண்டு பிடிக்க முடியாதபடி தனது ராட்சதக் கிடுக்கிக் கைகளை விரித்தபடி இருக்கும். வண்டு, வண்ணத்துப் பூச்சி, ஈக்கள் இப்படி இதன் அருகில் வரும் எதையும் இது பிடித்துத் தின்று விடும். இன்னும் அதிசயம் என்ன தெரியுமா? தங்கள் கணவன்மார்களைப் பிடித்து அங்கம் அங்கமாகக் கடித்துத் தின்னும் பயங்கர ராட்சத குணம் படைத்தவை பெண் மாண்டிஸ்கள். பெண் மாண்டிஸ்கள் கணவனைக் கடித்துத் தின்னும் காட்சியைக் கண்டு ரசிப்பதில் சீனர்களுக்கு ரொம்ப உற்சாகம்.

# நாய்க் காலர்



குட்டி நாய்கள் இரண்டு விளையாடும்போது பார்த்திருக்கிறீர்களா? ரொம்ப சுவாரசியமாக இருக்கும். கந்தைத் துணி ஏதாவது இருந்தால் அதை இரண்டும் கவ்வியபடி வெவ்வேறு திசையில் பிடித்து இழுக்கும். இதைப் பார்த்து ஜெர்மனி தேசத்துக் குழந்தைகள் ஒரு விளையாட்டை விளையாடுகிறார்கள். இரண்டு பேர் தவழ்ந்த நிலையில் எதிரும் புதிருமாக இருப்பார்கள். அவர்களின் தலைகள் ஒரு கெட்டியான துணி வளையத்துக்குள் நுழைக்கப்பட்டிருக்கும். இரண்டு பேருக்கும் நடுவில் தரையில் ஒரு கோடு கிழித்திருக்க வேண்டும். 'ரெடி' என்றதும் இந்த இருவரும் மற்றவனைத் தம் பக்கமாக இழுக்க வேண்டும். 'டக் ஆப் வார்' மாதிரி — ஆனால் கைகளைப் பயன்படுத்தாமல். கோட்டைத் தாண்டித் தம் பக்கத்துக்கு மற்றவனை யார் இழுத்து விடுகிறானோ அவனே ஜயமடைந்தவன். ஒரு நிமிஷத்துக்குள் என்று நேரம் குறிப்பிட்டு இதை விளையாடலாம்.

# பங்கு பிரியுங்கள்



ஒரு ஜமீந்தாருக்கு நான்கு பிள்ளைகள். அவரிடம் நான்கு அரண்மனைகள் இருந்தன. அதேபோல நான்கு தோட்டங்களும் இருந்தன. ஜமீந்தார் கடைசிக் காலத்தில் ஆஸ்திகளைத் தம் குமாரர்களுக்குச் சமமாகப் பங்கு போட்டுத் தர விரும்பினார். ஒவ்வொருவருக்கும் ஓர் அரண்மனையும் ஒரு தோட்டமும் வரவேண்டும். அது மட்டுமல்ல. ஒவ்வொருவரின் நிலமும் உருவ அமைப்பிலும் மற்றவனுடையதைப் போலவே இருக்க வேண்டும் என்று விரும்பினார் அவர். ஜமீந்தாரின் விருப்பப்படி அதை எப்படிப் பிரிப்பது? முயன்று பார்த்து முடியாவிட்டால் எதிரேயுள்ள இதோ இதுதான் விடை:





## உங்கள் ஆல்பத்துக்கு

தலை முடியை முன்னால் கொண்டையிட்டு முடித்து நிற்கும் இந்த மனிதர் யார் என்று தெரியவில்லையா? செய்திகளில் அடிக்கடி நேபா (NEFA) என்ற வார்த்தை அடிபடுகிறதே கேள்விப்பட்டதுண்டா? நம் பாரதத்தின் வட கிழக்கு எல்லைப்புறத்துக்குத்தான் 'நேபா' என்று பெயர். அந்த அஸ்ஸாம் மாகாணத்தில் உள்ள ஆதிவாசிதான் இவர். இவர் சாதாரண ஆளல்ல. கிராமத் தலைவருங்கூட.

# டெலிவிஷன்



'டெலிபோன்' மூலமாக உன் நண்பனுக்கு ஒரு மனிதனின் படத்தை அனுப்பமுடியுமா? முடியும். உனக்குத் திகைப்பாக இருக்கலாம். டெலிபோன் மூலம் செய்தியைத்தான் அனுப்பலாம். படத்தை எப்படி அனுப்புவது? ஒரு 'கிராப்' பேப்பரையும் பென்சிலையும் எடுத்துக் கொள். டெலிபோன் மூலம் உன் நண்பனைக் கூப்பிட்டு அவனையும் அதே போன்று கிராப் பேப்பரையும் பென்சிலையும் எடுத்து வைத்துக் கொள்ளச் சொல். கிராப் காகிதத்தில் நீ முன்னதாக ஒரு மனிதனின் படத்தை வரைந்து கொண்டிருக்க வேண்டும், நிழற்படமாக. இப்போது போன் மூலமாக மனிதன் படத்தின் பாகங்கள் உள்ள கட்டங்களை கருப்பு, வெள்ளை என்று மாற்றி வரிசையாகச் சொல்லிக் கொண்டு வா. போனின் மறு பக்கத்தில் உள்ள உன் நண்பன் தன்னிடமுள்ள கிராப் காகிதத்தில் நீ குறிப்பிடும் கட்டங்களைப் பென்சிலால் கருப்பாக்கி வருவானானால் கொஞ்ச நேரத்தில் நீ வரைந்துள்ள மனிதனின் உருவம் அவன் கிராப் காகிதத்துக்குப் போய்ச் சேர்ந்து விடும்.

இதே முறையில்தான் 'டெலிவிஷன்' வேலை செய்கிறது. (ரேடியோவில் குரலைக் கேட்கிறோம். டெலிவிஷனில் பாடுவோர், பேசுவோர், நடிப்போரின் உருவத்தையும் காணலாம்.) ஒலியை மின்சாரமாக மாற்றித் தரப்படுகிறது ரேடியோவில். டெலிவிஷனில் ஒலியோடு ஒளியும் மின்சாரமாக மாற்றப்பட்டு மறுபடியும் அந்த மின் அலைகள் ஒளியாக மாற்றப் படுகின்றன. இது எப்படி?

டெலிவிஷன் அமைப்பின் அடிப்படையான அம்சம் இரண்டு டியூப்கள். (பெரிய பல்ப் போன்றவை) காட்சிகளை டெலிவிஷனில் காட்டுவதற்குச் சினிமாப் படப் பிடிப்பைப் போல ஒரு காமிரா இயங்கும். இந்தக் காமிராவில் உள்ள டியூப் காட்சிகளைப் பல லட்சம் புள்ளிகளாக்கிக் கிரகித்துக் கொள்ளுகிறது. வீடுகளில் உள்ள டெலிவிஷன் செட் (ரிஸீவிங் செட்)டில் உள்ள டியூப் இந்தப் புள்ளிகளை ஒன்று சேர்த்துப் படமாக்கிக் காட்டுகிறது. ஆகவே ஒரு வகையில் இந்த 'டியூப்'கள் இரட்டைப் பிறவிகள். இரண்டும் உணர்ச்சி மிக்கவை. ஒளி பட்டதும் உடனே கிரகித்துக் கொள்ளக்கூடியவை.

'டி. வி.' காமிராவில் உள்ள டியூபினுள் இந்த கைய உணர்ச்சிமிக்க திரை ஒன்று இருக்கிறது. இது பல்லாயிரக்கணக்கான புள்ளிகளால் ஆக்கப்பட்டது. இதன் மீது காட்சிகள் லென்ஸ் மூலம் பாய்ச்சப் பட்டதும் இந்த ஒவ்வொரு புள்ளியும் தன் மீது விழும் ஒளிக்கு ஏற்ப மின்சாரத்தை உற்பத்தி செய்கிறது. அதிக ஒளி விழுந்தால் அதிக மின்சாரம். இப்படி உற்பத்தியான மின்சாரத்தில் 'காதோட் ரே' என்ற ஒரு சக்தி செலுத்தப்படுகிறது. நெகடிவ் மின்சாரத் துகள்களான எலக்ட்ரான்கள்தான் இந்தக் காதோட் ரே. இந்த எலக்ட்ரான் ஒளி அலைகள் டியூபினுள்ள திரையின் மீது இடமிருந்து வலமாகச் செல்லும்படி செய்கிறார்கள். அடுத்தடுத்து ஒன்றன் கீழ் ஒன்றாக இந்தக் கோடுகள் தொடர்ந்து ஓடும். இப்படித் திரையில் விழும் காட்சி, எலக்ட்ரான் கோடுகளால் பூர்த்தி பெறும். இதை ஸ்கானிங் (கூறு போடுதல்) என்று சொல்கிறார்கள். ஒரு காட்சி 405 கோடுகளால் கூறு போடப்படும். இதற்கு ஆகும் நேரம் 1/25 விநாடிகள். ஒரு காட்சியை இப்படிக் கூறு போட்ட பின் அடுத்த காட்சியைக் கூறு போட மறுபடி மேலிருந்து கோடு போடத் தொடங்கும். திரையில் விழும் ஒவ்வொரு சிறு பகுதியிலும் இந்த மின் கதிர் பாயும் போது வீரியம் மிகுந்த, வீரியம் குறைந்த மின் அலைகள் — படத்தின் ஒளிக்குத் தக்கபடி — உண்டாக்கப்பட்டு அது கம்பிகள் மூலம் எடுத்துச் செல்லப்படுகின்றன. இந்த மின்சாரத்தைப் பெரிதாக்கி 'எலக்ட்ரோ மாக்னட்' அலைகளாக ஒலிபரப்புகிறார்கள்.

டெலிவிஷன் ரிஸீவிங் செட்டிலும் 'காதோட்ரே டியூப்' ஒன்று இருக்கிறது. இதன் ஒரு முனை படங்களை உருவாக்கும் திரையாகச் செய்யப்பட்டுள்ளது. இங்கு மின்சாரம் ஒளியாக மாறுகிறது. இதில் காதோட் ரே மின் கதிர் பாய்ந்ததும் ஓர் ஒளி உண்டாகும். இந்த ஒளி (ஸ்டுடியோவில் காட்சியைக் கூறுபோட்ட நிலையிலேயே) இடமிருந்து வலமாக மேலிருந்து கீழாக வரிசைக் கோடுகளாகத் திரையில் விழ ஆரம்பிக்கும். கோடுகளின் பிரகாசம் மாறுபட்டிருக்கும். காட்சியின் ஒளிக்கு ஏற்றபடி பிரகாசமாயும் மங்கலாகவும் உள்ள கோடுகள் தொடர்ந்து படியும் போது திரையில் அது ஒரு காட்சியாக உருவாகி விடும். ஒரு காட்சி உருவாக 1/25 விநாடியாகும். உடனே அடுத்த காட்சி. ஒவ்வொரு விநாடியிலும் 25 நிலையான படங்கள் அந்தத் திரையில் உருவாக்கப்படுகின்றன. இந்த ஒவ்வொரு படமும் 1,90,000 மின் ஒளிப் புள்ளிகளால் ஆக்கப்பட்டதாகும். நம் கண்களுக்குத்தான் ஒரு சக்தி உண்டே. ஒன்றைப் பார்த்தால் சில விநாடிகள் அது நம் பார்வையிலேயே இருக்கும். அடுத்த காட்சி அதற்குள் அதன் மீது படியும் போது தொடர்ந்து இடைவெளி இல்லாமல் காட்சி வரிசையை, அதன் சலனங்களை நம்மால் காண முடிகிறது. இந்த முறையில் டெலிவிஷன் 'ரிஸீவிங்' செட்டின் திரையில் விழும் காட்சித் தொடர்களையும் நமது கண் பார்த்து அறிவிக்கிறது.







# இதயத்தில் நீ

ஒரு வாலிபன் என்றால் ஒரு பருவப் பெண்ணைக் காதலித்துக் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் அவளோடு களியாட்டம் போடுவதுதான் அவன் வேலை; ஒரு பெண் என்றால், காதலனோடு ஓடியாடிக் குலாவுவதுதான் அவள் வேலை. காதலைத் தவிர வேறு எத்தனை உயர்ந்த பாசங்கள் உலகில் இருக்கின்றன? மூச்! அவைகளைப் பற்றிப் பேசப்படாது. முக்தா பிலிம்ஸின் ''இதயத்தில் நீ'' படத்தில் வரும் காதல் காட்சிகளுக்கு முடிவே இல்லையோ என்று தோன்றுகிறது.

வெள்ளைக்காரப் பெண் உடையிலும், நாடோடிப் பெண் உடையிலும் கவர்ச்சியாகத் தோன்றி, தேவிகா எப்படியெல்லாமோ நடிக்கிறார். அந்த நடிப்புக்களிலெல்லாம் நாம் ஈடுபட முடியாவிட்டாலும் அவர் கண்ணீர் விடும் கட்டங்களில் கரைய முடிகிறதே அது போதும். அவர் அப்பாவிடம் காட்டும் அசாத்திய அன்பில் யாரையும் நெகிழச் செய்ய முடிகிறதே!

ஜெமினி கணேசன் காதல் காட்சிகளில் செலுத்திய கவனத்தைக் கண்ணீர் சிந்தும் கட்டங்களில் செலுத்தி யிருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

வில்லனாக வரும் எம். ஆர். ராதா பின்னால் நல்லவனாக மாறியதும் அருமையாக நடித்திருக்கிறார். அப்பொழுது முக பாவங்களும் பேச்சும் பிரமாதமா யிருக்கின்றன.

தங்கவேலு — நாகேஷின் தமாஷ்கள் தமாஷாகவே இருக்கின்றன.

டி. எஸ். முத்தையாவின் நடிப்பை முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். மிகவும் இயல்பாக நடித்திருக்கிறார். அவர் உறவு முறையோ, குடும்பத்தில் அவருக்கு உள்ள தொடர்போ சரியாக விளக்கப்படாததால் அவரை மனம் விட்டுப் பாராட்டத் தோன்றவில்லை.

காதல் காட்சிகளில் ஆரம்பமாகும் கதை எப்படியெல்லாமோ போய், மர்மங்களிலும், குழப்பங்களிலும் சிக்கித் தடுமாறி, நீதி மன்றத்தில் மன்றாடி, சிறையில் அடைபட்டு, ஒரு கொலைக் குற்றத்தில் அகப்பட்டு, கடைசியில் சுபமாக முடிகிறது. ஒருவாறு கதை முடிந்தவரையில் சரிதானே!

காதலர்கள் களிப்புடன் ஓடி விளையாடும் காட்சிகளில் ஒளிப்பதிவு திறமையாகக் கையாளப்பட்டிருக்கிறது.

திரைக் கதையில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய வேடிக்கை என்னவென்றால் ஒவ்வொரு பாத்திரமும் ஏதோ ஒரு மர்மத்தை வெளியிடாமல் மனசில் வைத்துக் கொண்டு 'சஸ்பென்'ஸை வளர்ப்பதுதான். ஆனால் எதுவுமே பொருத்தமாயில்லையே! கதையை இவ்வளவு செயற்கையாகச் செய்திருக்க வேண்டாம்!

படத்தின் தலைப்பைப் பார்த்ததும் யாருமே சாதாரணமாக நினைக்கலாம். ஆனால் படத்தைப் பார்த்ததும் அப்படி நினைக்கத் தோன்றாது. ஒரு சாதாரணச் சம்பவத்தை வைத்துக்கொண்டு நல்ல படத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.

திரைக்கதைப் பாத்திரங்கள்: மனைவியை இழந்து அவள் நினைவிலேயே வருந்தும் ஜமீன்தார்; அவரது மூத்த மகனாகிய ஓவியன்; இளைய மகன் கல்லூரி மாணவன்; அவனுடைய காதலி நல்ல அழகி; அவள் தமக்கை கறுப்பு, படிக்காதவள்; அழகியை ஓவியனுக்குக் காட்டி ஏமாற்றிக் கறுப்புப் பெண்ணை மண மேடையில் நிறுத்துகிறார்கள். விஷயம் அறிந்த ஓவியன் அவளுக்கு வாழ்வு அளிக்கும் நோக்கத்துடன் மணந்து கொள்ளுகிறான். அப்புறம்தான் கதையில் திருப்பம் உண்டாகிறது.

ரங்காராவ் படத்தில் உயர்ந்தும், சிறந்தும், நிறைந்தும் விளங்குகிறார். மனைவியை நினைத்து நினைத்து வருந்தும் போது நம்மை நெகிழ்த்திவிடும் அவர் நடிப்பு, மருமகளுக்குப் பிறக்கப் போகும் குழந்தைக்காக விளையாட்டுப் பொருள்களை வாங்கி விளையாடவே ஆரம்பித்து விட்டபோது நம்மை உருக்கி விடுகிறது.

ரங்காராவுக்கு அடுத்தபடியாகப் பாராட்டுக் குரியவர்





# குலமகள் ராதை

மாறிவரும் உலகிலே நாடக உலகத்திலும்தான் எத்தனை மாறுதல்கள்! உலகத்தை ஒரு நாடகமாகவும் நாடகத்தை ஓர் உலகமாகவும் கற்பனை செய்து மனிதன் எத்தனை எத்தனையோ அரிய சாதனைகளைப் புரிந்திருக்கிறான். நாடகத்திலே பல புதுமைகளைப் புகுத்தி நாடகத்தை நிஜ வாழ்க்கையென நம்பும்படி வளர்த்து வந்திருக்கிறான். இதற்குத் திரை உலகம் கைகொடுத்து உதவி புரிக்கிறது.

பார்க்கப் போனால் அமெச்சூர் நாடக மன்றங்கள் கூடக் குறைவான வசதியைக் கொண்டு நிறைவான முயற்சியைச் செய்து வந்திருக்கின்றன.

இப்படிப் பெருமைப்பட வேண்டிய வேளையில்.....

'குலமகள் ராதை' என்னும் தமிழ்ப் படம், ஆரம்ப — இதர் காலத்து - மறந்து போன அமெச்சூர் நாடகங்களை நினைவுறுத்துவதாக அமைந்திருப்பது முன்னேற்றத்துக்கா அறிகுறி?

வாழைப் பழத்தைத் தின்றுவிட்டு அதன் தோலே ஒருவன் விட்டெறிகிறான். அது ஒருவர் முகத்தில் போய் விழுகிறது. அவர் வரிந்து கட்டிக் கொண்டு சண்டைக்கு வருகிறார்.....அது மட்டுமா? அதனால், தான் காதலிப்பவளையே அவன் கல்யாணம் செய்து கொள்ள முடியாமல் போகிறது. இது என்ன நாடகமோ, என்ன சினிமாவோ?

ஒட்டுக்கேட்டுக் கதையை வளர்ப்பதும், சுவையைக் குறைப்பதும், துப்பாக்கியைக் காட்டிப் பயமுறுத்துவதும், வளர்ந்து வரும் திரைப்பட உலகத்தில் புதுமையையா அள்ளிச் சொரிகின்றன?

மனம் ஒடிந்து சென்னை நோக்கிச் செல்லும் கதாநாயகனுக்குச் சர்க்கஸ்காரி ஒருத்தியின் உறவு கிட்டுவதும், அவளோடு சேர்ந்து அவனும் சர்க்கஸ் வித்தைக்காரனாக ஆவதும் அந்த சர்க்கஸ் கம்பெனி அவன் காதலி வாழும் திருச்சிக்கு முகாம் போவதும், அந்தச் சர்க்கஸ் காட்சியைக் காணக் கதாநாயகி வருவதும், 'பார்' வேலை செய்யும் கதாநாயகன் அவள் வரவால் மனச் சஞ்சலமுற்றுக் கீழே விழுவதும், ஆஸ்பத்திரியில் மண்டைக் காயத்தோடு மூர்ச்சையுற்றுக் கிடக்கும்பொழுது கதாநாயகி அவனைக் காணச் சென்று, போய்க் கொண்டிருந்த பிராணனைத் தன் பொருமலாலேயே திருப்பிக் கொண்டு வருவதும், என்னே திரை உலகத்தின் அமெச்சூர் விந்தை!

'ஸ்பைடர் பிலிம்'ஸார் திரு அகிலனின் புகழ் பெற்ற 'வாழ்வு எங்கே?' என்னும் கதையைச் சிலந்தி வலையெனப் பின்னிப் பிரியைக் கட்டி இழுத்திருக்கிறார்களே, அந்த லட்சணத்தைத்தான் பாராட்ட வேண்டும்!

விஜயகுமாரி. கறுப்பாகப் பிறந்து, கஷ்டப்பட்டு வளர்ந்து கணவனைக் கைப்பிடிக்கும்வேளையில் கண்ணீரில் கரைந்து பிறகு அவன் அன்பில் நனைந்து இறுதியில் வெளியேற்றப்பட்டு வேதனைப்படும்வரையில் விஜயகுமாரி பிரமாதமாக நடித்திருக்கிறார். அபலையாக அவர் வந்து நிற்கும் போதெல்லாம் அகம் உருகுகிறது!

எஸ். வி. சுப்பையா வேலைக்காரனாக வந்து பிரமாதமாக நடிக்கிறார். ராஜனும் புஷ்பலதாவும் வளைய வளைய வந்து, குதித்துக் களித்துக் கும்மாளமடிக்கின்றனர். நன்றாக உருகி நடிக்க வேண்டிய தருணத்தில் இருவரும் ஏமாற்றமளிப்பது ஏனோ? ராஜனுக்கு நல்ல தோற்றம் இருக்கிறது. நடிப்பில் ரொம்ப ரொம்பக் கவனம் செலுத்த வேண்டும்.

எம். ஆர். ராதா வில்லனாக வந்து வழக்கமான வில்லங்கங்கள் பல புரிகிறார்.

''கண்ணே, கருமை நிறக் கண்ணா'' என்ற பாட்டு இனிமையாயிருக்கிறது. ஒளிப் பதிவில் ஏ. வி. எம்.மின் முத்திரையைக் காண முடிகிறது.

உருக்கமான கதையை எடுத்துக்கொண்டவர்கள் ஆபாசச் சந்தேகப் பேயைக் கொண்டு வந்து புகுத்திப் பிற்பகுதியை உருப்படி இல்லாமல் அடித்து விட்டார்களே, அதற்கென்ன செய்வது! — காந்தன்





# பொன் விலங்கு

மணிவண்ணன்

## இருபத்து ஐந்தாவது அத்தியாயம்

'அறிமுகம்' என்ற தொடருக்கு மெய்யான பொருள்தான் என்னவாக இருக்கமுடியும்? முகத்துக்கு முகம் அடையாளம் தெரிந்து அறிந்துகொள்வது மட்டும் அறிமுகமில்லை. மனத்துக்கு மனம் அடையாளம் தெரிந்து அறிந்துகொள்வதுதான் அறிமுகம். சத்தியமூர்த்தி அங்கு வந்து அந்தக் கல்லூரியில் விரிவுரையாளனாகப் பணிபுரியத் தொடங்கியிருந்த சில வாரங்களிலேயே மாணவ மாணவிகளுக்கு நன்றாக அறிமுகமாகியிருந்தான். முகத்தை அறிந்தவர்கள் தவிர அவன் மனத்தை அறிந்த மாணவர்களும் அங்கு ஏராளமாக இருந்தார்கள். முதல் நாள் மாலை ஏரிக்கரையில் அவனோடு அமர்ந்து உரையாடி விட்டுச் சென்ற மாணவர்கள் கூட்டத்தில் மிகவும் சுறுசுறுப்பான மாணவன் ஒருவன், ''நீங்கள் இந்தக் கல்லூரிக்கு மட்டும் பேராசிரியர் இல்லை! பல விதங்களில் சமூகத்துக்கே பேராசிரியராய் ஆகிற தகுதி உங்களுக்கு இருக்கிறது. உங்களைப் போன்றவர்கள்தாம் சமூகத்துக்குப் பேராசிரியராக இலங்க வேண்டும்'' என்று உணர்ச்சி வசப்பட்டுச் சொல்லியிருந்தான். பிறர் மிகையாகப் புகழும்போது அதற்குப் பதிலாகப் புன்முறுவல் பூத்து அந்தப் புகழ்ச்சியை மறப்பது அவன் வழக்கம். சத்தியமூர்த்தி இப்படியெல்லாம் இந்தப் புகழ்ச்சியைக் கொண்டாடாமல் இருக்கும் போதே



அந்தக் கல்லூரி ஆசிரியர்களில் அவன் மேல் பொறுமைப் படுகிறவர்கள் அதிகமாகி யிருந்தார்கள். சில நோட்டுப் புத்தகங்களில் ஒரு புறமாகத் தாளைக் கிழித்தால் நாமறியாத மற்றொரு புறத்தையும் அது உதிர்த்து வைத்திருக்கும். இதைப் போல் நம்முடைய ஒரு பக்கத்து விளைவுகள் மற்றொரு பக்கத்தைப் பாதிப்பதுண்டு. சத்தியமூர்த்தியின் புகழும் இப்படி அவனறியாமலே அவனை மற்றொரு பக்கத்தில் பாதித்திருந்தது. சதா காலமும் அவனைச் சூழ நின்று மாணவர்கள் ஆர்வத்தோடு பேசுவது கல்லூரி முதல்வரிலிருந்து ஆசிரியர்கள்வரை யாருக்கும் பிடிக்கவில்லை. 'பையன் ரொம்பவும் சீப் பாப்புலாரிட்டிக்கு' (மட்டமான புகழுக்கு) ஆசைப்படுகிறான். எப்பப் பார்த்தாலும் தன்னைச் சுற்றிப் பிள்ளைகளை நெருங்க விட்டால் 'கெத்து'ப் போயிடும். நாளடைவிலே தானுகத் தெரிஞ்சுக்குவான். புது மோகம் இப்படித்தான் இருக்கும்' என்று முதல்வர் வேறு யாரிடமோ கேலியாகப் பேசியதைத் தான் கேட்டதாக ஒரு மாணவன் சத்தியமூர்த்தியிடம் வருத்தத்தோடு வந்து கூறியிருந்தான். இன்னொரு வகுப்பில் ஆங்கிலப் பேராசிரியரிடம் சத்தியமூர்த்தி 'ஷீ வாக்ஸ் இன் பியூட்டி' என்ற கவிதையை அழகுற விளக்கிய பெருமையை மாணவர்கள் சொல்லிப் புகழ்ந்தார்களாம். சத்தியமூர்த்தியைப் பற்றிய புகழ்ச்சியைப் பொறுத்துக் கொள்ள முடியாத அந்தப் பேராசிரியர், ''உங்கள் மனப் போக்குத் தெரிந்து உங்களுக்குப் பிடித்தமான காதல் கவிதையைத் தேடிப் பிடித்துவிளக்கினுல் கொண்டாடத் தானேசெய்வீர்கள்? இந்தப் புகழ்ச்சியும் மகிழ்ச்சியும் சிறு பிள்ளைத்தனமான காரியங்கள். இதனுல் பரீட்சை எழுதிப் பாஸ் பண்ணிவிட முடியாது....'' என்று அதிகப் பொறுப்புள்ளவரைப் போல் பேசிப் பொறுமைப்பட்டாராம். இப்படிப்பட்ட செய்திகளைச் சத்தியமூர்த்தி தெரிந்து கொள்ள விரும்பா விட்டாலும் அவனுடைய பெருமையில் அக்கறையுள்ள மாணவர்கள் இவற்றை அவ



# மீண்டும் கவனியுங்கள்!




ஆடவர்களின் அதி உன்னத
ஆடைகளுக்கான
உத்தரவாதம்.

# ராஜேஷ்

டெக்ஸ்டைல்
மில்ஸ் லிமிடெட்

பெர்குசன் ரோட், பம்பாய்-13

ரோஹித் க்ரூப்  நிறுவனங்களில் ஒன்று

னுக்குத் தெரிவிக்கத் தவறுவதில்லை: வேறொரு பேராசிரியர், ''ஆள் பார்க்க நன்றாக இருந்தாலே உங்களுக்கெல்லாம் பிடித்துப் போகுமே? கேட்க வேண்டுமா?'' என்று சத்தியமூர்த்தியைப் பற்றிக் குறைப்பட்டுக் கொண்டாராம். சத்திய மூர்த்தி கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினாலும், விரும்பா விட்டாலும் இப்படிச் செய்திகள் நிறைய வந்து அவன் செவிகளை எட்டிக் கொண்டிருந்தன. 'பிள்ளைகளை அரட்டி மிரட்டி வைத்திருந்தால்தான் அவர்கள் தங்களிடம் ஓரளவாவது மதிப்பும் மரியாதையும் வைப்பார்கள்' என்ற தப்பபிப்பிராயம் பெரும்பாலான ஆசிரியர்களிடம் இருப்பதைச் சத்தியமூர்த்தி அறிந்து வருந்தினான். திறமையால் கவர்ந்து மதிப்பைப் பெற முடியாமல் பயமுறுத்திக் கவர்ந்து மதிப்பைப் பெற முயலும் இந்த முயற்சியை வியந்தான் அவன். 'உதவி வார்டன்' என்ற முறையில் அவன் மாணவர் விடுதிகளை அடிக்கடி சுற்றிப் பார்த்தான். ஆனால் 'வார்டன்' அப்படிச் சுற்றிப் பார்ப்பதை அவ்வளவாக விரும்பவில்லை என்று தெரிந்தது. ''அடிக்கடி விடுதிகளில் சுற்றுகிறீர்கள். பிள்ளைகளிடம் நம்மைப் பற்றி ஓர் 'அத்து' இருக்க வேண்டும். அடிக்கொருதரம் அங்கே போய் வந்தால் 'அத்து'ப் போய் விடும்'' என்று பேச்சுப் போக்கில் 'வார்டன்' அவனிடம் ஒருநாள் எச்சரித்தார். பூபதியோ மாணவர்களின் விடுதியைக் கண்ணும் கருத்துமாகக் கவனிக்க வேண்டுமென்று அவனிடம் கூறியிருந்தார். 'வார்டனின்' போக்கு விசித்திரமானதாக இருந்தது. சத்தியமூர்த்தியாக எதையும் செய்ய முடியாமல் தடுத்துக் கொண்டேயிருந்தார் அவர். இந்த நிலையில் அன்று காலை ஒரு நிகழ்ச்சி நடந்தது. அந்த நிகழ்ச்சிக்குப் பின் 'வார்டனிடம்' பட்டும் படாமலும் தான் பழகிய நிலையை மாற்றிக் கொண்டு கண்டிப்பாகப் பேசியே தீர வேண்டிய அவசியம் சத்திய மூர்த்திக்கு ஏற்பட்டிருந்தது. மல்லிகைப் பந்தல் கல்லூரியில் விடுதி விதிகள் ஓரளவு கண்டிப்பானவை. விடுதி அறைகளில் முதலாண்டு மாணவர்களானால் ஓர் அறைக்கு இருவர் வீதமும் இறுதியாண்டு மாணவர்களானால் ஓர் அறைக்கு ஒரே மாணவர் வீதமும் வசிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இறுதி ஆண்டு மாணவர்கள் பல்கலைக் கழகப் பரீட்சைக்குப் போகிறவர்களாயிருப்பார்கள் என்பதால் அவர்கள் படிப்பில் சிரத்தை காட்ட வேண்டுமென்று தனி அறையில் விடப்பட்டிருந்தார்கள். விடுதிக் கட்டணமும், உணவுச் செலவும் மொத்தச் செலவை ஈவு வைத்து (டிவைடிங் விஸ்டம்) வசூலிக்கப்பட்டன. சைவ, அசைவ உணவுக்கூடங்கள் தனித் தனியே இருந்தன. எங்கே சுற்றினாலும் எந்த மாணவனும் இரவு எட்டு மணிக்குள் தன் அறைக்குத் திரும்பியாக வேண்டும். தகுந்த காரணங்கள் இருந்தால் வார்டனிடமோ உதவி வார்டனிடமோ சொல்லி அனுமதி பெற்றுக் கொண்டு தான் வெளியே போக வேண்டும். ஒரு மாணவன் சட்டத்தை மீறி யாரிடமும் அனுமதி பெறாமல் வெளியேறிப் போயிருப்பதாகத் தோன்றினால் அவன் திரும்பி வந்து அறைக்குள் நுழைய முடியாமல் அவன் அறையில் ஏற்கெனவே பூட்டியிருந்த பூட்டுக்கு மேல் இன்னொரு பூட்டைப் பூட்டிக் 'கவுண்டர் லாக்' செய்யும் அதிகாரம் வார்டனுக்கு உண்டு. இதனால் தவறு செய்த மாணவன் திரும்பி வந்தால் வார்டனைச் சந்திக்காமல் தன்னுடைய அறைக்குள் நுழைய முடியாது.

குறிப்பிட்ட சம்பவம் நடந்த தினத்துக்கு முன் தினம் இரவு மல்லிகைப் பந்தலிலிருந்து இருபது மைலுக்கு அப்பால் உள்ள ஒரு மலைக்காட்டு ஊரில் தன் தந்தையைப் புலி அடித்துப் போட்டு விட்ட தகவல் தெரிந்து ஓர் அரிசன மாணவன் இரவோடு இரவாக ஊருக்குப் போக நேர்ந்திருந்தது. அந்த மாணவன் கல்லூரிக் காம்பவுண்டுக்குள்ளேயே இருந்த 'வார்டனின்' வீட்டில் போய்க் கதவைத் தட்டியிருக்கிறான். யாரும் திறக்கவே இல்லை. 'வார்டன்' குடும்பத்தோடு இரண்டாவது ஆட்டம் திரைப் படம் பார்க்கப் போயிருந்தார். வேறு வழியில்லாத காரணத்தால் சத்தியமூர்த்தியின் அறைக்கு வந்து கதவைத் தட்டி அவனிடம் சொல்லி விட்டுத் தந்தையைப் பறி கொடுத்த துயரம் தாங்காமல் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறியபடி ஊருக்கு ஓடியிருந்தான் அந்த மாணவன். நள்ளிரவில் அந்த மாணவன் வந்து தட்டி எழுப்பியதிலிருந்தும், தந்தையைப் புலி அடித்துப் போட்டு விட்டதைக் குமுறிக் கொண்டு வரும் அழுகையோடு அந்தப் பையன் கூறி விட்டுப் போனதிலிருந்தும், சத்தியமூர்த்திக்கு மனம் அதிகமாக வேதனையுற்றிருந்தது. அதற்குப் பின்பு அன்றிரவு அவன் தூங்கவேயில்லை. ஆனால் என்ன கொடுமை? மறு நாள் மாலையில் அந்தப் பரிதாபத்துக்குரிய மாணவன் திரும்பி வந்த போது அவனுடைய அறையில் 'கவுண்டர் லாக்' போட்டு மேல் பூட்டுப் பூட்டியிருந்தார்களாம். வார்டனிடம் போய் விசாரித்ததில் அந்த மாணவன் அன்றிலிருந்து

ஒரு வாரத்துக்குள் இருபத்தைந்து ரூபாய் தண்டம் கட்ட வேண்டும் என்றும், யாரிடமும் அநுமதி பெறாமல் விடுதியிலிருந்து வெளியேறிப் போனதற்காக மன்னிப்புக் கேட்க வேண்டுமென்றும் வார்டன் கூறினாராம். உதவி வார்டனிடம் சொல்லி அநுமதி பெற்ற பின்பே தான் சென்றதாக அந்த மாணவன் சொல்லியதைக் கேட்டு வார்டன் எரிந்து விழுந்தாராம். ''உதவி வார்டனாவது; மண்ணாங் கட்டியாவது? நான் ஒருத்தன் 'வார்டன்' என்று இங்கே பட்டத்தைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் போது நீ அங்கே ஏன் போகணும்?'' என்று வார்டன் ஆத்திரத்தோடு கூப்பாடு போட்டதாக அந்த மாணவன் வந்து தெரிவித்த போது சத்தியமூர்த்தியின் மனம் எல்லாக் கட்டுப்பாடுகளையும் மீறிப் பொறுமை யிழந்து தவித்தது. பொறுமையோடு தன்னடக்கமாகவும் நிதானமாகவும் நடந்து கொள்ள முயன்றான் அவன். தக்காளிப் பழத்தின் மொத்தமான தோற்றத்தில் சிவப்பு நிறமே நிறைந்திருந்தாலும் காம்போரத்தில் இருக்கிற சின்னஞ் சிறு பச்சை நிறத்தை எடுத்துக் காட்டுவதற்கே அவ்வளவு சிவப்பு நிறமும் பயன்படும். படித்துப் பட்டம் பெற்றவர்களில் பலரிடமுள்ள புத்தியும் திறமையும் சொந்த அகங்காரத்தை எடுத்துக் காட்டவே துணையாக இருப்பதை இந்த நிகழ்ச்சியாலும் சத்தியமூர்த்தி புரிந்து கொள்ள முடிந்தது. வார்டனைச் சந்தித்து விரிவாகப் பேச வேண்டும் என்று தோன்றியது அவனுக்கு. அன்று விடுமுறை நாளாகையினால் அந்தப் பையனையும் உடனழைத்துக் கொண்டு வார்டனுடைய வீட்டுக்குச் சென்றான் சத்தியமூர்த்தி. 'வார்டன்' கடுமையாயிருந்தார். வீட்டுப் படியேறி வருகிற சக ஆசிரியனை வரவேற்று ஒரு நாகரிகத்துக்காக மலர வேண்டிய முக மலர்ச்சிகூட அவரிடம் இல்லை. உடன் வந்த மாணவன் வெளியே வாசற்புறமே நின்று கொண்டு விட்டதனால் சத்தியமூர்த்தி மட்டுமே வார்டனுடைய வீட்டுக்குள்ளே சென்றான். ஆனால் வீட்டு வாயிலில் நின்று கொண்டிருந்த வார்டன் சத்தியமூர்த்தி அந்த மாணவனை உடனழைத்துக் கொண்டு வருவதைத் தொலைவிலேயே பார்த்து விட்டார். இதனால் சத்தியமூர்த்தி உள்ளே படியேறி வந்ததுமே, ''மிஸ்டர் சத்தியமூர்த்தி! இதில் எல்லாம் நீங்கள் 'இண்டர்ஃபியர்' செய்வது (தலையிடுவது) சிறிதும் நன்றாயில்லை. கடுமையா யிருந்தாலொழிய இந்தக் காலத்தில் மாணவர்களை வழிக்குக் கொண்டு வர முடியாது....'' என்று அவன் வந்த காரியத்தைப் பற்றிப் பேசுவதற்கே இடம் கொடுக்காதவராகப் பிடிவாதமா யிருந்தார்.

''இதில் நான் தலையிட்டுத் தீர வேண்டியிருப்பதற்காக என்னை மன்னியுங்கள் சார்! இந்தப் பையனுடைய அறைக்குக் 'கவுண்டர் லாக்' போட்டுப் பூட்டுவதற்கும், இருபத்தைந்து ரூபாய் தண்டம் கொடுப்பதற்கும் இவன் ஒரு தவறும் செய்திருப்பதாக எனக்குத் தோன்ற வில்லை. மலைக் காட்டு ஊரில் தகப்பனைப் புலி அடித்துக் கொன்று போட்டு விட்டதாகத் தகவல் தெரிந்து ஊருக்குப் போயிருக்கிறான். அந்த நிலையிலும் உங்களைத் தேடி வந்து சொல்லி விட்டுப் போகத்தான் முயன்றிருக்கிறான் இவன். நீங்கள் வீட்டோடு பூட்டிக் கொண்டு இரண்டாவது ஆட்டம் திரைப் படத்துக்குப் போய் விட்டீர்கள். அப்

> தக்காளிப் பழத்தின் தோற்றத்தில் சிவப்பு நிறமே நிறைந்திருந்தாலும் காம்போரத்தின் சின்னஞ் சிறு பச்சை நிறத்தை எடுத்துக் காட்டுவதற்கே அவ்வளவு சிவப்பு நிறமும் பயன்படும். படித்துப் பட்டம் பெற்றவர்களில் பலரிடமுள்ள புத்தியும் திறமையும் அகங்காரத்தை எடுத்துக் காட்டவே துணையா யிருக்கின்றன.

புறம் என்னைத் தேடி வந்து சொல்லிக் கொண்டுதான் இவன் ஊருக்குப் போயிருக்கிறான். இவனுக்கு நேர்ந்திருக்கிற கொடுமைக்கு இவன் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமலே விடுதியிலிருந்து புறப்பட்டுப் போயிருந்தாலும் நீங்களும் நானும் அதை மன்னிக்கத் தயாராயிருக்க வேண்டும் என்பது என் கருத்து. உங்களிடம் சுற்றி வளைத்துப் பேசிக்கொண்டிருப்பதற்கு நான் விரும்பவில்லை. இந்தப் பையனுடைய அறைக் கதவைத் திறந்து விடுவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். இல்லா விட்டால் நான் கல்லூரி நிர்வாகியைப் பார்த்து இதைப் பற்றி விவாதிக்க நேரிடும்'' என்று கூறி விட்டு அவருடைய பதிலை எதிர்பார்க்காமலே வெளியேறினான் சத்தியமூர்த்தி. வார்டனின் வீட்டு வாசலிலிருந்தே அந்த மாணவனுக்கு விவரம் சொல்லி அனுப்பினான் அவன்: ''தம்பீ! நீ உன்னுடைய அறை வாயிலில் போய்க் காத்திரு. இரவு எட்டு மணிக்குள் 'கவுண்

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## கார் சவாரியில்
## ஒரு புது அனுபவம்



## கீழ்க்கண்ட போற்றத்தக்க வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ரஸ்தாவில் நல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்ப்ரிங்கினுலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது.)
- எஃகு கர்டரினாலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## உறுதியான, *எழில் மிகுந்த* கார்




*தயாரிப்பாளர்கள் :*

ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்
சென்னை-2

*வினியோகஸ்தர்கள் :*

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்
சென்னை — உதகை
யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்





# மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்

**குழந்தையைச் சிரித்த முகத்துடன் வைத்திருக்கிறது.**

இக்காலத் தாய்மார்கள், தங்கள் குழந்தைகளுக்கு இனிமையான சுவைதரும் மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் தருகிறார்கள். ஒழுங்காக மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுத்து வந்தால் குழந்தைகள் உடல் நலத்துடனும் உற்சாகத்துடனும் இருக்கும்.





முடிவுகள்! மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழா : 1963 மார்ச்/ஏப்ரல் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு அதிர்ஷ்ட நேரமும் தேதியும் [illegible] -28 மணி 3-4-1963 முதல் பரிசு (ரூ. 22.60. பிரதி மாதமும் 5 வருடங்களுக்கு அனுப்பப்படும்) பேபி [illegible] 18, [illegible], [illegible] ரோடு, பெங்களூர். இரண்டாவது பரிசு (ரூ 500) பேபி சித்தேஸ்வர் [illegible] (தமிழ்) [illegible] P. O. 3வது பரிசு (ரூ. 250) பேபி தனலக்ஷ்மி, 18/188, [illegible]. 1963 மே/ஜூன் மாதங்களில் பிறந்த குழந்தைகளுக்கு அடுத்த விழா. முடிவு தேதி 5-7-1963 விவரங்களுக்கு உங்கள் [illegible] விசாரிக்கவும்.

GEOFFREY MANNERS & CO., LTD.

ASP/GM-21TAMIL

டர் லாக்' எடுக்கப் பெற்ற அறைக் கதவைத் திறக்க வழி உண்டா இல்லையா என்று பார். முடியவில்லையானால் எட்டரை மணிக்கு என்னை அறையில் வந்து பார். உன்னை நான் கல்லூரி நிர்வாகியிடம் அழைத்துக் கொண்டு போகிறேன்.''

ஏழே முக்கால் மணிக்கு அந்த மாணவன் வந்து தன்னுடைய அறைக் கதவு திறந்து விடப் பெற்றதாகச் சொல்லிச் சத்தியமூர்த்திக்கு நன்றியும் தெரிவித்து விட்டுப் போனான். இது ஒரு சாதாரண நிகழ்ச்சியானாலும் அன்றிரவு நீண்ட நேரம் இதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. கல்லூரி முதல்வர், வார்டனாக இருக்கும் துணை முதல்வர், என்று இப்படி ஒவ்வொருவராகத் தனக்கு எதிரிகளாகி வருவதை எண்ணியபோது எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்க வறட்சியாயிருந்தது. கெடுதல் செய்கிறவர்களுடைய பகைமையை நல்லவர்கள் விலை கொடுத்தாவது வாங்கிக் கொண்டு எதிர்க்க வேண்டும் என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார்.

'கொடுத்தும் கொளல் வேண்டும்
மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை'

என்ற குறளை நினைவுகூர்ந்தான் சத்தியமூர்த்தி. 'ஒரு நல்ல மனிதன் வாழ்க்கையில் தன்னுடைய ஒவ்வொரு தேவைக்காகவும் மட்டுமே போராட முடியாது. தன்னுடைய தேவைக்காகவும் நியாயத்துக்காகவும் சேர்த்துப் போராட வேண்டியிருக்கும்' என்று அடிக்கடி நினைக்கும் அந்த வாக்கியம் ஞாபகம் வந்தது அவனுக்கு. தான் எடுத்துக் கூறி விவாதித்த விஷயம் எதுவோ அதிலுள்ள நியாயத்துக்குச் செவி சாய்க்காமல், 'எட்டு மணிக்குள் இந்தப் பையனுடைய அறைக் கதவைத் திறந்து விடவில்லையானால் நான் இதைப் பற்றிக் கல்லூரி நிர்வாகியிடம் போய்ப் பேச வேண்டியிருக்கும்' என்று கூறியதற்காக மட்டும் செவி சாய்த்து அந்த விளைவுக்கு அஞ்சியே வார்டன் அப்படி விட்டுக் கொடுத்து நடந்து கொண்டிருப்பதாகச் சத்தியமூர்த்திக்குத் தோன்றியது. சுற்றியிருக்கிற கௌரவமான மனிதர்கள் எல்லாரும் ஏதோ ஒரு விதத்தில் அருவருக்கத் தக்கவர்களாக அவன் கண்களுக்குத் தோன்றினார்கள். படிப்பையும் மதிக்காமல் நியாயத்தையும் மதிக்காமல் வறட்டு ஜம்பம் மட்டுமே கொண்டாடுகிறவர்களுக்கு நடுவே பழக நேரிடுவதைப் போல் ஒரு நல்ல மனிதனுக்கு



தகப்பனார்: பார்த்தையோனோ உன் மகன் லட்சணத்தை. பரீட்சை ஹாலில் போய் நன்றாகத் தூங்கிவிட்டு வந்திருக்கானும்!

தாய்: அதுக்காக அவனை எதற்குக் கோபிக்கிறீர்கள்.....பாவம்! குழந்தை இரவு பூரா கண் விழித்துப் படித்தான்... அங்கு போய்த் தூக்கம் வந்திருக்கும் போலேயிருக்கு. தூங்கியிருக்கான்.

ஆயுள் தண்டனை வேறொன்றும் இருக்க முடியாது. கண் மூடி உறங்காமல் மனப் போராட்டங்களாலும் எண்ணங்களாலுமே தன்னை மூடிக் கொண்டு உறங்க முயன்ற அந்த இரவுக்குப் பின் மறுநாள் பொழுது புலர்ந்து கல்லூரிக்குச் சென்ற போது மனம் விட்டுப் பேசவும், பழகவும் ஓர் உண்மை நண்பன்கூட இல்லாத சூனியப் பிரதேசமான பாலைவனத்தில் நடமாடுவதைப் போல் ஆளைத் தவிக்கச் செய்யும் ஒரு விதமான தனிமையைச் சத்தியமூர்த்தி உணர்ந்தான். தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசனும் ஊரிலிருந்து இன்னும் திரும்பவில்லை. போன இடத்திலிருந்தே தந்தி கொடுத்து லீவை மேலும் இரண்டு நாளைக்கு வளர்த்திருந்தார் அவர். போதாத குறைக்கு அன்று காலையில் அவன் கல்லூரிக்குச் சென்ற சிறிது நேரத்துக் கெல்லாம் விடுதியில் தங்கி வசிக்கும் மாணவர்கள் பத்துப் பன்னிரண்டு பேர் ஹாஸ்டலில் மாணவர்களுக்காக இரவில் கொடுக்கப்படும் பாலைப் பற்றிப் பெரிதாகக் குறை சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். விடுதியில் தங்கியிருந்த மாணவர்கள் காலையில் குளிப்பதற்கு வெந்நீர், இரவில் பருகுவதற்குப் பால் ஆகியவை வேண்டுமானால் தனியே பணம் கட்டி அவற்றுக்காகக் கல்லூரியில் அச்சிட்டு வைத்திருக்கும் சீட்டுக்களை வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும். இந்த வெந்நீர்ச் சீட்டுக்களுக்கும், பால் சீட்டுக்களுக்கும் எண்ணெய் நீராடுகிற

தினங்களில் எண்ணெய்க்காக வழங்கப்படும் 'ஆயில் டிக்கெட்டு'களுக்கும்,—'காலேஜ் கரென்ஸி' என்று பெயர் சூட்டியிருந்தார்கள் குறும்புக்கார மாணவர்கள். ஒவ்வொரு மாதமும் இருபது தேதிக்கு மேலாகி விட்டால் இந்தக் 'கரென்ஸி'க்கு மதிப்பு அதிகமாகிவிடும். வெந்நீர்க் கரன்ஸி' தீர்ந்து போனவன் அடுத்த அறைப் பையனிடம் நாலணுக் கரென்ஸியை எட்டணுவுக்கு உயர்த்திப் 'பிகு' செய்வான். அவசரத் தேவைக்காக மாணவர்கள் ஒருவருக் கொருவர் இந்தக் 'கரென்ஸியை' விற்பதும் உண்டு.

''ஒரு 'மில்க் கரென்ஸி'க்கு நாலணுக் கொடுத்து வாங்குகிறோம் சார்! முக்கால்வாசி நாட்கள் திரிந்து போன பாலைக் கொண்டு வந்து கொடுக்கிறார்கள். சில நாட்களில் சர்க்கரை போட மறந்து போகிறார்கள். இன்னும் சில நாட்களில் அவர்கள் கொண்டுவந்து கொடுக்கும் போது பாலாக இருந்தது நாங்கள் பருகுவதற்குக் கையில் எடுக்கும் போது தயிராக மாறி விடுகிற விந்தையைக் காண்கிறோம்....'' என்று கோபமாகவும் அந்தக் கோபத்திற் பிறந்த நகைச்சுவையுடனும் சத்திய மூர்த்தியிடம் வந்து குறை சொல்லிக் கொண்டு நின்றார்கள் அந்த மாணவர்கள்.

''இதை நீங்கள் ஏன் 'வார்டனிடம்' போய்ச் சொல்லக் கூடாது?'' என்று கேட்டான் சத்திய மூர்த்தி.

''வார்டனிடம் நாலைந்து முறை சொல்லி அலுத்துப் போச்சு சார்! அதிகம் சொன்னால் 'சரிதான் போங்கப்பா.... ஒரு நாள் திரிந்த பாலைக் குடித்தால்தான் என்ன? குடியா முழுகி விடும்?' என்று அவரே பதில் சொல்லி விடுகிறார் சார்'' என்று சத்தியமூர்த்திக்குச் சொல்வதற்குத் தயாராகப் பதில் வைத்திருந்தார்கள் அந்த மாணவர்கள்.

''வரவர மல்லிகைப் பந்தல் 'காலேஜ் கரென்ஸி'யின் மதிப்பு அதலபாதாளத்துக்குக் கீழே இறங்கிப் போய் விட்டது சார்'' என்று சத்தியமூர்த்தி தங்களைத் தவருகப் புரிந்து கொள்கிற ஆளில்லை என்ற நம்பிக்கையோடும், உரிமையோடும் சிரித்துக் கொண்டே வேடிக்கையாகச் சொன்னான் மற்றொரு மாணவன். அன்று பிற்பகலில் அவன் மாணவர்கள் சார்பில் இதை வார்டனிடம் எடுத்துக் கூறச் சென்ற போது முதல் நாள் நிகழ்ச்சியை மனத்தில் வைத்துக் கொண்டு அவர் சரியாக முகம் கொடுத்துப் பேசவில்லை. இரண்டாம் தரம் சற்றே அழுத்திக் கேட்ட போதும், ''இதெல்லாம் நீங்களே பார்த்து ஏற்பாடு செய்யலாமே? என்னைக் கேட்பானேன்? நிர்வாகியையே நேரில் சந்தித்துக் கூட இதைப் பற்றி விவாதிப்பீர்கள் நீங்கள். உங்களால் முடியாத காரியமும் உண்டா?'' என்று குத்தலாக மறுமொழி கூறினார் 'வார்டன்'. சத்தியமூர்த்திக்கு எதற்காக இவரைத் தேடி வந்தோம் என்று வெறுப்பாகி விட்டது. காலையில் கல்லூரிக்குள் நுழையும் போது மனம் விட்டுப் பழகுவதற்கு உண்மை நண்பர்கள் இல்லாத பாலைவனமாக அது தோன்றியதே: அதே போன்றதொரு தனிமையை மீண்டும் உணர்ந்தவனாக அரை நாளைக்கு லீவு எழுதிக் கொடுத்து விட்டு அறைக்குத் திரும்பி விட்டான் அவன். கல்லூரிக் காம்பவுண்டிலிருந்து அவன் வெளியேறு முன் ஊழியன் பிற்பகல் தபாலில் அவன் பெயருக்கு வந்திருந்த கனமான கடித உறை ஒன்றைப் பின்னாலேயே துரத்திக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்து விட்டுச் சென்றான். முகவரி எழுதியிருந்த கையெழுத்து குமரப்பனுடையதாக இருக்கவே மனம் சிறிது ஆறுதலடைந்தது. அறையில் போய் அந்த உறையைப் பிரித்து நண்பனையே நேரில் சந்தித்தது போன்ற மகிழ்ச்சியோடு அவனுடைய கடிதத்தைப் படிக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டே வேகமாக நடந்தான். அன்றிருந்த மனநிலையில் குமரப்பனின் கடிதம் வந்தது அவனுக்குப் பெரிய ஆறுதலாயிருந்தது. அறைக்குப் போய் எதிரே மலைகளும் அமைதியான ஏரி நீர்ப் பரப்பும் தெரிகிறாற் போல் மாடி வராந்தாவில் சாய்வு நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு அந்தக் கடித உறையைப் பிரித்த போது அவன் எதிர்பாராத வேறு மகிழ்ச்சியும் அந்த உறைக்குள்ளே இருந்தது. மோகினி நாட்டியமாடும் கோலத்தில் எடுத்த புதிய புகைப்படங்களிரண்டும் உறைக்குள் இருந்தன. ஒரு படத்தில் அவள் சிரித்துக் கொண்டிருந்தாள். அவனைப் பார்த்தே சிரிப்பது போலிருந்தது அந்த அழகிய படம். குமரப்பன் எதற்காக எப்படி இந்தப் படங்களை எடுத்து அனுப்பினான் என்று அறிந்து கொள்ளத் தவிக்கும் மனத்தோடு அவனுடைய கடிதத்தைப் படிக்கத் தொடங்கினான் சத்தியமூர்த்தி. உண்மை நண்பனின் அந்தக் கடிதம் அன்று அவனுக்கு ஏற்பட்டிருந்த எல்லாவிதமான கவலைகளையும் மறக்கச் செய்தது.

(தொடரும்)

# தலையணையை மாற்றினால் தலைவலி நீங்குமா?

கடந்த வாரம் ஊர் காவற்றுறைத் தொகுதி பார்லிமெண்ட் அங்கத்தினரான திரு வி. ஏ. கந்தையா திடீரென்று காலமாகியது இலங்கைத் தமிழினத்துக்குச் சுலபத்தில் ஈடுசெய்ய முடியாத ஒரு மாபெரும் நஷ்டமாகும். தமிழ் பேசும் மக்களின் உரிமைப் போராட்டத்தில் முன்னணியில் நின்ற வீரர்களில் திரு கந்தையாவும் ஒருவர் என்று கூறுவதைக் காட்டிலும் தமிழர்களின் தளபதியென்று அவரை வர்ணிப்பதுதான் மிகப் பொருத்தம். தன்னலம் கருதாது தமிழினத்தின் நல்வாழ்வுக்காகவே சர்வத்தையும் அர்ப்பணித்த அந்தப் பெரியாரை இதய நோய் எமனாக வந்து பலி கொண்டு விட்டது. சில மாதங்களுக்கு முன்னால் தமிழரசுக் கட்சி வட இலங்கையில் கறுப்புக்கொடிப்போராட்டம்நடத்தியபோது திரு கந்தையா போலீசாரினால் பிலேச்சத்தனமாகத் தாக்கப்பட்டார். அது முதல் அவருடைய உடல் நிலை பாதிக்கப்பட்டிருந்தது.

திரு கந்தையா தொழிலில் ஓர் அட்வகேட். கொழும்பில் தொழில் நடத்துகையில் அவருக்கு நல்ல வருமானம் இருந்தது. நல்ல வருமானம் அளித்து வந்த தொழிலையும் விட்டுத் தமிழினத்தின் விடுதலைக்காக அவர் அரசியலில் பிரவேசித்தார். எல்லோருக்கும் இனியவராகவும் சேவையே இலட்சியமாகவும் உடைய ஒரு தலைவரை இழந்தது தமிழரசுக் கட்சிக்கு ஒரு மாபெரும் நஷ்டமாகும். சபாநாயகர் உள்படப் பல பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் திரு கந்தையாவின் தகனக் கிரியைகளுக்குச் செல்ல விரும்பித் தங்களுக்கு விமான வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று அரசாங்கத்திடம் கோரினார்கள். அரசாங்கம் அந்த வசதிகளை அளிக்க மறுத்ததுடன் காலஞ்சென்றவரை அவமதிக்கும் முறையில் ஓர் அறிக்கையும் வெளியிட்டது தமிழ் மக்களுக்கு மிகுந்த அருவருப்பைக் கொடுத்திருக்கிறது. ''ஈமக் கிரியைகளுக்குப் போகும் பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கு விமான வசதியளித்து மானியம் கொடுப்பது அரசாங்கத்தின் கொள்கையல்ல'' என்று அறிக்கை வெளியிட்ட ஓர் அரசாங்கத்தை நாகரிக அரசாங்கம் என்று யாராவது கருதுவார்களா?

## மந்திரிசபையில் மாறுதல்கள்

பிரதம மந்திரி ஸ்ரீமதி பண்டாரநாயகா தமது மந்திரி சபையை இப்பொழுது மாற்றியமைத்துக் கொண்டிருக்கிறார். மந்திரி சபை மாற்றம் ஏற்படும்பொழுது திறமையற்ற மந்திரிகளுக்குச் சீட்டுக் கொடுக்கப்படுமென்றும் திறமைசாலிகள் மந்திரிகளாக நியமிக்கப் படுவார்கள் என்றும் எதிர்பார்ப்பதுதான் இயற்கை. ஆனால் நடந்திருப்பது முற்றிலும் வேறு. திரு குணசேகரா என்ற ஒருவர் மட்டுமே புதிதாக மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறார். மற்ற எல்லாரும் பழைய மந்திரிகள்தான். பழைய மந்திரிகளுக்குப் புதிய இலாக்காக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வர்த்தக மந்திரியாயிருந்தவர் நிதி மந்திரியாகி யிருக்கிறார். நிதி மந்திரியா யிருந்தவர் கல்வி மந்திரியாகி யிருக்கிறார். கல்வி மந்திரியா யிருந்தவர் சுகாதார மந்திரியாகி யிருக்கிறார். இப்படி மந்திரிகள் தலையணையை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். பிரதமரின் மருமானுக்கு ஒரு முழு மந்திரி ஸ்தானம் தேடிக் கண்டுபிடித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மந்திரி சபை மாற்றம் ஏற்பட்டு, புதிய கொள்கை நிர்ணயமாகி, பொருளாதார முன்னேற்றத்துக்குத் துரித நடவடிக்கை எடுக்கப்படும் என்று எதிர்பார்த்தவர்களுக்குக் கடுமையான ஏமாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

## பதுளை முனிசிபல் தேர்தல்

கடந்த வாரம் தேயிலை ரப்பர் தோட்டப் பிரதேசத்தின் கேந்திர நகரமான பதுளையில் முனிசிபல் சபைத் தேர்தல் நடைபெற்றது. இந்தத் தேர்தலில் முக்கியமான அரசியல் கட்சிகள் எல்லாம் அபேட்சகர்களை நிறுத்தி வைத்துப் போட்டியிட்டன. நாட்டு மக்களின் மனத்தை அறிய ஒரு பரீட்சையாக இந்தத் தேர்தல் கருதப்பட்டமையால் எல்லாக் கட்சிகளும் இங்கு அதிதீவிரமாகப் பிரசாரம் செய்தன. இத் தேர்தலின் முக்கியத்துவத்தை உணர்ந்து தேர்தலுக்கு இரண்டு தினங்களுக்கு முன்னால் ஆளும் கட்சியான ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சி தனது வருடாந்திர மகாநாட்டையும் இந்த நகரத்திலேயே பிரமாதமாக நடத்தி ஆர்ப்பாட்டம் செய்தது. முடிவில் பதுளை நகர மக்கள் முன்னாள் ஆளும் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சியை மெஜாரிட்டியாகத் தெரிவு செய்திருக்கிறார்கள். பதினைந்து ஸ்தானங்களில் ஐக்கிய தேசியக் கட்சிக்கு ஒன்பது ஸ்தானங்கள் கிடைத்திருக்க ஆளும் கட்சிக்கு ஒரே ஒரு ஸ்தானம்தான் கிடைத்தது. கடும் வகுப்புவாத விஷத்தைக் கக்கும் ஜாதிகவி முக்தி பெரமுனை என்ற கட்சிக்கும் ஒரே ஒரு ஸ்தானம் மட்டுமே கிடைத்தது. வகுப்புவாதக் கூச்சலும் சமய மொழி வெறிக் கூச்சலும் மக்களிடம் எடுபடும் காலம் மலையேறி விட்டது என்பதை இந்தத் தேர்தல் திட்டவட்டமாக எடுத்துக் காட்டி விட்டது. —ரஜனி





# ஏஸிஸி மற்றும் சங்கர்

## பிராண்ட் சிமெண்டுகள்

**சுபிட்ச இந்தியாவை உருவாக்குவதில் முக்கிய பங்கு வகிக்கிறது.**

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கோ. ஆப் இந்தியா லிட்.,
தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம் லிட். • தி இந்தியா சிமெண்ட்ஸ் லிட்.,











தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

**புரவுதரு குடியாகிப் புயல் வண்ணன்**
**விரும்பியதும் பொழில்சூழ் காஞ்சி**
**கரிய கடர் வீதிதொறும் உலாப்போந்து**
**கவர்வதாம் கலை ஆழ் காஞ்சி**
**சுரமகளிர் பாடுவதும் பயில்வதும்**
**சொல்மாலை தொடுத்த காஞ்சி.**

என்று தமிழ் நாட்டின் கலைவாழ் நகரமான காஞ்சி பாராட்டப்படுகிறது. வீரசோழியம் என்னும் இலக்கண நூலில் வரும் மேற்கோள் பாட்டு ஒன்றில். ஆனால் இந்தக் காஞ்சி எல்லாம் உருவாவதற்கு எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னமேயே ஓர் அரிய கலைச் சின்னத்தைத் தன்னகத்தே கொண்டு விளங்கியிருக்கிறது சாஞ்சி. பௌத்தர்கள் பற்றற்றவர்களே எனினும் கலை வளர்ப்பதில் யாருக்கும் பின்னடையவில்லை. கலைச் சின்னங்கள் பலவற்றை நாடு முழுதும் பரப்பி வைத்திருக்கிறார்கள். அவைகளில் காலத்தால் முற்பட்ட சின்னங்களைத் தாங்கி நிற்கிற இடம்தான் சாஞ்சி. அங்குதான் அசோகர் கி.மு. மூன்றும் நூற்றாண்டிலேயே அமைத்த கலைச் சின்னமான பெரும் ஸ்தூபியும் அதை ஒட்டிய மற்றச் சின்னங்களும் இருக்கின்றன. அவற்றைக் காணவே இன்று நாம் சாஞ்சிக்குச் செல்கின்றோம்.

சாஞ்சி செல்ல நாம் சென்னையிலிருந்து தில்லி செல்லும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் ஏறி போப்பால் ஜங்ஷனில் இறங்கி விட வேண்டும். அங்கிருந்து பிறகு செல்லும் பாசஞ்சர் வண்டியில் ஏறினால் போப்பாலிலிருந்து இருபத்தியெட்டு மைல் தூரத்தில் உள்ள சாஞ்சி என்னும் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். ஸ்டேஷனுக்குப் பக்கத்திலேயே உள்ள டூரிஸ்ட் ஹோமிலேயே போய்த் தங்கலாம். தக்க வசதி உடையவர்கள் என்றால் மத்தியப் பிரதேசத்தின் தலைநகரான போப்பாலில் இறங்கி அங்கிருந்து டாக்சி கார் பிடித்துக் கொண்டு சாஞ்சி போய் முன் சொன்ன டூரிஸ்ட் ஹோமிலேயே போய்த் **தங்கலாம். அங்கிருந்து அரை மைல் தூரத்**திலேதான் சாஞ்சி ஸ்தூபம் இருக்கும் குன்றிருக்கிறது. டாக்ஸியில் சென்றிருந்தால் மலை மேலேயே செல்லலாம். நல்ல பாதை போட்டு வைத்திருக்கிறார்கள். ரயிலில் சென்றிருந்தால் கால் கடுக்கப் படிகள் பல ஏறி நடந்துதான் ஆகவேண்டும்.

சாஞ்சி புத்தரது வாழ்க்கையோடு நேரடியாகத் தொடர்புடைய தலம் அல்ல. இங்கு உள்ள பிரம்மாண்டமான ஸ்தூபி அசோக சக்கரவர்த்தியால் சாக்கிய முனிவரின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டது என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. ஆனால் மற்றப் பௌத்த சின்னங்களைப் பற்றி விரிவான குறிப்புகள் எழுதியிருக்கும் ஹுவான் ஸ்வாங் இந்தச் சாஞ்சியைப் பற்றி ஒரு குறிப்புமே எழுதி வைக்க வில்லை. என்றாலும் இலங்கை மகாவம்சம் என்னும் பௌத்த நூலில் சில தகவல்கள் இருக்கின்றன. மௌரிய சக்கரவர்த்தி அசோகர் உஜ்ஜயினியில் ராஜப் பிரதிநிதியாக இருந்து அரசாண்டு வந்த காலத்தில் சாஞ்சி பக்கத்தில் உள்ள விதிசா நகரத்து வணிகன் ஒருவனது மகளை மணந்திருக்கிறார். அவளிடம் அசோகருக்கு மூன்று பிள்ளைகள் பிறந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவனே **மகிந்தன், மகிந்தனது தாயே வேதிசமி**

என்னும் இடத்தில் ஒரு புத்த விகாரம் கட்டி அங்கு வாழ்ந்திருக்கிறான். இலங்கையில் பௌத்த மதத்தைப் பரப்பச் சென்ற மகிந்தன் தன் தமக்கை தேவியுடன் இந்த வேதிசகிரிக்கு வந்து தன் தாயைக் கண்டு வணங்கியிருக்கிறான் என்று மகாவம்சம் கூறுகிறது. விதிசா என்று அன்று அழைக்கப்பட்ட பட்டணமே இன்று பில்சா என்று வழங்குகிறது. வேதிசகிரியே சாஞ்சி என்று இருக்க வேண்டும்.

சாஞ்சி ஸ்தூபி இருப்பது ஒரு சிறு குன்று. அது பூமி மட்டத்துக்கு மேல் 350 அடி உயரம் உள்ளது. ஆம், நம் திருத்தணிகை மலையின் அளவினதே. படி வழியாக ஏறி நடந்தாலும், இல்லை காரிலேயே சென்றாலும் மலையின் மேல் தளத்துக்கு வந்து சேரலாம். அங்கு ஒரு பரந்த சமவெளியிருக்கிறது. அதில்தான் இந்தப் புகழ் பெற்ற ஸ்தூபி கட்டப்பட்டிருக்கிறது. இது ஒரு வட்ட வடிவமாய் அமைந்துள்ளது. ஒரு பெரிய பூகோள உருண்டையை இரண்டாக வெட்டி ஒரு பகுதியைக் கவிழ்த்து வைத்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது. இந்த ஸ்தூபியின் குறுக்களவு 120 அடி; உயரம் 54 அடி. ஸ்தூபியின் அடி மட்டத்தில் அதைச் சுற்றி வரப் பிராகாரம் அமைத்திருக்கின்றனர். இப்பிராகாரத்துக்குச் செல்லப் படிகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஸ்தூபியைச் சுற்றித் தரை மட்டத்தில் ஒரு சுற்று வழியும் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த வழியைச் சுற்றித்தான் கல்லால் ஆகிய வேலி ஒன்றும் இருக்கிறது. இந்த வேலியின் நான்கு பக்கங்களிலும் நான்கு தோரண வாயில்கள் இருக்கின்றன. தோரண வாயிலின் மூன்று தோரணங்களை இரண்டு தூண்கள் தாங்கி நிற்கின்றன. தோரண வாயில்களின் மேல் பகுதியில் குறுக்குக் கல் சட்டங்கள் பரப்பி இருக்கின்றன. தூண்களின் மேல் யானை, யக்ஷினி முதலிய வடிவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளே மேல் உள்ள தோரணங்களைத் தாங்கி நிற்பதாகக் காட்டப்பட்டிருக்கின்றன. வாயிலின் மேல் அடுக்கடுக்காக மூன்று தோரணங்கள், எல்லாம் கல்லால் ஆகிய சட்டங்கள். தூண்களிலும், போதிகைகளிலும் தோரணங்களிலும் புத்தர் வரலாறும், ஜாதகக் கதைகளின் நிகழ்ச்சிகளும் தூபி சக்கரம், மரம் முதலிய சின்னங்கள் சிற்ப வடிவில் அமைந்திருக்கின்றன. புத்தர் ஞானம்பெற்ற அசோக மரமே மிகுதியும் காணப்படும். அசோக மரம் தளிர்களின் காட்சி மிகவும் அழகாக இருக்கும். இந்தத் தோரண வாயில்களின் தலைப்பில்தான் தர்ம சக்கரங்கள் அமைத்திருக்கிறார்கள். அவைகளை அடுத்துச் சாமரை வீசும் யக்ஷர்கள். இன்னும் புத்தர், தர்மம், சங்கம் மூன்றையும் குறிக்கும் பௌத்த திரி ரத்தினங்களும் இருக்கும் இது தோரண வாயில்களின் வேலைப்பாடு ஆதி பௌத்த கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றன. இத்தோரண வாயில்கள் கி.பி. 35க்குப் பின்னரே அமைக்கப்பட்டவை என்று கட்டடக் கலை நிபுணர்கள் கூறுகின்றனர்.

இந்த வாயில்களின் வழியாக நுழைந்தே ஸ்தூபங்களைச் சுற்றி வரவேண்டும். ஸ்தூபி முழுதும் செங்கல்லால் கட்டப்பட்டு மேலே கற்கள் பதித்து வைக்கப் பட்டிருக்கின்றன. முன்னரே குறித்தபடி ஸ்தூபி அர்த்தகோண வடிவில் இருக்கும். ஸ்தூபியின் உச்சியில் புனிதத் தன்மை வாய்ந்த குடை ஒன்று இருக்கிறது. அதனைச் சத்திராவளி என்கின்றனர். அதைச் சுற்றித் தூண்கள் நிறுத்திய பெட்டி போல் கட்டி வைத்திருக்கின்றனர். அதனையே ஹார்மிகம் என்கின்றனர். ஸ்தூபியின் மீது ஏறி அதனைச் சுற்றி வர பிரதக்ஷணப் பிராகாரம் அமைத்திருக்கின்றனர். அங்கிருந்துதான் குடை பெட்டியை யெல்லாம் காண வேண்டும். அதற்கு மேல் ஸ்தூபியில் ஏற முடியாது; ஏறவும் கூடாது.

இனி ஸ்தூபியை விட்டு வெளியே வரலாம். இந்தப் பெரிய ஸ்தூபியின் தெற்கு வாயிலுக்கும் பக்கத்திலே அசோகர் சாஸனத் தூண் ஒன்று உடைந்து கிடக்கிறது. அதில் பௌத்தர்கள் சமயப் பூசலையெல்லாம் விட்டு விட வேண்டும் என்று அசோகர் பொறித்து வைத்திருக்கிறார். இத்தூண் 42 அடி உயரம் உள்ளதாக இருந்திருக்கிறது. இத்தூணின் மேல் மணி போன்ற வடிவுள்ள போதிகை ஒன்றும் அதன் மேல் நான்கு திசைகளையும் நோக்கும் நான்கு சிங்க வடிவங்களும் இருந்திருக்கின்றன. இதுதான் இன்று மண்ணில் புதையுண்டும் பெரும்பாலும் துண்டு துண்டுகளாக உடைந்தும் கிடக்கின்றன. இவற்றையெல்லாம் சேர்த்து வைக்கப் புதைபொருள் ஆராய்ச்சியாளர் முயன்றிருக்கின்றனர். இதனைப் போன்ற அமைப்புள்ள தூணையே சிதையாத நிலையில் சாரநாத்தில் காண்கிறோம். அதனை அங்கு செல்லும்போது பார்த்துக் கொள்வோம். இதுவே நமது குடியரசின் சின்னம் என்பது ஞாபகம் இருக்கும்.

**சாஞ்சி ஸ்தூபி**



பெரிய ஸ்தூபிக்கு வடகிழக்கில் ஐம்பது கஜ தூரத்தில் மற்றொரு ஸ்தூபி இருக்கிறது. இதையே ஸ்தூபி நம்பர் மூன்று என்று கணக்கிட்டிருக்கின்றனர். இது கி. மு. 150-ம் வருஷம் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இது அமைப்பில் பெரிய ஸ்தூபியைப் போன்றதே என்றாலும் அளவில் சிறியது. இதன் குறுக்களவு ஐம்

## மாதச் சம்பளமாக ரூ. 125 லிருந்து ரூ. 300 வரை பெறுவோருக்கு

# கட்டாயச் சேமிப்புத் திட்டத்திலிருந்து விதி விலக்கு

**நீங்கள்**

- மாதமொன்றிற்கு ரூ. 125 லிருந்து ரூ. 250 வரை சம்பளம் பெறுபவராக யிருந்து, திருமணமாகாதவராக இருந்தாலும் அல்லது மணமானவராக இருந்தாலும்;
- மாதமொன்றிற்கு ரூ. 125 லிருந்து ரூ. 275 வரை சம்பளம் பெறுபவராக இருந்து திருமணமாகி, ஒரு குழந்தையுடன் இருந்தால்;
- மாதமொன்றிற்கு ரூ. 125 லிருந்து ரூ. 300 வரை சம்பளம் பெறுபவராக இருந்து, திருமணமாகி ஒன்றிற்கு மேற்பட்ட குழந்தைகள் இருந்தால்

அரசாங்கம் அமுலாக்கியுள்ள கட்டாயச் சேமிப்புத் திட்டத்திலிருந்து விதி விலக்கு பெறலாம். ஆனால், பிராவிடெண்ட் நிதி, ஆயுள் இன்சூரன்சு பாதுகாப்பு, கூட்டுக்கால டிபாசிட்டுகள் (CUMULATIVE TIME DEPOSITS) ஆகிய திட்டங்களின் மூலம் ஏற்கனவே உங்கள் சம்பளத்தில் நீங்கள் 11% சேமிப்பவராக இருக்க வேண்டும்.

இந்தத் திட்டங்களின் மூலம் நீங்கள் இன்று எவ்வளவு சேமிக்கிறீர்கள்? உங்கள் சேமிப்பு ஒன்றும் இல்லை என்றாலோ, அல்லது சேமிப்பு உங்கள் சம்பளத்தில் 11%க்கு குறைவாக யிருந்தாலோ, சேமிப்புக் குறையை நிறைவு செய்ய ஓர் ஆயுள் இன்சூரன்சு பாலிசி எடுத்துக் கொள்ளுங்கள். இது, கட்டாயச் சேமிப்புத் திட்டத்திலிருந்து விதி விலக்குப் பெற, வழி செய்யும்.

## ஆயுள் இன்சூரன்சு துறையில் முதலீடு செய்வதன் மூலம்

- நீங்கள் சட்டத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்கிறீர்கள்
- நீங்கள் உங்களுக்கென ஓர் முதலீட்டை உருவாக்கிக் கொள்கிறீர்கள்
- நீங்கள் உங்கள் குடும்பத்தினரின் பாதுகாப்பிற்கு வழி வகை செய்து தருகிறீர்கள்

உங்கள் கவலைகளைப் போக்குவது இன்சூரன்சு ஏற்பாட்டின் பொறுப்பாகும்: பாலிசி அமுலில் இருக்கும்போது உங்களுக்கு ஏதாவது நேர்ந்தால், உங்கள் குடும்பத்தினருக்கு வகையான வருமானம் கிடைக்க உறுதியளிக்கிறது ஆயுள் இன்சூரன்சு.



ஒரு ஆயுள் இன்சூரன்சு முகவரை (ஏஜெண்டை) நாடுங்கள், அல்லது அண்மையிலுள்ள ஆயுள் இன்சூரன்சு அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளுங்கள்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

பது அடி; உயரம் இருபத்தியேழு அடி. இதனை 1851ம் வருஷமே அகழ்ந்து எடுத்திருக்கிறார்கள். அப்பொழுதே அது சிதைந்திருக்கிறது. இங்குதான் புத்தரின் பிரதம மாணவர்களாகிய சாரிபுத்திரர், மகா மௌத் கல்யாயனர் முதலியவர்களது அஸ்திகள் அடங்கிய கல் பெட்டிகள் இருந்திருக்கின்றன. இந்தக் கற்பெட்டிகளை எடுத்து அடக்கம் செய்து அதன் பேரில் ஒரு புதிய விகாரத்தைக் கட்டியிருக்கின்றனர்.

பெரிய ஸ்தூபியின் தெற்கு வாயிலின் நேர் எதிரே சைத்திய மண்டபம் ஒன்றிருக்கிறது. பெரிய ஸ்தூபியின் மேற்கு வாயிலின் முன்னால் அசோகரின் மனைவியால் கட்டப்பட்ட மண்டபங்கள் இரண்டு இருக்கின்றன. எல்லாம் பௌத்த பிக்ஷுக்கள் தங்குவதற்காகக் கட்டப்பட்டிருக்கின்றன. குன்றின் மேற்குச் சரிவில் பாதி வழியில் உள்ள பாறையின்மேல் மற்றொரு ஸ்தூபி இருக்கிறது. இதனையே இரண்டாவது ஸ்தூபி என்பர். இது அளவில் மிகச் சிறியது; குறுக்களவு 39 அடிதான்; உயரமும் 22 அடிதான். இதற்குத் தோரண வாயில்கள் இல்லை; ஸ்தூபியின் மேல் தளத்திலும் குடையோ பெட்டியோ இருக்காது. மொட்டையாகவே இருக்கிறது. ஸ்தூபியைச் சுற்றிக் கல் அளி மாத்திரம் உண்டு. அளியில் பல வகையான உருவங்கள் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. குன்றின் அடிவாரத்தில் சிறிய ஸ்தூபி ஒன்றும் இருக்கிறது. இது கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டதென்பர். இங்கு பௌத்த போதகர்கள் கச்யபன் மௌதல்ய புத்திரன் முதலியவர்களின் அஸ்திகள் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. சாஞ்சியில் உள்ள ஐந்து விகாரங்கள் ஆதியில் மரத்தால் கட்டப்பட்டிருந்திருக்கின்றன. அவை அழிந்துபட்ட பின்னர் அவைகளைக் கல்லாலேயே கட்டியிருக்கின்றனர்.

இவைகளையெல்லாம் விட, குன்றின் மேல் தளத்திலே வடபாகத்தில் இலங்கை பௌத்த சங்கத்தினர் புதிய கோயில் ஒன்றைக் கட்டி அதில் புத்த பகவானை பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். இத்தனை ஸ்தூபிகளையும் பார்த்தபின் அந்தப் புத்தர் சந்நிதிக்கும் சென்று வணங்கலாம். வணங்கியபின்,

மூன்றான் பெருமைக் கணே
நின்றான், முடிவெய்து காணும்
நன்றே நினைந்தான்
குணமே மொழிந்தான், தனக்கென்று
ஒன்றுனும் இல்லான்,
பிறர்க்கே உறுதிக்கு உழந்தான்
அன்றே இறைவன் அவன்தாள்
சரணங்கள் அன்றே.

என்று குண்டலகேசி வாழ்த்துப் பாடலைப் பாடிக் கொண்டே வெளியே வரலாம்.

மௌரிய அரசர்கள் காலத்தும் சாஞ்சி புகழ் பெற்றிருக்கிறது. மௌரிய வம்சம் க்ஷணித்த பின்னர் சுங்க வம்சத்தாரது ஆட்சியின் கீழ் வந்திருக்கிறது. அவர்கள் பௌத்த மதத்தைச் சார்ந்தவர்கள் அல்ல என்றாலும் அவர்கள் காலத்தில் இரண்டு ஸ்தூபிகள் எழுந்திருக்கின்றன. இப்போதுள்ள பெரிய ஸ்தூபியே அந்த அரசர்கள்தான் கட்டினார்கள் என்பது ஓர் ஆராய்ச்சி. இல்லை, ஸ்தூபியைச் சுற்றியுள்ள கல் கிராதிகள் தான் சுங்க அரசன் கட்டியவை என்பர் சிலர். ஹர்ஷர் காலத்தில்தான் தோரணவாயில்கள் மற்றக் கட்டடங்கள் எல்லாம் தோன்றின என்றும் கூறுவர். அதன்பின் சாஞ்சி ஸ்தூபிகள் சிதைந்து கிடந்திருக்கின்றன. விதிசா நகரமும் அழிந்திருக்கிறது. பில்சா பட்டணம் தோன்றியிருக்கிறது. ஔரங்கசீப் பில்சா பட்டணத்தைப் பல முறை தாக்கி அழித்திருக்கிறான். ஆனால் அவன் சாஞ்சியின் மேல் கை வைக்கவேயில்லை. பின்னர் சாஞ்சி கவனிப்பாரற்றுக் காடு மண்டி ஸ்தூபங்கள் எல்லாம் புதையுண்டு கிடந்திருக்கின்றன. 1912ல் தான் புதைபொருள் ஆராய்ச்சியாளர் காட்டை அழித்துச் சாஞ்சி ஸ்தூபங்களை வெளிக் கொணர்ந்திருக்கின்றனர். இந்தப் பணியில் பெரும்பாடு பட்டவர் சர் ஜான் மார்ஷல் என்பவர். அவரது பெரு முயற்சியாலேயே சாஞ்சி பழைய நிலைமையைப் பெற்றிருக்கிறது. சாஞ்சியில் இன்று சாந்தம் நிலவுகிறது. வாழ்க்கையில் ஏற்படும் தொல்லைகளை மறந்து அமைதியான இடத்தைத் தேடி ஓடுபவர்கள் தங்கியிருக்கவசதியான இடம் சாஞ்சி,

# தீமையும் நன்றே!

அபர்ணா



நான் ராகவாச்சாரியின் வீட்டுக்குள் நுழைந்தபோது அங்கே ஒரே அமர்க்களமாக இருந்தது. என்னைக் கண்டதும் சிரித்துக் கொண்டே வரவேற்றார் அவர்.

"பேரன் பேத்திகள் எல்லாம் வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது...."

"ஆமாம், ராமா! கோடை விடுமுறை இல்லையா?... ஒருவன் மேல் ஒருவன் புகார். உடனே விசாரணை, தீர்ப்பு செய்தாக வேண்டும்...வா, நாம் திண்ணைக்குப் போவோம். இந்த இரைச்சலில் பேச முடியாது."

இருவரும் திண்ணையில் அமர்ந்தோம். நான் மனத்தில் எதையோ எண்ணிக் கொண்டு 'அவரிடம் கேட்கலாமோ, கூடாதோ' என்ற சந்தேகத்துடன் உள்ளுக்குள் சிரித்துக்கொண்டேன். ராகவாச்சாரி அதைப் புரிந்து கொண்டு விட்டார்.

"என்ன மனத்துக்குள் சிரிக்கிறாய்?"

"ஒன்றுமில்லை, ஸார்!.... வந்து உள்ளே சொன்னீர்களே — புகார் என்று — அதைக் கேட்டதும் வேறு சில சிந்தனைகள் எழுந்தன."

"சொல்லேன்..."

"ரயில்வேயில் நீங்கள் ஏறக்குறைய முப்பது வருஷங்கள் வேலை பார்த்திருக்கிறீர்கள். உங்கள் பேரில் — தப்பாக நினைத்துக்கொள்ளாதீர்கள்! — பல புகார் செய்யப்பட்டிருக்கலாம் அல்லவா? அவைகளால் உங்களுக்குப் பாதகம் ஏற்பட்டிருக்கலாமே தவிர சாதகம் தோன்றியதுண்டா?"

"நல்ல கேள்வி!... புகார் செய்யப்பட்ட சிப்பந்திக்கு அவருடைய 'குற்றத்துக்காக ஏற்றபடி தண்டனை கூடுதலாகவோ குறைவாகவோ கிடைக்கும் என்பது சாதாரணமாக எதிர்பார்க்கக் கூடியவன். ஆனால், கேள். ஒரு புகார்க் கடிதம், அந்தப் புகாரில் எவ்விதத் தொடர்பும் இல்லாத ஒரு சிப்பந்தியைக் காப்பாற்றி யிருக்கிறது என்றால் ஆச்சரியமாக இல்லை?"

சுவை மிக்க ஒரு நிகழ்ச்சியைக் கேட்க நான் தயாரானேன்.

நாற்பது மணி நேர ஓய்வுக்குப் பின், மாலை அலுவல் பார்ப்பதற்காக ஸ்டேஷன் கட்டிடத்தில் அடியெடுத்து வைத்தான் நடராஜன். வேப்ப மரத்தின் நிழலில் நின்று கொண்டிருந்த பிரயாணிகளிடமிருந்து டிக்கட்டுகளைச் சேகரித்துக் கொண்டிருந்தேன்.

பாயின்ட்ஸ்மேன் குழந்தை வழக்கமாக 'வணக்கம்' போடுகிற அவன் அன்று நடராஜனுக்கு வணக்கம் தெரிவிக்கவில்லை. சற்று முன் நடராஜன் இறங்கியதைக் குழந்தை பார்த்துத்தான் இருந்தான்.

நடராஜனுக்கு எப்படியோ ஆகி விட்டது உள்ளம்.

தலைமை ஸ்டேஷன் மாஸ்டர் சந்திரசேகரன், அவனைக் கண்டதும் 'என்ன, நடராஜா!' என்று குடும்ப நலம் விசாரிப்பார். 'ரிலீவிங் ஸ்டேஷன் மாஸ்டர்தானே?' என்று சிறிதும் அலட்சியப்படுத்த மாட்டார். ஆனால் அன்றைக்கு அவனைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக் கொண்டார் அவர்.

அவன் நெஞ்சில் முள் தைத்தாற் போலிருந்தது. சமாளித்துக்கொண்டு, "குட் மார்னிங், ஸார்" என்றான்.

"குட் மார்னிங்..." டிக்கட்டுகளை மேஜை மேல் வைத்துவிட்டு, இழுப்பறையைத் திறந்தார், சந்திரசேகரன். ஒரு காகிதத்தை எடுத்து அவனிடம் நீட்டினார்.

அடுத்த கணம் நடராஜனின் முகம் சட்டென்று வெளிறியது. கரங்கள் சற்றே நடுங்கத் தொடங்கின. "ஸார்... ஸார்..." அவனால் மேலே பேச முடியவில்லை.

"கையாட வேண்டும் என்ற கருத்துடன், வரிசைக் கிரமமாக இல்லாமல், டிக்கட்டுக் கட்டின் நடுவிலிருந்து உருவி, விற்று, பணத்தைக் கணக்கில் காட்டாமல் விட்ட குற்றத்துக்காக உம்மை வேலையிலிருந்து தாற்காலிகமாக நீக்கம் செய்யப் பட்டிருக்கிறது..."—

இந்த உத்தரவைக் கண்ட எந்த நிரபராதி தான் கலங்கிப் போக மாட்டான்?

பத்து நிமிடங்களுக்குப் பின் — அவன் முதல் அதிர்ச்சியிலிருந்து விடுபட்டதும் வாராந்திர ஓய்வை நடராஜன் அனுபவித்துக் கொண்டிருந்தபோது, அந்த ஸ்டேஷனில் நடந்ததையெல்லாம் சந்திரசேகரன் விளக்கினார்.

முன் தினம் காலை அலுவலில் இருந்த சந்தானம் அலுவல் முடியும் தருவாயில் கணக்கைச் சரிபார்த்தான். நாலைந்து தடவைகள் கூட்டிப் பார்த்தும் கையிருப்புத் தொகை குறைவாகவே இருந்தது. சரியாக எட்டு ரூபாய் முப்பத்தாறு காசு! அதாவது எந்த ஊருக்கான டிக்கெட்டின் இரயம்?...

டிக்கட்டுக் 'கேஸி'ன் ஒவ்வொரு அறையிலும் இருந்த டிக்கட்டு வரிசையின் கடைசி எண்களை மீண்டும் பரிசோதித்தான் சந்தானம். தவறு தெற்றெனத் தெரிந்தது. நீடூர் ஸ்டேஷனுக்கான டிக்கட்டுக் கட்டில் இடையில் இரண்டு டிக்கட்டுகள் விற்பனையானதற்குக் கணக்கு விவரம் இல்லை. அதாவது, இரண்டு டிக்கட்டுகள் காணப்படவில்லை! அந்த ஸ்டேஷனிலிருந்து நீடூருக்கான இரயம் நான்கு ரூபாய் பதினெட்டுக் காசு. சந்தானம் எவ்வளவுதான் மண்டையை உடைத்துக் கொண்டாலும் கணக்கு எப்படி நேர் ஆகும்?

சந்தானம் சந்திரசேகரனுக்குச் சொல்லி அனுப்பினார். உடனே வந்து அவரும் பார்த்தார். விற்பனையான டிக்கட்டுகளின் எண்களைப் பதியும் பதிவேட்டையும் ஆராய்ந்தார். ஆமாம், நீடூர் டிக்கட்டு வரிசையில் இரண்டு டிக்கட்டுகள் 'கெட்டு'ப் போயிருந்தன.

அதிகாரிகளுக்குத் தகவல் கொடுத்தார் சந்திரசேகரன். குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பதில் மின்னல் வேகத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. நீடூர் நிலையத்தில் குறிப்பிட்ட அந்த இரண்டு டிக்கட்டுகளும் சேகரிக்கப்படவில்லை என்பது தெரிந்ததும், சிக்கலில் இன்னும் ஒரு முடிச்சு விழுந்தாற்போலாயிற்று.

தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டிய கட்டம் வந்ததும், அதற்கு முதல் பலியானான் நடராஜன் - 'தாற்காலிக வேலை நீக்கம்', பின்னால் விசாரணை, குறுக்கு விசாரணை, சாட்சியம், அப்புறம் தீர்ப்பு! தண்டனை?...

அந்தச் சமயத்தில் அதிகாரிகளுக்குக் கிடைத்த செய்திகள், சாட்சியங்கள், அனுமானங்களிலிருந்து, நடராஜன் பேரில்தான் பழியைச் சுமத்த வேண்டியிருந்தது. தலைமை அலுவலகத்தில் வணிகப் பிரிவினர், இந்த விஷயத்தை மேற்கொண்டு தொடர்வதில் கவனம் செலுத்தினர்.

* * *

ஒரு வாரம் சென்று புகார் விசாரணை இலாகாவிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்த ஸ்டேஷனுக்கு. மே மாதம் பதினாலாம் தேதி காலை அலுவலில் இருந்த ஸ்டேஷன் மாஸ்டர் ஒரு பிரயாணியிடம் அவமரியாதை தோன்றப் பேசினாராம். சம்பந்தப்பட்ட சிப்பந்தியிடமிருந்து விளக்கத்தைப் பெற்று அனுப்பும்படி தலைமை ஸ்டேஷன் மாஸ்டர் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார்.

சந்திரசேகரன் ரிஜிஸ்தர்களைப் புரட்டிப் பார்த்தார். 'ராமசாமி அல்லவா அன்று டியூட்டியில் இருந்திருக்கிறான்? சுத்த முரடனாயிற்றே? நாலு பேர் இப்படிப் புகார் செய்தால்தான் அவனுக்குப் புத்தி வரும்.... நல்லவேளை இங்கிருந்து மாற்றலாகிப் போய்ச் சேர்ந்தான். இல்லாவிட்டால் அவன் கண்ணெதிரிலேயே அவனுக்குப் பாதகமாக நான் எழுத வேண்டியிருக்கும். அப்புறம் என்னிடமும் பகைமை பாராட்டத் தொடங்கி விடுவான்.'

'ரிலீவிங் ஸ்டேஷன் மாஸ்டரா'க இருந்த ராமசாமி இரண்டு ஸ்டேஷன்களுக்கு 'ஓய்வு கொடுக்கும் ஸ்டேஷன் மாஸ்ட'ராக உயர்வு பெற்று ஐம்பது மைலுக்கப்பாலுள்ள ஒரு நிலையத்துக்கு மாற்றலாகிப் போய்விட்ட செய்தியைத் தெரிவித்தவுடன் அந்த சம்பவத்துக்குமுற்றுப்புள்ளி வைத்தார் சந்திரசேகரன்.

“இந்தப் பொது ஜனங்களுக்கு ரயில்வேக்காரர்களைக் கண்டால் ஒரே வெறுப்பு. இவர்கள் ஜம்பம் போஸ்டாபீஸில் நடக்கிறதா? மணி மூன்று அடித்து ஒரு நிமிஷம் கழித்துச் சென்றால் மணியார்டர் ஃபாரக் 'நாளைக்கு' என்கிறார். தாலூகா ஆபீஸில் ஒரு சிறு காரியத்துக்காக நாள் கணக்கில் தவம் கிடப்பார்கள். ஆனால் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துவிட்டாலோ பார்ஸல் போர்ட்டரிலிருந்து ஜெனரல் மானேஜர் வரை தங்களுக்கு அடிமை என்று நினைத்துக் கொள்ளுகிறார்கள்.”

மாரிக்கால மழை போலப் பொழிந்து தள்ளிக் கொண்டிருந்தார் தாமஸ்.



''இவன் இப்படி இரையும்படியா இப்போ புதுசா என்ன நடந்து போச்சு?'' என்று தாமரையைச் சுற்றி யிருந்தோரில் ஒருவன் கேட்டான்.

''போன வாரம் ஒரு புகார் விசாரணை. ஏ. எஸ். எம். ஒரு பிரயாணியிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டாராம். விசாரணைக்கு அந்தப் பிரயாணி வந்தாராம். 'மரியாதைக் குறைவு என்கிறீரே, அது எப்படி நிகழ்ந்தது?' என்று கேட்டிருக்கிறார் விசாரணை அதிகாரி. ஒரு பெரிய பொய்யை எடுத்து வீசினாராம் அந்தப் பிரயாணி. அவர் டிக்கட் கேட்டபோது டிக்கட் அடுக்கின் நடுவிலிருந்து உருவி எடுத்துக் கொடுத்தாராம், அலுவலிலிருந்த ஸ்டேஷன் மாஸ்டர். சின்ன ஸ்டேஷனானதால் டிக்கட்டு, பார்சல், லக்கேஜ் எல்லாவற்றையும் கவனிப்பவர் அவரே...''

''மேலே சொல்லு...''

''உடனே பிரயாணி, 'டிக்கட் வரிசையின் அடியிலிருந்தல்லவா எடுக்க வேண்டும்?' என்றாராம். 'உமக்கென்னய்யா அதைப் பற்றி? உமக்கு வேண்டியது டிக்கட். எடுத்துக் கொண்டு போம்' என்று பதில் கிடைத்ததாம். பின் இவர் பேச, அவர் பேசப் பெரிய வாக்குவாதம் ஆகி யிருக்கிறது. விரைவில் வண்டி வரவே, பிரயாணி ஏறிப் போய் விட்டாராம். இதிலே ஒரு பாயிண்ட் என்னவென்றால், டிக்கட் கட்டின் நடுவிலிருந்து டிக்கட்டுகளை உருவி எடுத்திருந்தால் அது இத்தனை நாட்களில் வெளியாகாமல் போயிருக்குமா?''

''எத்தனை டிக்கட்டு?''

''இரண்டு என்று கேள்வி.''

''எந்த ஊருக்கு?''

''நீடூருக்கோ, என்னவோ சொன்னாராம்.''

''என்ன?.... நீடூருக்கா?.... இரண்டு டிக்கட்டா?'' வியப்பில் அலறினான். இவ்வளவு நேரம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வரததேசிகன்.

''என்னப்பா இப்படி அலறுகிறே?''

''என் சிநேகிதன் நடராஜன் இருக்கிறானே அவன் கூட.... சரி, நான் இப்போது சொல்லப்போவதில்லை, நான் உடனே போய் நடராஜனைப் பார்க்க வேண்டும்.''

யாருடைய பதிலுக்காகவும் காத்துக் கொண்டிராமல் அவன் வெளியேறினான்.

''நடராஜன் சஸ்பென்ஷனில் இருக்கிறான், தெரியுமில்லே?'' என்று கேட்டார் தெய்வநாயகம்.

''கேள்விப்பட்டேன். என்ன காரணம் என்பதுதான் சரியாகத் தெரியவில்லே.''

''டிக்கட்டுப் பணம் கையாடல்!...''

''ஹூம்... இந்த மாதிரி இரண்டொரு புல்லுருவிகள் இருப்பதால்தான் நம் இலாகாவின் பெயரே கெடுகிறது.'' — ஒரு சத்தியசந்தன் முணுமுணுத்தார்.

''இருக்கலாம். ஆனால் குற்றம் சாட்டப்பட்டிருப்பதாலேயே ஒருவன் குற்றவாளி ஆகிவிட மாட்டான். இன்னும் கூறப் போனால், குற்றவாளி என்று தீர்மானிக்கப் பட்டவனே, சில சமயத்தில் குறிப்பிட்ட குற்றத்தைச் செய்திருக்க மாட்டான்!'' இப்படி ஓர் அனுபவம் பேசிற்று.

இரண்டு மாத காலமாக அலுவல் இல்லாமல், அரைச் சம்பளத்தில் காலம் தள்ளிக் கொண்டிருந்த நடராஜனுக்கு வரததேசிகன் கூறிய செய்தி மிகுந்த ஆச்சரியத்தையும் தெம்பையும் அளித்தது. நீடூர் டிக்கட் வரிசையின் நடுவிலிருந்து இரண்டு டிக்கட்டுகளை எடுத்துக் கொடுத்ததாகப் புகார்க் கடிதம் எழுதிய பிரயாணி கூறுகிறார். அது நடந்தது என்றைக்கு? டிக்கட்டுகள் ஏன் நீடூரில் கொடுக்கப்படவில்லை? இவை தெளிவாகி விட்டால் நடராஜன் தப்பிவிட்டலாம்.

புகார் செய்திருந்த பிரயாணியின் விலாசத்தை அறிவது கஷ்டமாக இல்லை. ஆனால், விலாசதாரரான முகம்மது இஸ்மாயிலைக் கண்டுபிடிப்பதுதான் கடினமாக இருந்தது.

இஸ்மாயில் ஒரு வியாபாரி. இன்றைக்கிருந்த ஊரில் நாளைக்கு இருக்க மாட்டார் அவர்.

மூன்றும் முறையாக அவரைத் தேடிச் சென்றபோதுதான் நடராஜனால் அவரைக் காண முடிந்தது. தான் வந்த காரணத்தை விளக்கிவிட்டு, நீடூர் ஸ்டேஷனில் டிக்கட்டு கொடுக்கப்படாதது ஏன் என்றும் கேட்டான்.

''அதுங்களா? நாங்க — அதாவது நானும் என் கூட்டாளியும் நீடூருக்கே போகலீங்க. மாயவரம் ஜங்ஷனிலேயே ஒரு வியாபாரியைப் பார்த்தோம். அவங்களோட, அங்கிட்டு இருந்தபடியே நன்னிலம் போய்விட்டோம். போறேனுங்களா? நீடூர் டிக்கட்டு சட்டை ஜேபியிலேயே தங்கிப் போச்சு!''

''எங்கள் ஆபீஸிலிருந்து கடிதம் வந்தால் இதையே எழுதிக் கொடுப்பீர்களா?''

''கட்டாயம். அந்த ஆளு மேலே எனக்குச் சந்தேகம்தான். நான் ஒண்ணும் கண்மூடித்தனமா புகார் பண்ணிப்பிடலே. மத்தவங்க மேலே குத்தம் சுமத்தறதிலே நமக்கு என்னங்க லாபம்?''

''நல்லதுங்க. நான் வருகிறேன்.''

ராகவாச்சாரி என்னை நிமிர்ந்து பார்த்தார். ''முடிவு புரிந்து விட்டதா?''

''ஊகம் செய்ய முடிகிறது என்றாலும், இருந்தாலும் மிகுதியையும் நீங்களே சொல்லி விடுங்களேன்.''

''நடராஜன் வணிகத் துறை அதிகாரிக்குக் கடிதம் எழுதினான், புகார் விசாரணைத் துறையுடன் தொடர்பு கொள்ளும்படி. விஷயம் ஓரளவு தெளிவானதும் அவர்கள் இஸ்மாயிலுக்குக் கடிதம் போட்டார்கள். அவர் கடிதம் எழுதினார். நடராஜன் குற்றவாளி அல்ல என்பதற்குச் சாட்சியங்கள் கிடைத்துவிடவே வேலையில் சேரும்படி அவனுக்கு உத்தரவு கொடுத்து விட்டார்கள். பார்த்தாயா, யாரோ எழுதிய புகார்க் கடிதம் ஒரு நிரபராதிக்குத் துணையாக நின்றதை!''

''அது சரி, ஸார்! ராமசாமி விஷயம் என்ன ஆயிற்று?''

''அது வேறு கதை! அப்புறம் சொல்கிறேன். இப்போ கடைத் தெருவுக்குப் போகணும். வாயேன்...''

இருவரும் எழுந்து தெருவில் நடக்கத் தொடங்கினோம்.

மறுபடியும்
மறுபடியும்
எப்பொழுதும்

அவைகள் நல்லவை—
அவைகளே

# வில்ஸ் *

நேர்த்தியான சர்வதேசடிஸைன்
கொண்ட பாக்கெட்டில்

| | |
|---|---|
| 20 சிகரெட்டுகள் | ரூ. 1.20 ந.பை. |
| 10 சிகரெட்டுகள் | 60 ந.பை. |
| 1 சிகரெட்டு | 6 ந.பை. |

உள்ளூர் வரிகளுக்கு உட்பட்டது

* ஒவ்வொரு வில்ஸ் பாக்கெட்டிலுமுள்ள நட்சத்திர சின்னம் W.D. & H.O. வில்ஸின் புகழ்பெற்ற தரத்திற்கு உத்திரவாதம் அளிக்கிறது.







JWTW 354R1



சே

நியக் கலைஞர் 'பரவாதிமல்லரின் பிரார்த்தனை அறைக் கதவுகள் படீரெனத் திறக்கப்பட்டன. விடுபட்ட அம்புபோல் தறிகெட்டு ஓடி வந்து அவ்வறைக்குள் புகுந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி தன்னை மீறிய பரபரப்புடன் அங்குமிங்குமாகச்

## அத்தியாயம் இருபத்தேழு

# புற்றில் சிக்கிய தேரை

சுழன்று பார்த்தாள். பிறகு சடாரெனத் தாவியோடிப் போய் அந்த அறையில் தொங்கவிடப்பட்டிருந்த — சமணரின் 'பிறவிச் சக்கரமான' ஸ்வஸ்திகச் சின்னம் பொறித்த — நீல நிறத் திரைக்குப் பின்னாலிருந்து வெகு பத்திரமாக மறைத்து வைத்திருந்த ஓலைக் குழலொன்றை எடுத்துக்கொண்டு திரும்பிநின்றவள், அதைத் திறந்து ஒரு பட்டோலையைப் பிரித்து, மிரண்டு சுழலும் தன்

பார்வையை அதில் படர விட்டாளே! முகத்தில் வெற்றிக் களிப்பு!

பட்டோலையைச் சுருட்டிக் குழலில் அடைத்து மூடித் தன் கொடியிடையில் செருகிக்கொண்டு அதே பரபரப்புடன் கூடத்து அறைக்கு ஓடி வந்தாள்.

சளுக்கியக் காவல் வீரர்களில் ஒரு பகுதியினர் அப்போதுதான் அந்த இல்லத்து வேலியின் வாயிலை நெருங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. இந்தச் சமயம் அவள் முகப்புக் கதவைத் திறந்து கொண்டு வெளியேறினால் அவர்கள் கண்ணில் நிச்சயமாகத் தென்பட்டு விடுவாள்!

தவிதவித்து நின்ற உத்தமசீலி சடாரென்று திரும்பி இடது பக்கமிருந்த ஓர் அறைக்குள் ஓடி அதன் சாளரத்தைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். சளுக்கிய வீரர்களில் மற்றொரு பகுதியினர் அந்தப் பக்கமாகவும் தொலைவில் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அங்கிருந்து வலப் பக்க அறைக்கு ஓடி வந்த உத்தமசீலி, அந்தத் திசையிலிருந்தும் சளுக்கிய வீரர்களில் இன்னொரு பகுதியினர் வெறி வேகத்துடன் தம் குதிரைகளைச் செலுத்தி வருவதைக் கண்டு திகைத்து நின்றாள். என்ன செய்வ

என்று படபடப்பான குரலில் வினவினான்.

''மன்னியுங்கள், தாயே! அன்று தாங்கள் என்னை அந்த ஆதுரசாலையில் சந்தித்து ஓலையொன்றைக் கொடுத்து, அதை ஆலம்பாக்கம் இளங்காரிக்குடையானின் இல்லத்தில் தங்கியிருக்கும் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியிடம் சேர்ப்பித்து விட்டு நேரே இந்தப் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்துக்கு வருமாறு கட்டளையிட்டீர்களே, அதன்படி அன்றைக்கே ஆலம்பாக்கத்துக்குப் போய்ச் சோழ இளவரசி இருந்த அறைக்குள் அவ்வோலையைப் போட்டு விட்டு அதன் விளைவு என்ன ஆகிறது என்பதைச் சாலையின் ஓரிடத்தில் மறைந்திருந்து கவனித்துக் கொண்டிருந்தேன். மறு நாள் விடியற்சாம நேரத்தில் சோழ இளவரசி அந்த இல்லத்திலிருந்து வெளிப்பட்டு மதுரைக்குப் போகும் ஒரு கூலவாணிகனின் வண்டியில் ஏறிச் சென்றார். பிறகு நான் அங்கிருந்து பெருவளநல்லூருக்குப் புறப்பட்டேன். வரும் வழியில், திரமிள சமண சங்கத் தலைவரும் அவரது குழுவினரும் ஆதுர சாலையை மூடி விட்டுக்

# பத்தினிக் கோட்டம்

## ஜெகசிற்பியன்



தென்றே அவளுக்குப் புரியவில்லை. நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. கால்கள் நிலை கொள்ளாமல் பரபரத்தன. இறுதியில் அந்த இல்லத்தின் பின்புறச் சிறிய வாயிலை நோக்கி விரைந்து சென்றவள், கிரீச்சிட்டு அப்படியே நின்று விட்டாள்.

''வணக்கம், அம்மணி!'' — ஆந்திர இளவரசியின் சிவிகை தூக்கியான நாகோதரன்தான் அச்சிறிய வாயிலின் வெளிப்புறச் சுவர் அருகில் வினயமாக நின்று கொண்டிருந்தான். தன் மதிப்புக்கும் அன்புக்கும் உரிய இளவரசியைச் சந்தித்து விட்ட மகிழ்ச்சி அவன் முகமெங்கும் பரவியிருந்தது.

ஸ்தம்பித்து நின்ற உத்தமசீலி உள்ளார்ந்த மகிழ்ச்சியுடன், ''என்ன நாகோதரா! இத்தனை நாளும் நீ எங்கே போய் இருந்தாய்? கடந்த இரண்டு நாட்களாக உன் வரவை எதிர்பார்த்து இங்கு காத்திருக்கிறேனே!''

காஞ்சியை நோக்கிச்செல்வதைக் கண்டு அவர்களிடம் போய் விவரம் விசாரித்தேன். சளுக்கிய தளபதி வில்வேலியால் தங்களுக்குச் சங்கடம் நேரிடும் என்று அஞ்சி அகளங்க அடிகளைக் கூட்டிக் கொண்டு காஞ்சிக்கு அருகில் உள்ள திருப்பருத்திக் குன்றம் என்னும் ஊருக்குப் போவதாகச் சமந்தபத்திரர் சொன்னார். அத்துடன்

என்னையும் சிறைப் பிடிக்கச் சளுக்கிய வீரர்கள் அலைந்து கொண்டிருப்பதாகத் தெரிவித்தார். நான் மிக எச்சரிக்கையோடு என் பயணத்தைத் தொடர்ந்தேன். சமந்தபுத்திரர் சொன்னது போலவே சளுக்கிய வீரர்கள் சுற்றியலைந்து கொண்டிருந்ததைப் பல இடங்களில் கண்டேன். அவர்கள் கையில் சிக்கிவிடக் கூடாதே என்பதற்காக, அங்கங்கே ஒளிந்தும் மறைந்தும் தங்கியும் இருக்க வேண்டியதாகி விட்டது. அதனால்தான் இங்கு வந்து சேரத் தாமதமாகியும் விட்டது, அம்மணி!'' என்று பணிவுடன் கூறி நிறுத்தினான் நாகோதரன்.

அவன் சொன்ன விவரங்களை ஒரு செவியிலும், தூரத்தில் கேட்ட சளுக்கிய வீரர்களின் குதிரைக் குளம்பொலியை மறு செவியிலும் கவனித்துக் கொண்டு நின்ற உத்தமசீலி, ''சமந்தபத்திரர் தம் குழுவினருடன் திருப்பருத்திக்குன்றத்துக்குப் போயிருக்கிறாரா?'' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டவள், ''அது சரி, நாகோதரா! சளுக்கிய விக்கிரமாதித்தர் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கப் போகும் விஷயத்தை அந்த ஓலையில் தெரிவித்திருந்தேனே, அதைச் சோழ இளவரசி பாண்டிய மன்னரிடம் போய்த் தெரிவித்து விட்டிருப்பாள் அல்லவா?'' என்று அவசரமாகக் கேட்டாள்.

'' அவர் அந்தச் செதியைத் தெரிவித்தாரோ இல்லையோ; ஆனால் பாண்டியருக்கும் சளுக்கியருக்கும் நெல்வேலி என்னும் இடத்தில் போர் மூண்டு விட்டதாக இன்று காலையில் இவ்வூர் மக்கள் பேசிக் கொண்டிருந்ததை என் காதாரக் கேட்டேன், தாயே!'' என்றான் நாகோதரன்.

''அப்படியா?'' என்று தன் கண்களை அகல மலர்த்திய உத்தமசீலி சட்டெனத் திரும்பி, ''நாகோதரா! இன்று மாலை அதோ அந்தச் சிற்றாற்றங் கரையோரம் ஒரு வழுக்குப் பாறையண்டை ஒளிந்திருந்த சளுக்கியத் தளபதி வில்வேலியை நீதான் கத்தி எறிந்து கொல்ல முயன்றாயா?'' என்று அச்சம் நிறைந்த ஆவலுடன் வினவினாள்.

''அப்படி ஏதாவது நடந்ததா, இளவரசி?.... ஆகா, எனக்கு அந்தச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே! கிடைத்திருந்தால் கத்தியை எறிந்ததோடு வருவேனா? அவனுடைய உறைந்த இரத்தத்தை மூட்டை கட்டிக் கொண்டு வந்து உங்களிடம் காட்டியிருப்பேனே, தாயே!'' என்று பற்களை நறநறவென்று கடித்தான் நாகோதரன்.

நாலாபுறமுமிருந்து குதிரைகளின் குளம்பொலி நெருங்கிக் கேட்க ஆரம்பித்தது.

''அது போகட்டும், நாகோதரா!...: இந்தா, இதைப் பிடி!'' என்று சொன்ன உத்தமசீலி தன் இடுப்பில் செருகி வைத்திருந்த ஓலைக் குழலை எடுத்துக் கொடுத்து அவன் செவி அருகில் குனிந்து ஏதோ கிசுகிசுத்தாள்.

ஓலைக் குழலை வாங்கிக் கொண்ட நாகோதரனின் கண்கள் வியப்பால் விரிந்தன.

''சீக்கிரம் ஓடிவிடு! அவரை இங்கே வரவிடாதே! நான் சொன்னபடி செய்! போ, சீக்கிரம்!'' என்று நடுங்கிக் குழறினாள் உத்தமசீலி.

தயக்கத்துடனும் பீதியுடனும் அவளைப் பார்த்து, ''தாங்கள் அம்மணி?'' என்று இழுத்தான் நாகோதரன்.

''நானா?... நான் இன்னும் சில விநாடி நேரத்தில் பாம்பின் வாய்ப்பட்ட தேரையாகப் போகிறேன்! அதோ, என்னைப் பிடிக்கச் சளுக்கிய வீரர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்! நீ ஓடிவிடு! சீக்கிரம் ஓடு!''

நாகோதரன் தன் கால்களை அழுந்த ஊன்றி நின்றுகொண்டு, ''மன்னியுங்கள் தாயே! உங்களைத் தனியே விட்டு விட்டு நான் இங்கிருந்து ஓரடியும் நகர்ந்து போக மாட்டேன்! உங்களைப் பிடிக்க வரும் அந்தப் பாம்புக் கூட்டம் என்னையும் பிடித்துக் கொண்டு போகட்டும்! விஷ்ணுவர்த்தன் பூமானின் உப்பைத் தின்று உடம்பை வளர்த்த நான் அவருக்குத் துரோகம் செய்ய மாட்டேன்! என் உயிரே போவதாயினும் எங்கள் அருமை ஆந்திர இளவரசியாரை அநாதரவாக விட்டு விட்டுப் போகவே மாட்டேன்!'' என்று அடம் பிடித்தான்.

குதிரைகளின் குளம்பொலி இப்போது இன்னும் நெருங்கிக் கேட்டது.

உத்தமசீலி எல்லையற்ற சினம்கொண்டு அவனைத் தீய்த்துப் பொசுக்குவதுபோல் விழித்துப் பார்த்தாள். தன் இரு கரங்களையும் இடுப்பின் மேல் ஊன்றிக் கொண்டு மிடுக்குடன் நிமிர்ந்து, ''ஏ, நாகோதரா! ஆந்திர இளவரசி கட்டளையிடுகிறேன்; இங்கிருந்து இக்கணமே போகப் போகிறாயா, இல்லையா?'' என்று ஆவேசக் குரலில் கூவினாள்.

நடுநடுங்கி விட்டான் நாகோதரன். பின்னால் நகர்ந்து கொண்டே தலை வணங்கிக் குனிந்து, ''ஆகட்டும், அம்மணி! தங்கள் ஆணைப்படியே இதோ செல்கிறேன்!'' என்று விம்மலும் பொருமலுமாக அழுது கூறியவாறு அங்

எழுதுவதில்
கவர்ச்சியும்
இன்பமும்
பெறுவதற்கு

**Iris**
**INKS**

ஐரிஸ் இங்குகள்
5 மங்காத
நிறங்களில்




ரிஸர்ச் கெமிகல் லாபரட்டரீஸ்
[illegible] பிரிட்ஜ் ரோடு, சென்னை-20
550, எட்டாவது மெயின் ரோடு,
மல்லேஸ்வரம், பெங்களூர்-12

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு எச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்கமுடியாமல் வைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உரிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக்கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்து கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் சிங்கப்பூர் சொறி, வண்ணான் படை என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஒருவகைக் கிருமி. மூல காரணமான இந்தக் கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து சௌகரியமடைய முடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடர்ம் (NIXODERM) முதல் தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி, கிருமிகளைக் கொன்று சருமத்தின் புண்ணை ஆற்றி, மிருதுவாக்கி, சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடர்ம் (NIXODERM) அரிப்பை நிறுத்துவதோடு வெடிப்புகள், மேலும் பாதத்தில் ஏற்படும் புண்கள், மோசமாகப் பரவும் படை, முகப்பருக்கள், கட்டிகள், முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர் தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (NIXODERM) வாங்குங்கள். பூர்ண திருப்தி அது நிச்சயமாக அளிக்கும்.

## காலம் கடப்பதற்கு முன்

இப்பொழுதே இன்ஷ்யூர் செய்யுங்கள்




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

# நெருப்பு – கப்பல் – விபத்து

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்குமேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
ஆமதாபாத், ஹைதராபாத், கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி

6




இருந்து சடாரெனத் திரும்பித் தோட்டத்தின் செடி கொடிகளுக்கிடையே புகுந்து குடல் அறுந்து போவது போன்ற ஓட்டத்தில் ஓடலானான்.

சளுக்கிய வீரர்களின் குதிரைக் குளம்பொலி மிக மிகச் சமீபித்து விட்டது!

விரைந்து நின்ற உத்தமசீலி சரேலென உள்ளே ஓடி ஒரு விசாலமான அறைக்குள் புகுந்தாள். அது அன்றொரு நாள் அவன் வழி தப்பி வந்தபோது தங்கியிருந்த எழிலார்ந்த அறை.

அந்த அறையின் மயில்கண் சாளரத்தைத் திறந்து அதன் திரையை நீக்கி விட்டுத் தொலைதூரத்திலிருந்த சிற்றூற்றங்கரைப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள். அங்கே, அந்த உயர்ந்தோங்கிய ஒற்றைச் சவுக்கை மரம் பலமான காற்றில் அலைப்புற்று ஆடிக்கொண்டிருப்பது மட்டுமே தெரிந்தது!

உத்தமசீலியின் அழகிய கருவண்டுக் கண்கள் அருவியென நீரைச்சொரிந்தன.

திகிலும் திகைப்புமாகப் பிரமை பிடித்து நின்று கொண்டிருந்த : பரமேசுவரவர்மன், சற்று முன் அங்கிருந்து ஓடிய உத்தமசீலி திரும்பி வராததையும், சளுக்கியக் காவல் வீரர்கள் சேதியக் கலைஞரின் இல்லத்தைச் சுற்றி வளைக்க விரைவதையும் கண்டு திடீரென ஓர் ஆவேசமடைந்தவனாய் அந்த இல்லத்தை நோக்கி ஓட முற்பட்டவன், எதிரே பாய்ந்து வந்த யாரோ ஒரு மனிதனால் பலமாகத் தடுக்கப்பட்டு அதிர்ந்து நின்றான்.

''மாமன்னரவர்கள் மன்னிக்க வேண்டும். என் பெயர் நாகோதரன். ஆந்திர இளவரசியாரின் சிவிகை தூக்கி நான். தாங்கள் அந்த இல்லத்துப் பக்கம் போக வேண்டாம். போகாதீர்கள், அரசே!'' என்று மூச்சடைக்க உளறிக்கொண்டே அங்கு ஓடிவந்து நின்ற நாகோதரன் இரு கைகளையும் பரக்க விரித்து அவனை மேலே போக விடாமல் வழி மறித்து நின்றான்.

கடுகடுத்த முகத்துடன் வெறித்துப் பார்த்த பரமேசுவரவர்மன் பசி கொண்ட வேங்கை போல் அவன் தலைக்கு மேலே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடலானான். பதறித் துடித்த நாகோதரன் அவனுக்கு முன்னால் ஓடிப் போய் மீண்டும் அவனைத் தடுத்து மறித்துக்கொண்டு குறுக்கே நின்று, ''நான் சொல்வதைத் தயைகூர்ந்து கேளுங்கள், அரசே! ஆந்திர இளவரசியார் சொன்னதைத்தான் சொல்கிறேன்! இந்த எளியேனின் பேச்சை

ஏற்றருளுங்கள் பிரபு!'' என்று கெஞ்சிக் கையெடுத்துக் கும்பிட்டான்.

அவன் சொன்னது எதையுமே காதில் வாங்கிக் கொள்ளாத பரமேசுவரவர்மன், முன்னைவிடக் கோபாவேசத்தோடு நிமிறித் துள்ளி அவனை முரட்டுத்தனமாக இடித்துக் கீழே தள்ளிவிட்டுப் புயலெனப் பாய்ந்து ஓடினன். உருண்டு புரண்டு எழுந்த நாகோதரன் மறுபடியும் அவனுக்கு முன்னுல் ஓடி, ''வேண்டாம், அரசே! அடியேன் சொல்வதைக் கேளுங்கள்; அங்கே போனுல் உங்களுக்கும் ஆபத்து நேரும்!'' என்று அலறிக் கதறிக்கொண்டு அவனைப் பின்னுக்குத் தள்ள முயன்ருன்.

இடி முழக்கம் போன்ற ஒரு குமுறல் ஒலி! கோபாவேசத்தின் உச்சத்தை அடைந்துவிட்ட பரமேசுவரவர்மனின் புஜங்கள் மலை போல் உயர்ந்து எழும்பின. கண்கள் அனற் பிழம்பெனச் சிவந்து கனல் ஒளியைக் கக்கின. மரமரத்துத் துடித்த தன் வலக் கையால் இடையைத் தொட்டுத் தடவினன். இன்றுதான் முதன் முதலாகத் தனது உடைவாளைத் தேடித் துழாவியது அவன் கை. உடைவாளற்ற இடையை வெறுமனே தொட்டுவிட்டுத் திரும்பிய கையை வேகமாகச் சுழற்றி, ''அற்ப மிருகமே! என்னையா தடுக்கிருய்?'' என்று பயங்கரமாக உறுமிக்கொண்டே நாகோதரனின் மேல் பாய்ந்து அவன் காலை வாரிப் பிடித்துத் தூக்கி ஆலவட்டமாகக் கரகரவென்று சுழற்றிப் பந்து எறிவதுபோல் ஆகாயத்தில் விட்டெறிந்தான். குபீரென்று மேலே சுழன்றுகொண்டு போன நாகோதரன், அதே சுழற்சியுடன் ஆற்று மணலில் போய்த் தொபுகடீரென்று விழுந்தான். அப்படி விழுந்த அதிர்ச்சியால் அவன் கையில் பற்றியிருந்த அந்த ஓலைக் குழல் சற்றுத் தொலைவில் போய்க் கணீரென்ற ஓசையுடன் தெறித்து விழுந்தது.

சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கிப் பாய்ந்தோடக் காலெடுத்த பரமேசுவரவர்மன் அந்த ஓலைக் குழலை எப்படியோ பார்த்துவிட்டுப் பரபரப்புடன் விரைந்து போய் அதை எடுத்து மங்கிய மாலை ஒளியில் பட்டோலையைப் பிரித்துப் படித்தான்.

உலையிலிட்ட செப்புச் சிலைபோல் சிவந்து கனன்று கொண்டிருந்த அவன் உடல் சில்லிட்டுப் பனிப்பாறையாக உறைந்து விறைத்தது. கண்களில் நீர்க் கொப்புளித்து வழிய, தொலைதூரத்



ராஜேந்திரன் — சௌபாக்யலக்ஷ்மி



ராமன் — பவானி

பாட்ன "ஸர்ச்லைட்" ஆங்கில தினசரி பத்திரிகையின் ஆசிரியராயிருந்த லேட் பண்டிட் எம். எஸ். எம். சர்மா, அவர்களின் கடைசி இரண்டு குமாரிகளாகிய சௌ. சௌபாக்கியலக்ஷ்மி, சௌ. பவானி இவர்களது விவாகங்களை அவருடைய ஒரே குமாரர் பம்பாய் பிரஸ் டிரஸ்ட் ஆப் இந்தியா செய்தி ஸ்தாபனத்தில் பணிபுரியும் ஸ்ரீ எம். சுந்தரேசன் சமீபத்தில் பம்பாய் தமிழ்ச் சங்கத்தில் வெகு சிறப்பாக நடத்தி வைத்தார். முதல் படத்தில் (இடது) சௌ. **சௌபாக்கியலக்ஷ்மி** சிரஞ்சீவி **பி. ராஜேந்திரன்** (**L. I. C of INDORE**). இந்தூர் டெக்ஸ்டைல்ஸ் கன்ஸல்ட்டண்டு ஸ்ரீ வி. பி. ஐயருடைய குமாரர். இரண்டாவது படத்தில் (வலது). சௌ. பவானியும், சிரஞ்சீவி **ஏ. ஆர். ராமன்** தம்பதியினரைக் காணலாம். மணமகன் பம்பாய் இந்தியன் ஆக்ஸிஜன் கம்பெனியில் பணிபுரிகிறவரும், சென்னை அக்கவுண்டெண்ட் ஜெனரல் ஆபீஸில் இருந்த லேட் ஏ. வி. ராமஸ்வாமி ஐயருடைய குமாரருமாவர்.

ஆக்கு அப்பால் தெரிந்த சேதியக் கலைஞரின் இல்லத்தை அவன் ஏறிட்டு நோக்கினான்.

''தேன் கூட்டை மொய்க்கும் ஈக்கள் போல் அந்த இல்லத்தைச் சுற்றி வளைத்துக்கொண்ட சளுக்கியக் காவல் படை, காட்டுக் கூச்சல் போட்டு ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தது.

''என் அன்பின் பேரரசி! எனது ஆத்மாவின் பொற்சுடரே! எனக்கு எதை அளிக்கப் போவதாகச் சொன்னாயோ அது என்ன என்று இவ்வோலையின் மூலம் அறிந்து கொண்டேன்! உனது கட்டளைப்படி இதோ இவ்வோலையை எடுத்துக்கொண்டு இப்போதே புறப்படுகிறேன் கண்ணே!'' என்று இரண்டு கைகளையும் விரித்து உயர்த்திப் பரிதாபமாகக் கேவிக் கதறிய பரமேசுவரவர்மன் தொய்ந்து துவண்டு பின்னால் திரும்பினான். அங்கே அவனுடைய காலடியில் வந்து சுருண்டு கிடந்தான் நாகோதரன்.

அவனை மெல்லக் குனிந்து தூக்கி நிறுத்திய பரமேசுவரவர்மன், அவன் உடலில் அப்பியிருந்த குருதியையும் மண்ணையும் இதமாகத் துடைத்து விட்டு, ''வருத்தப்படாதே, நாகோதரா! ஆத்திரத்தில் அறிவிழந்து நடந்து விட்டேன்! உன் இளவரசியின் கட்டளைப்படி நாம் புறப்படுவோம், வா!'' என்று தழுதழுத்த குரலில்கரகரத்தான்.

இந்தச் சமயம் ஒரு பயங்கரமான பிளிறல் ஒலியும், கனைப்புச் சத்தமும் கேட்டன. கலைஞரின் இல்லத்தருகில் நிறுத்தி வைக்கப் பெற்றிருந்த அவனுடைய பட்டத்து யானையான அரிவாரணமும், குதிரையும்தான் அப்படிப் பிளிறி முழக்கமிட்டன.

அந்த ஒலியைச் செவிமடுத்த பரமேசுவரவர்மன் வாயில் கைகளை வைத்துக் குவித்துக்கொண்டு, ''அரிவாரணா!'' எனப் பெருங்குரலெடுத்துக் கூவினான்.

அப்படிக் கூவிய சில விநாடிகளுக்கெல்லாம் ஒரு கரிய பெரிய குன்றமே உருண்டு புரண்டு வருவதுபோல் தன் புழைக் கையைச் சுழற்றிப் பயங்கரமாகப் பிளிறிக்கொண்டே அவனை நோக்கி ஓடி வந்தது அரிவாரணம். அதைப் பின்தொடர்ந்து அந்தக் குதிரையும் மிரண்டோடி வந்துகொண்டிருந்தது. அவற்றைத் துரத்திக்கொண்டு சளுக்கியக் காவல் வீரர்கள் வெறிப் பாய்ச்சலிட்டு வந்தனர்.

''நாகோதரா! அதோ, அந்தக் குதிரை மீது நீ ஏறிக்கொள்! போ, சீக்கிரம்!'' என்று துரிதப்படுத்தினான் பரமேசுவரவர்மன். அங்கு ஓடிவந்த தன் அரிவாரணத்தின் மீது மின்னலெனத் தாவி அமர்ந்தான். நாகோதரனும் குதிரைமேல் பாய்ந்தேறினான். மறுகணம் அவ்விருவரும் அந்தச் சிற்றூரைக் கடந்து வடதிசை நோக்கிக் காற்றெனக் கடுகி மறைந்தனர்.

மாலை மங்கி இருள் திரை எங்கும் விரிந்து விட்டது!

## அத்தியாயம் இருபத்தெட்டு

# புயலில் சிக்கிய பூங்கொடி

''வர வேண்டும், வர வேண்டும்! மதிப்புக்குரிய மாதுலரே, வரவேண்டும்!'' என்று மகிழ்ச்சிப் பெருக்குடன் கூவிக்கொண்டே தன் கையிலிருந்த மதுக் கிண்ணத்தை எறிந்து விட்டு எழுந்து ஓடி வந்து வரவேற்றான் சளுக்கிய இளவரசன் விநயாதித்தன்.

சாக்காடு போல் வெறிச்சோடிக் கிடந்த அந்தப் பல்லவபுரம் அரண்மனைக் கூடத்தில் கம்பீரமாகப் பிரவேசித்த பழையாறைச் சோழர் தம் கூரிய பார்வையைச் சுற்றிலும் சுழல விட்டவாறு, ''சளுக்கிய இளவரசரை இன்று முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்!'' என்று கலகலப்பான குரலில் கூறிக்கொண்டே ஓர் ஆசனத்தில் போய் அமர்ந்தார்.

''சளுக்கிய இளவரசனா?... உங்கள் அருமை மருகன் என்று கூறுங்கள், மாதுலரே!'' என்று உற்சாகக் கேலி விட்டு நகைத்த விநயாதித்தன் மெல்ல விரல்களைச் சொடுக்கினான். உடனே நான்கைந்து காவல் வீரர்கள் அங்கு ஓடி வந்து நின்றனர்.

அவர்களிடம் அவன் ஏதோ கண் சாடை செய்துவிட்டுத் திரும்பி, ''என்ன மாதுலரே, முன்னறிவிப்பு இன்றித் திடீரென வந்துவிட்டீர்களே! தாங்கள் இங்கு வருவதாகத் தெரிந்திருந்தால் ஒரு பிரமாதமான வரவேற்பு வைபவத்துக்கே ஏற்பாடு செய்திருப்பேனே!'' என்று முகத்தைச் சுளித்து வருத்தப் பட்டுக் கொண்டான். நெல்வேலியில் பாண்டியருடன் ஜீவ மரணப் போர் நிகழ்த்திக் கொண்டிருக்கும் சளுக்கிய

மாமன்னன் விக்கிரமாதித்தனுடைய மைந்தன்தான் மதுப்போதையில் இவ்வாறு உளறிக் கொட்டினான்.

"வருந்த வேண்டாம், இளவரசே! இன்றில்லாவிட்டாலும் இன்னொரு நாள் அதை வேறு விதமாகச் செய்து கொண்டால் போகிறது!" என்று நமட்டுச் சிரிப்புடன் சொல்லி மீண்டும் தம் பார்வையை மேயவிட்டார் பழையாறைச் சோழர்.

இந்தச் சமயம், பலவகையான மதுபானங்கள் நிறைந்த பொற்தட்டு ஒன்றை இரு பணியாட்கள் ஏந்தி வந்து அவருக்குமுன்னே வைத்து விட்டுச் சென்றனர்.

"எங்கே என் அத்யந்த நண்பர் வில்வேலி?" என்று தம் எதிரில் இருந்த மதுபானங்களைப் பார்க்காமலே கேட்டார் பழையாறைச் சோழர்.

"முதலில் மது அருந்துங்கள்; மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக் கொள்வோம்!" என்று பணிவுடன் விண்ணப்பித்துக் கொண்டான் விநயாதித்தன்.

"அவரை ஓர் அவசர காரியமாகப் பார்க்க வந்தேன். அதனால்தான்..."







"அப்படியானால் என் மாதுலர் என்னைப் பார்க்க வரவில்லையா?"

"ஓ!... அதற்குப் பொருள் அப்படியல்ல; எனது மருகரைப் பார்த்த பின் அவரையும்...."

"பரவாயில்லை; இந்த மதுவை அருந்தி உங்கள் நினைவுகளை இனிப்பாக்கிக் கொள்ளுங்கள்."

"இல்லை; நான்...."

"ஏன்? மண்ணிலே விண்ணைப் பார்க்க, என் மாதுலருக்கு இரண்டு பேர் துணை வேண்டுமோ? அவ்வாறானால் எனது பணியாள் ஒருவனை அழைக்கிறேன்; அவனையும் இந்தச் சத்-காரியத்தில் கூட்டுச் சேர்த்துக் கொள்வோம்! மூன்று பேராக மதுக் கிண்ணங்களை எடுத்தால் அப்புறம் நாம் மூவரும் ஆறு பேராக மாற அதிக நேரம் ஆகாது!" — குதிரை கனைப்பதுபோல் சிரித்து முழக்கினான் விநயாதித்தன்.

அவனுடைய சிரிப்பில் உற்சாகமாகக் கலந்துகொண்ட பழையாறைச் சோழர் "இளவரசே! நம் தளபதி வில்வேலி நெல்வேலிப் போர்முனைக்குப் போய் விட்டாரா என்ன?" என்று கனத்த குரலில் வெகு அக்கறையாக விசாரித்தார்.

"தங்களிடம் அவர் சொல்லிக் கொள்ளாமல் புறப்படுவாரா? அதெல்லாம் இல்லை. ஒரு கடுகத்தனை விஷயத்தைக் கவனிப்பதற்காகப் பெருவளநல்லூருக்குப் போயிருக்கிறார். இப்போது வருகிற நேரம்தான். வந்ததும் இன்று மாலையே நெல்வேலிப் போர்க்களத்துக்குப் போவதென்பது அவரது திட்டம்." — அலட்சியத் திமிரோடு இவ்வாறு சொன்னான் விநயாதித்தன்.

"அது என்ன இளவரசே, கடுகத்தனை விஷயம்? பெரிய காரியத்துக்குப் போவதை நிறுத்தி வைத்து விட்டு அவர் ஏன் பெருவளநல்லூருக்குப் போனார்?" என்று தம் அடர்த்தியான புருவங்களை நெரித்துக் கொண்டு அவசரமாகக் கேட்டார் பழையாறைச் சோழர்.

சினம் கனன்ற சிறு நகையுடன் செருக்காகச் சொன்னான் விநயாதித்தன். "எங்கள் குலத்தில் பிறந்து எங்களுக்கே கோடரிக் காம்பாகி விட்ட ஒரு துரோகிப் பெண்ணைச் சிறைப் பிடித்து இழுத்து வருவதற்காகப் போயிருக்கிறார் வில்வேலி!"

ஒன்றும் புரியாதவர்போல் விழித்த பழையாறைச் சோழர், "என்ன சொன்

வீர்கள், இளவரசே?'' என்று கேட்டுக் கொண்டே ஆசனத்திலிருந்து சற்று முன் தள்ளி வந்தார்.

''அதாவது, என் சிற்றப்பனின் மகளான ஆந்திர இளவரசி உத்தமசிவியைச் சொல்கிறேன்! அவளைப் பற்றிய கசப்பான விஷயங்களை இந்த இனிப்பான நேரத்தில் என்னைக் கேட்காதீர், மாதுலரே! அவற்றையெல்லாம் வில்வேலியே வந்து உங்களிடம் விவரிப்பார்! ஆனால், ஒரு நல்ல செய்தியை மட்டும் இந்த மது நனைந்த நாவினால் இப்போதே சொல்லி விடுகிறேன்; இத்தனை நாட்களாக நம் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு மறைந்து திரிந்து வந்த பல்லவ மன்னனையும் இன்னும் சிறிது நேரத்தில் இங்கே நீங்கள் காணப் போகிறீர்கள்!''

''என்ன! பல்லவ மன்னனையும் பிடித்து வரப் போயிருக்கிறாரா, வில்வேலி?'' என்று தம்மை மீறிய பதற்றத்துடன் வினவினார் பழையாறைச்சோழர்.

இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்த விநயாதித்தன், ''இந்த அற்ப விஷயத்துக்கு ஏன் இப்படிப் பதற்றமடைகிறீர்கள், மாதுலரே?'' என்றான் குறும்பாக.

''இல்லை, இல்லை! உதவாக்கரையான பல்லவ மன்னனைப் பிடித்து வர நம் ஒப்பற்ற மாவீரர் வில்வேலி போவதா என்றுதான் மனம் பதறுகிறேன்!'' என்று கூறித் தலை குனிந்தார் பழையாறைச் சோழர்.

ஒரு கணம் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த விநயாதித்தன், ''அது சரி, மாதுலரே! தங்கள் அருமைச் செல்வியை — என் எதிர்காலப் பட்டத்தரசியை — நான் இன்னும் ஒரு முறை கூடப் பார்க்க வில்லையே! அந்த மகத்தான பேற்றை எனக்கு நீங்கள் எப்போது அளிக்கப் போகிறீர்கள்?'' என்று வெட்கம் செறிந்த குழைவுடன் வினவினான்.

''வெகு விரைவிலேயே ஒரு சுபயோக சுப நேரத்தை அதற்கெனச் சிருஷ்டித்துத் தந்து நான் பெருமைப்படத்தான் போகிறேன்!'' என்று கூறி மெல்லச் சிரித்த பழையாறைச் சோழர், ''சளுக்கிய இளவரசரிடம் ஒரு சிறு விஷயம்..'' என்றார் தயக்கத்துடன்.

''சொல்லுங்கள், மாதுலரே!'' என்று மிகவும் அக்கறையாகக் கேட்டான் விநயாதித்தன். (தொடரும்)

## வீராங்கனை வாலன்டைனா

''ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம் வான வெளியிலே'! என்று பாரதியின் காவியத்தைச் சற்று மாற்றிப் பாடினால் என்ன என்றே இன்று தோன்றுகிறதல்லவா?

விண்வெளிப் பயணம் செய்து பத்திரமாகத் திரும்பியதன் மூலம் பெண் இனத்துக்குப் பெருமை தேடித் தந்த வாலன்டைனா ஆற்றலிலும் வீரத்திலும் மட்டுமின்றி



அழகிலும் சிறந்தவள் என்பதை அவளைப் பிரபல ஹாலிவுட் நட்சத்திரம் இன்கிரிட் பெர்க்மெனுடன் ஒப்பிடுவதிலிருந்து புரிந்துகொள்ள முடிகிறது.

சந்திரனை அடைவோர் அங்கிருந்து ஒரு சிறிய விமானத்தில் கிளம்பி, அதனை ஏற்கனவே உலகைச் சுற்றி வந்துகொண்டிருக்கும் ஒரு விண்வெளிக் கப்பலுடன் இணைத்துக் கொண்டு பின்னர்தான் பூமிக்கு வந்து சேர வேண்டியிருக்கும். குறித்த நேரத்தில் குறிப்பிட்ட இடத்தில் விண்வெளி வாகனங்கள் ஒன்றை ஒன்று அணுகுவது சாத்தியமே என்பதை இப்போது ருஷ்யர்கள் இரண்டாவது முறையாக நிரூபித்திருக்கிறார்கள். சந்திரனைச் சென்றடைகின்ற முயற்சியில் ருஷ்யர்கள் மிகவும் முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள் என்பதையே இந் நிகழ்ச்சிகள் உணர்த்துகின்றன.

எனினும் அண்டசராசரத்துடன் ஒப்பிடும்போது மனிதன் இன்று அடைந்திருக்கும் வெற்றி அணு அளவுதான் என்ற நினைப்பு ஆணவத்தைக் குறைக்கும். மனித குலத்தின் அழிவுக்கு இடம் தராமல், ஆக்க வேலைகளுக்கு விண்வெளிப் பயணம் பற்றிய விஞ்ஞான அறிவைப் பயன்படுத்த ஆண்டவன் அருள்வானாக.

“அதிசய உலகில் ஆலிஸ்” (Alice in Wonderland) என்ற கதை புத்தகமாக வெளி வந்ததும் விக்டோரியா மகாராணி அதைப் படித்துப் பார்த்தாராம். படிக்கப் படிக்க அவர் ஒரு குழந்தையாகவே மாறி விட்டாராம். உடனே தமது காரியதரிசியை அழைத்து, “இந்தக் கதை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இந்த ஆசிரியரின் அடுத்த புத்தகம் வெளி வந்ததும், உடனே ஒரு பிரதி வரவழைத்து விடுங்கள்” என்றாராம்.

காரியதரிசி அந்தக் கதாசிரியரான லூயி கராலுக்கு (Lewis Carroll) மகாராணியின் பாராட்டுதலைத் தெரிவித்தார். அத்

# எண்களின் குவியல் எங்கே?





# எண்ணக் குவியல் எங்கே?

துடன், அவருடைய அடுத்த புத்தகத்தை மகாராணி மிகவும் ஆவலாக எதிர்பார்ப்பதாகவும் அறிவித்தார்.

லூயி கரால், தமது அடுத்த புத்தகம் அச்சில் இருப்பதாகவும், தயாரானதும் மகாராணியின் பார்வைக்கு அனுப்பி வைப்பதாகவும் பதில் எழுதினார்.

சில நாட்களில் மகாராணிக்கு ஒரு புத்தகப் பார்சல் வந்தது. லூயி கரால் அனுப்பியிருப்பதாகக் கூறி, அந்தப் பார்சலைப் பிரித்து உள்ளேயிருந்த ஒரு கனத்த புத்தகத்தை எடுத்து மகாராணியின் முன் நீட்டினார் காரியதரிசி. மகாராணி அந்தப் புத்தகத்தை ஆவலோடு வாங்கி, அவசரம் அவசரமாகப் புரட்டிப் பார்த்தார். உடனே அவர் முகம் சுருங்கியது. “என்ன இது! ஒரே பெருக்கலும், வகுத்தலும், பின்னங்களுமாக இருக்கின்றனவே! கதைப் புத்தகம் கேட்டால் கணக்குப் புத்தகம் வரவழைத்திருக்கிறீரே!” என்றார்.

காரியதரிசிக்கு ஒன்றும் புரியவில்லை. புத்தகத்தை வாங்கி, அதை எழுதியவர் யார் என்று பார்த்தார். சார்லஸ் லட்விட்ஜ் டாஜ்ஸன் என்பவர் எழுதியதாக முன்பக்கத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. “பார்சலின் மீது லூயி கரால் என்றிருக்கிறது. புத்தகத்தில் வேறு ஒரு பெயர் இருக்கிறதே! இது என்ன புதிர்!” என்று அவர் விழித்தார். ஆனாலும் அப்புதிருக்கு விடை கிடைக்காமற் போகவில்லை. ஆக்ஸ்பர்ட் பல்கலைக் கழகக் கணிதப் பேராசிரியரும், பல கணிதப் புத்தகங்களை எழுதியவருமாகிய சார்லஸ் லட்விட்ஜ் டாஜ்ஸன் என்பவர்தான் லூயி கரால் என்ற புனைபெயரில் ஒளிந்து கொண்டு 'அதிசய உலகில் ஆலிஸ்' என்னும் அற்புதக் குழந்தை நூலை எழுதியிருக்கிறார் என்ற செய்தியை மகாராணியிடம் அந்தக்காரியதரிசி தெரிவித்தார். அப்போது மகாராணி, “என்ன! ஒரு பெரிய கணிதப் பேராசிரியருக்குச் சிறுவருக்கு ஏற்றபடி இவ்வளவு நன்றாகக் கதை சொல்லக் கூடத் தெரிகிறதா? குழந்தைகள் நிலைக்கு இறங்கி வர அவரால் எப்படி முடிந்தது?” என்று சொல்ல முடியாத வியப்பிலே ஆழ்ந்தாராம்.



அந்தக் கணிதப் பேராசிரியர் ஒரு பிரம்மச்சாரி. அவருடைய நண்பருக்கு மூன்று பெண் குழந்தைகள் உண்டு. அவர்களுடன் அவர் தினந்தோறும் மாலை நேரத்தில் ஆற்றங்கரைக்குச் செல்வார். நால்வரும் கரையிலே உட்கார்ந்து காற்று வாங்குவார்கள்; சில சமயம் படகிலே உல்லாசமாகப் போய் வருவார்கள். பகலெல்லாம் எண்களுடன் போராடிக்கொண்டிருந்த கணிதப் பேராசிரியருக்குக் குழந்தைகளுடன் கூடிப் பேசிக் குலாவுவது பேரின்பமாயிருந்தது. அப்போது அவர் வேடிக்கை வேடிக்கையாகப் பேசுவார்; குட்டிக் கதைகள், பாடல்களெல்லாம் சொல்வார்.




**அந்தச் சிறுமியர் மூவருள் ஒருத்தியின் பெயர் ஆலிஸ்:** எல்லோரையும்விட அவளுக்குத்தான் கதை கேட்பதில் ஆர்வம் அதிகம். ஒரு நாள் 'ஆலிஸ்' என்ற அந்தப் பெண்ணையே கதாநாயகியாக வைத்துக் கதை சொல்லத் தொடங்கி விட்டார், கணிதப் பேராசிரியர்! அம்மூன்று சிறுமிகளுக்கும் அந்தக் கதை மிகவும் பிடித்திருந்தது. 'இதைப் புத்தகமாக வெளியிட்டால், எங்களைப் போல் எத்தனை பேர் ஆனந்தப்படுவார்கள்!'' என்று ஆசையோடு அவர்கள் கூறினார்கள். அதன் பிறகுதான் அது புத்தக உருப் பெற்றது. 'பெரும் பேராசிரியர் ஒருவர் குழந்தைக் கதை எழுதுகிறார் என்றால் உலகம் சிரிக்குமே!' என்று பயந்துதான் புனைபெயரில் அவர் அந்தக் கதையை வெளியிட்டார்.

''பாங்கிலே வரவு செலவு கணக்குப் பார்க்கும் உமக்கு எப்படிக் குழந்தைகளுக்கு எழுத முடிகிறது?'' என்று கேட்கும் நண்பர்களுக்கு இந்தக் கணிதப் பேராசிரியரின் கதையைத் தான் நான் கூறுவது வழக்கம். எண்களுடனே உறவாடும் ஒருவருக்குக் குழந்தைகளுடன் உறவாடி, அவர்கள்





## அழ. வள்ளியப்பா

உள்ளம் அறிந்து, அவர்களுக்கான கதைகள், கவிதைகளை எழுதுவதிலே ஒரு தனி இன்பம் தோன்றத்தானே செய்யும்?

ஒரு நாள் என் நண்பர் ஒருவர் மற்றொருவரை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். ''இவரும் உம்மைப் போலத்தான். ஓ. ஹென்றி பாரம்பரையைச் சேர்ந்தவர்'' என்றார்.

''அப்படியென்றால்......?''

''உலகப் புகழ் பெற்ற ஓ. ஹென்றி உங்களைப் போல் பாங்கில் வேலை பார்த்த எழுத்தாளர்தானே!'' என்றார்.

உடனே நான், ''அவர் கதை உமக்குச் சரியாகத் தெரியாது போல் இருக்கிறது. பாங்கிலிருக்கும் போது அவர் எழுத்தாளராயிருக்கவில்லை. பாங்கில் பணத்தைக் கையாடி விட்டதாக அவர் மீது பழி சுமத்தி, சிறையிலே ஐந்தாண்டுகள் அடைத்து விட்

**எண்ணக் குவியல் எங்கே? எண்களின் குவியல் எங்கே? பாங்கில் லெட்ஜர் கணக்குகளுடன் போராடுகிற ஒருவர் இலக்கியம். அதிலும் குழந்தைகளுக்கான இலக்கியம் படைக்க முடியுமா? முடியும் என்று ஆணித்தரமாகப் பதிலளிக்கிறார் குழந்தைக் கவிஞர்.**

டார்கள். அப்போதுதான் அவர் எழுதவே தொடங்கினார். பாங்கை விட்ட பிறகு எழுத்தாளரானவரை, பாங்கில் இருக்கும்போதே எழுத்தாளராக இருக்கும் எங்களுடன் ஒப்பிடுகிறீரே!'' என்றேன் வேடிக்கையாக.

'சமூகநூல்' என்று இப்போது தடித் தடிப் புத்தகங்களைக் குழந்தைகள் படித்து வருகிறார்களே, இந்தப் புத்தகங்களைப் பாடத் திட்டத்தில் முதன் முதலாகச் சேர்த்திருந்த சமயம். ஒரு பதிப்பாளர் பள்ளி ஆசிரியர் ஒருவரிடம், ஒன்று முதல் ஐந்து பாரங்களுக்குச் 'சமூகநூல்' எழுதித் தருமாறு கோரினார். அந்த ஆசிரியரும் உடனே எழுதத் தொடங்கினார். ஒரே மாதத்தில் ஐந்து புத்தகங்களையும் எழுதி முடித்துவிட்டார்! அந்த ஐந்திலே ஒரு புத்தகத்தில் பாங்கைப் பற்றியும், இன்ஷ்யூரன்ஸைப் பற்றியுங்கூட அவர் எழுதியிருந்தார்.

அவருக்குப் பதிப்பாளர் ரூபாய் மூவாயிரத்துக்கு ஒரு 'செக்' கொடுத்தார். அந்தச் செக்கை மாற்றுவதற்காக அவர் பாங்குக்கு வந்தார். அது 'ஆர்டர்' செக்காக இருந்ததால், ''உங்களுக்கு இங்கு யாரையேனும் தெரியுமா?'' என்று கேட்கப்பட்டது. உடனே அவருக்கு என் நினைவு வந்தது. என்னைப் பற்றி விசாரித்து, நான் வேலை பார்த்த பகுதிக்கு வந்தார். விவரத்தைக் கூறினார்.

''சரி, நீங்கள் கையெழுத்துப் போடுங்கள்'' என்றேன். உடனே அவர் பேனாவை எடுத்துக் கையிலே பிடித்துக் கொண்டார். செக்கின் முன் பக்கத்தைக் காட்டி, ''இதில் எங்கே போடுவது?'' என்று கேட்டார்.

''அடடே, அங்கு போட்டு விடாதீர்கள். முன் பக்கத்தில்தான் பதிப்பாளர் போட்டிருக்கிறாரே! நீங்களும் கையெழுத்துப் போட்டால், செக் செல்லாது. பின் பக்கம் முழுதும் தான் காலியாக இருக்கிறதே? அங்கே போடுங்கள்'' என்றேன்.

''சார்! என் புத்தகத்தில் பாங்கைப்பற்றிக் கூட எழுதியிருக்கிறேன். ஆனால் இந்த விவரமெல்லாம் அதில் இல்லை. எனக்கே தெரியாதே!'' என்று சிரித்துக் கொண்டே கூறினார். நானும் அவருடன் சேர்ந்து சிரித்தேன், பள்ளிப் பாடப் புத்தகங்கள் தயாராகும் விதத்தை நினைத்து!

இந்த நிகழ்ச்சி என் உள்ளத்திலே ஓர் எண்ணத்தை எழுப்பியது. 'பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவருக்குப் பாங்கைப் பற்றி ஓரளவாவது தெரிந்திருப்பது நல்லதுதானே! பாங்கிலே பணம் எடுத்து வருவதாக வீட்டிலே சொல்லி விட்டுப் போகிறோம். ஆனால், பணத்தை எப்படி எடுத்து வருகிறோம் என்று தெரிய வேண்டாமா?' என்று எண்ணிப் பார்த்தேன். மறு வாரமே 'இதுதான் பாங்க்' என்று ஒரு சிறு கட்டுரை எழுதினேன்.

கிராமத்திலுள்ள ஒரு சிறுவன் பட்டணத்திலுள்ள தன் மாமா வீட்டுக்கு வருகிறான். மாமா அவனை ஒரு நாள் ஒரு துணிக்கடைக்கு அழைத்துப் போய், அவனுக்கு வேண்டிய துணிகளையெல்லாம் வாங்கித் தருகிறார். பிறகு, 'பில்' போடச் சொல்கிறார். மொத்தம் ரூ. 36.12 ஆகிறது. உடனே மாமா தன் கைப் பைக்குள்ளிருந்து ஒரு நீளப் புத்தகத்தை எடுக்கிறார். அதிலே ஒரு தாளில் அன்றையத் தேதி, கடைப் பெயர், எண்ணாலும் எழுத்தாலும் பில் தொகை ஆகியவற்றை எழுதி அடியில் கையெழுத்திட்டு, அந்தத் தாளைக் கிழித்துக் கடைக்காரரிடம் கொடுத்து விட்டுச் சிறுவனுடன் நகர்கிறார்.

சிறுவனுக்கு ஒரே ஆச்சரியமாயிருக்கிறது. ''என்ன மாமா, பணம் கொடுக்காமல் ஏதோ ஒரு 'கவர்'க் காகிதத்தைக் கொடுத்து விட்டு வந்து விட்டாயே!'' என்று கேட்கிறான்.

''அதை வெறும் காகிதம் என்று நினைத்தாய்? இல்லை. அதுதான் 'செக்' என்பது. 'பாங்க்' என்று கேள்விப்பட்டிருக்கிறாயா? அந்தச் செக்கைக் கொண்டு பாங்கில் கொடுத்தால், கடைக்காரருக்குப் பணம் கிடைக்கும்.''

''என்ன மாமா இது வேடிக்கையாயிருக்கிறது! நீங்கள் எனக்காகத் துணி வாங்கித் தந்தீர்கள். இதற்குப் பாங்க் எதற்காகப் பணம் கொடுக்க வேண்டும்?''

இப்படியே மாமாவுக்கும் சிறுவனுக்கும் நடக்கும் உரையாடல் மூலம் பாங்கைப் பற்றி ஓரளவு கூற முடிந்தது.

நான் எஸ். எஸ். எல். ஸி. படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு பெரியவர் எனக்குச் சுவாமி விவேகானந்தரின் மணிமொழிகள் அடங்கிய அழகிய புத்தகம் ஒன்றை அன்பளிப்பாகக்கொடுத்தார். (Inspired talks of Swami Vivekananda) என்பது அதன் பெயர். அதில் ஒரு வாசகம் 'இறைவனுடைய செக்கைப் பெற்றுக்கொள். அது எவ்விடத்தும் செல்லுபடியாகும்' என்றிருந்தது. (Get the cheque of the Lord; it will be honoured everywhere.)

அக்காலத்தில் அவ்வாக்கியத்தின் சிறப்பை நான் சரியாக உணர வில்லை. ''நம் தகப்பனார் கூடத்தான் பலருக்கு செக் கொடுக்கிறார்கள். எல்லாம் செல்லுபடியாகிக் கொண்டுதானே இருக்கிறது?'' என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் பாங்கில் சேர்ந்த பிறகுதான், 'செக்குகள் எல்லாமே செல்லுபடியாவதில்லை. சில திருப்பி அனுப்பப்படுவதும் உண்டு' என்ற உண்மை புலனாகியது.

தேதி சரியாகப் போடாமலிருக்கலாம்; தொகையை எண்ணிலும் எழுதியிருப்பதற்கும் எழுத்தால் எழுதி யிருப்பதற்கும் வித்தியாசம் இருக்கலாம்; கணக்கைத் திறக்கும் போது கொடுத்த கையெழுத்துக்கும், செக்கிலே போட்ட கையெழுத்துக்கும் வேற்றுமை இருக்கலாம். அடித்த அல்லது திருத்திய இடங்களில் செக்கைப் பிறப்பித்தவர் முழுக் கையெழுத்துப் போடாதிருக்கலாம். கணக்கைச் சரியாகப் பார்க்காமல், போதிய பண இருப்பு இல்லாதபோதே செக் விட்டிருக்கலாம் — இப்படி எத்தனையோ காரணங்களுக்காகப் பல செக்குகள் தினமும் திருப்பி அனுப்பப்படுவதைக் கண்ட போது விவேகானந்தரின் மணிமொழியின் உண்மையை உணர முடிந்தது. அதுவும் ஓரளவுக்குத்தான். பொருளை ஆதாரமாகக் கொண்ட பாங்கு செக்குக்கும் அருளை ஆதாரமாகக் கொண்ட இறைவனின் செக்குக்கும் உள்ள வேற்றுமையை முற்றும் உணர்ந்துவிட என்னால் முடியுமா, என்ன?

# துறவு

சுபஸ்ரீ

அன்புள்ள அப்பா அவர்களுக்கு,

......இப்பொழுது அம்மாவின் கடிதப்படி அடுத்த மாதம் தங்கள் சஷ்டியப்த பூர்த்தி வருகிறது என்று தெரிந்து கொண்டோம். அதை உங்கள் குழந்தைகளான நாங்கள் விமரிசையாகக் கொண்டாட விரும்புவதால் வைதிக, லௌகிக முறைப்படி என்னென்ன ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று எழுதினால் அதற்குத் தக்கபடி பத்து நாட்கள் முன்னதாகவே வந்து விடுகிறோம். அம்மாவை உங்கள் அருகே மணையில் வைத்துப் பார்த்தால் எப்படி இருக்கும் என்பதை இப்பொழுதே கற்பனையில் கண்டு வணங்குகிறோம். உடன் பதில்.

பிரியமுள்ள
சேகர்

தபால்காரர் விட்டெறிந்த இந்தக்கார்டை ராமய்யர் படித்து முடிக்கவும் உள்ளேயிருந்து சீதாலட்சுமி அம்மாள் மஞ்சள் ஒளிரும் முகத்தில் குங்குமம் இழைய வரவும் சரியாயிருந்தது.

'' யார் கடிதம்? அப்படித் திருப்பித் திருப்பிப் படிக்கிறீர்கள்?''

''யாரா? உன் சீமந்தபுத்திரன் டில்லிக்குப் பாட்சா!''

''அட, அப்படியும் 'தல்லிக்குப் பிட்டா' தானே? என்ன எழுதியிருக்கிறான்?'' கணவன் கோபத்துக்குக் காரணம் தெரியாதது போல் கேட்டாள் சீதாலட்சுமி அம்மாள்.

''நமக்குக் கலியாணம் நடக்க வேண்டுமே என்று கவலைப்படுகிறான் மகன். சம்மதம் பற்றி உடன் தந்தி அடிக்க வேண்டுமாம்!''

ஒரு கணம் முகத்தில் பரவிய பூரிப்பு கணவனின் விரக்திக் குரலிடையே மறையச் சீதாலட்சுமி ஏதோ பேச வாயெடுக்குமுன் மாமி என்றொரு குரல் வாசற்புறம் கேட்டது.

''என் மருமானுக்கு ஆண்டு நிறைவு; கட்டாயம் அம்மா வரச் சொன்னார். பெரிய சுமங்கலியாக நீங்கள் ஆரத்தி எடுத்தால் தான் அம்மாவுக்குத் திருப்தியாம்!''

அழைக்க வந்த எதிர் வீட்டு மாப்பிள்ளையும் பெண்ணும் பெரியவர்களை வணங்கி எழுந்தனர். ''உங்கள் பிள்ளை ராஜுவைக் கூட பம்பாயில் புறப்படுமுன் பார்த்தேன். அடுத்த மாதம் வரும் உங்கள் சஷ்டியப்த பூர்த்தியை ஒட்டி ஊர்ப் பக்கம் வருவேன் என்று சொன்னான்.'' இளைஞன் மரியாதைக்காகச் சம்பாஷித்தான்.

''ஏன், மாமி அப்போது பூமாகூட வருவாள் இல்லையா? இப்போது சென்னையில் தானே டீச்சராக இருக்கிறாள்?''

''ஆமாம், வரலாம்'' என்று சீதாலட்சுமி மென்று விழுங்கினாள்.

''கட்டாயம் நாளை வாருங்கள் மாமி, எங்கள் வீட்டுக்கு!'' செல்லும் இளம் தம்பதிகளை ஏக்கத்துடன் பார்த்தார் ராமய்யர். அந்தப் பார்வையின் தாகத்தைத் தாங்கமாட்டாது உள்ளே திரும்பினாள் சீதாலட்சுமி.

''ஹ்ம், இந்தப் பெண்ணும் பிரசவத்தை ஒட்டி இப்போதே வந்து விட்டாள் போல் இருக்கிறது.'' ராமய்யரின் கேள்வி சீதாலட்சுமியை நிறுத்தியது.

''ஆமாம். அடுத்த வாரத்தில் சீமந்தமாகி மாப்பிள்ளை பம்பாய்க்குப் போவானாம். கோவிலில் ஜானகியைப் பார்த்த போதே சொன்னாள்.''

''ஹ்ம், ஜானகி கொடுத்து வைத்தவள். ஒரு பெண், பிள்ளையுடன் மஞ்சளை இழந்து அவள் பிறந்தகம் வந்த போது இவள் எப்படித் தலையெடுக்கப் போகிறாளோ என்று நினைத்தேன். இன்று பிள்ளைக்கு வேலையாகிப் பேரன் பேத்தி எடுத்து விட்டாள். பெண்ணும் இதோ தங்க விக்கிரகத்தைப் பெறப் போகிறாள். 'ஜானகி பட்ட மரம் ஆனாலும் வேரிலிருந்த பசுமை — வம்சம் துளிர்த்து விட்டது.''

''நீங்கள் என்ன இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?'' சீதாலட்சுமி ஒரு கணம் இடிந்து விட்டாள். கணவனின் ஏக்கம் அவள் நெஞ்சை உறுத்தியது. ஆனால் அவள்தான் என்ன செய்வாள்? அவள் வயிறு திறந்த வேளை அப்படி! ''சரி, சரி, குழந்தைக்கு என்ன பரிசு வாங்கிக் கொடுக்கலாம். அதைச் சொல்லுங்கள்.'' பேச்சை மாற்றத்தான் அவள் விரும்பினாள்.

''என்னது, சீதா? நீயும் பெண் ஜன்மம் தானா?'' சீறி வெடித்தது ராமய்யரின் குரல். ''நானென்ன சொல்லி விட்டேனாம்?''

''என்னது, நான் என்ன செய்து விட்டேன்?''

''என்னவா? இந்த ஊரோடு நாம் வந்து இருபது வருஷங்களில் ஒரு நாளாவது ஒருத்தரைக் கூப்பிட்டு ஒரு வெற்றிலை பாக்குக் கொடுக்க நேர்ந்ததா? ஒரு மேளம் கொட்டி, செம்மண் பூசி, கோலமிட்டு, ஊருக்குச் சாப்பாடு போட முடிந்ததா? நாம் மட்டிலும் ஒவ்வொரு வீட்டிலும் போய்ச் சாப்பிட்டு விட்டு வர..... ஐயோ, இனிமேல் என்னால் முடியாது !''

''அழகுதான். சாப்பிட இருக்க வேண்டாம். முகூர்த்தத்துக்கு இருந்து விட்டு வெற்றிலை பாக்கு வாங்கிக் கொண்டு வராவிட்டால் நன்றாக இருக்குமா? பாவம், குழந்தை வந்து கூப்பிட்டிருக்காள்.....'' சீதாவின் குரல் தழுதழுத்தது.

''சீதா! நீ வேண்டுமானால் போய் விட்டு வா. ஆனால்...ஆனால்... 'சார், உங்கள் வீட்டுக் கலியாணச் சாப்பாடுதான் இல்லை. உங்கள் சஷ்டியப்தபூர்த்திக்காவது விருந்து உண்டா?' என்று கேட்பவர்கள் எதிரே என் நெஞ்சு அப்படியே விம்மி வெடித்துவிடுமடி. அந்தக் குழந்தைகளைத் தூக்கினால் இதயத்தில் எழும் ஏக்கம் பேச்சை அடைத்து விடும்...'' திடீரென்று ராமய்யர் முகத்தை மூடிக் கொண்டு விம்மிய போது சீதாலட்சுமியும் செயலிழந்து நின்றாள். 'ஆண் பிள்ளையான அவருக்கே இத்தனை ஏக்கம் என்றால்....' என்று அவள் எண்ணிய போது அவள் கண்கள் கலங்கின.

''என்ன குழந்தைக்குப் பதில் எழுதி விட்டீர்களா?'' சீதாலட்சுமி அம்மாள் மகனிடமிருந்து கடிதம் வந்து பத்து நாட்களாகியும் கணவர் எந்த ஏற்பாடும் செய்யாததைக் கண்டு கலங்கினாள்.

''எல்லாம் எழுதியாகி விட்டது போ!''

''என்ன எழுதினீர்கள்? எனக்குக் காட்டவில்லையே!''

''ஏன், நீ சென்ஸார் செய்துதான் அனுப்ப வேண்டுமா?''

''அதற்கில்லை, குழந்தைகள் எப்பொழுது வருகிறார்கள் என்று தெரிந்தால்.....''

''ஏன், மூச்சைப் பிடித்துக் கொண்டு மூன்றுரும் லட்டும் செய்வாயா? தொட்டிலில் நின்று அழுத்துப் போன தடியன்களுக்கு வைத்துத் தின்பாய். குழந்தைகளா, கோட்டான்கள்!''

''ஐயோ, ஏன் உங்களுக்கு எடுத்ததற்கெல்லாம் கோபம்? வயதானதற்கு அடையாளமா?'' சீதாலட்சுமி சிரித்தாள். 'உங்களுக்குத் தள்ளாவிட்டால் உட்காருங்கள். நான் செய்வதுகூட உறுத்துகிறதா?''

''ஆஹா, நான் விழுந்து கிடக்கிறேன். நீ உன் பெண் பிள்ளைகள் அவர்கள் கொண்டு வரப் போகும் பேரன் பேத்திகளோடு ஓடி விளையாடு......''

சீதாலட்சுமி அம்மாளின் முகம் சுண்டிவிட்டது. கண்களில் நீர் திரையிட்டது. அதில் ஜானகியின் பேரன் குஞ்சுக் கைகளை நீட்டி, அவள் இதயத்தில் சிரித்தான். ஜானகிப் பாட்டி தன் பொக்கை வாய்ப் பெருமிதச் சிரிப்பால் அவளைப் பரிகசித்தாள். கணவரோ பிள்ளையில்லா வீட்டில் துள்ளி விளையாடு என்று கரிக்கிறார். தான் பெற்ற குழந்தைகளுக்கு அன்பு காட்டக்கூட அக் குழந்தைகளின் வயதுக்கு உரிய வளர்ச்சி ஏற்பட்டால்தான் முடியுமோ என்னவோ? இல்லா விட்டால் தம் குழந்தைகள் என்று கரைந்து கசிந்து உருகும் ராமய்யர் இன்று வெறுப்பை உமிழ்ந்து பேசவானேன்! சீதாலட்சுமி மௌனமாக உள்ளே திரும்பினாள். ராமய்யரும் ஒன்றும் பேசாமல் வாசலுக்குச் சென்றார். இந்தப் பயங்கர அமைதியிலே, இருவர் இதயத்திலும் விழுந்த கல் ஒரே விதமாக உறுத்த ஒருவருக்கொருவர் விட்டுப் பேச இயலாமலே மாதம் ஒன்று உருண்டது. தில்லி, பம்பாயில் இருந்த பிள்ளைகளும், சென்னையில் இருந்த மகளும் வந்து விட்டனர். ஏன் கல்கத்தாப் பையனும், திருச்சிப் பெண்ணும்கூட வந்தாகி விட்டது. வீடு கலகல வென்று இருந்தும் சீதாலட்சுமியின் மனத்தில் ராமய்யரின் அமைதிப் போக்கு விசித்திரமாக இருந்தது. சம்பிரதாயமாகக் குழந்தைகளை விசாரித்தாரே தவிர ஏதோ ஒன்று அதில் தனித்து நின்றது.

குழந்தைகள் வந்த மறு நாள்; பிற்பகல்.

''அம்மா, என்னென்ன ஏற்பாடு செய்ய வேண்டும்? அப்பாவாக அதைப் பற்றிச் சொல்லுவார் என்று நினைத்தேன்.'' சேகர் மெல்ல ஆரம்பித்தான். அவனுக்கு எப்போதும் தாயிடம்தான் அந்தரங்கம்.

''எனக்கு மட்டும் என்ன தெரியும்? ஏதோ புடவை, திருமங்கல்யம் வாங்கி வைதிகச் சடங்கு போதும். ஓஹோ என்று இழுத்து விட்டால் யார் செய்வது?'' சீதாலட்சுமி பதிலை முடிக்குமுன்....

''சீதா''— நடையிலே உறுமல் கேட்டது. ராமய்யர்தான்! ''யாருக்குக் கலியாணம்?''

''என்ன கேள்வி இது?'' சீதா அலுத்துக் கொண்டாள்.

''ஏண்டி, உனக்கு வெட்கமாக இல்லை, மணையில் உட்கார்ந்து கலியாணம் செய்து கொள்ள.....? இல்லை, தெரியாமல்தான் கேட்கிறேன்!''




''என்னப்பா இது!'' அதற்குள் குழந்தைகள் யாவரும் கூடி விட்டனர். ''என்னப்பா, விளையாடுகிறீர்களா? எனக்கா கலியாணம் என்று கேலி செய்கிறீர்களே. அதைச் செய்யத்தானே நாங்கள் ஆசையுடன் ஓடி வந்திருக்கிறோம்.''

''வந்தீர்கள். ரொம்ப சந்தோஷம். ஆனால் நான் கலியாணம் செய்து கொள்வதாகச் சொன்னேனா? ஏண்டா, நான் என்ன அத்தனை முட்டாளா?'' ராமய்யரின் உடல் கோபத்தில் படபடத்தது.

''எதற்காகக் குழந்தைகளிடம் இப்படிப் பேசுகிறீர்கள்?'' சீதாலட்சுமி சமாதானப் படுத்த முயன்றாள்.

"அவர்களா குழந்தைகள்? அதி மேதாவிகள்! ஆயிரம் பேருக்குப் புத்திமதி சொல்லக் கூடிய அறிவாளிகள்!"

"அப்பா, நாங்கள் என்ன தவறு செய்து விட்டோம், இப்படிக் கோபப்பட? ஆசையுடன் வந்தால்...." பெண் பூமாவின் குரல் கரகரத்தது.

"நீங்கள் இஷ்டப்படி ஆட்டி வைக்க நாங்கள் என்ன பொம்மைகளா??"

"இல்லை, உங்கள் இஷ்டப்படி செய்கிறோம். ஆடம்பரம் வேண்டாம்." ராஜு தணிந்து போய்ப் பேசினான்.

"ஆமாண்டா, அப்படியாவது நாங்கள் சஷ்டியப்தபூர்த்தி செய்து கொள்வது அவசியந்தானா? மொட்டை மரங்களாக, துணையற்ற தனிக் கட்டைகளாக நிற்கும் என் பெண் பிள்ளைகள் எதிரே நான் பொம்மை விளையாட்டுப் போல உங்கள் விருப்பப்படி செய்யத்தான் வேண்டும் இல்லையா?"



"அப்பா...... அப்பா!"

"குறுக்கே பேசாதே, வாசு. மூத்த பிள்ளையாகப் பிறந்த ராஜு அந்த நாளில் தேசத் தொண்டு என்று போனான். தனக்குக் கலியாணம் ஒத்து வராது என்றான். உண்மை தான். தொண்டனுக்குக் குடும்பத் தொல்லைகள் ஒத்து வராது என்று விட்டு விட்டேன், பெருமையுடன். ஆனால் இன்று காலம் கடந்த நிலையில் ஒரு வாய் தண்ணீர் தரக் கூட ஆள் இல்லாமல் தனி மரமாக நிற்கிறான். ஆசையாக மகள் பூமாவுக்குப் பதின்மூன்று வயதில் கலியாணம் செய்தேன். ஆனால் கடவுள் அவளையாவது வாழ விட்டாரா? பக்கத்தில் படி ஏற வேண்டிய பருவத்திலே குனிந்த தலையுடன் வாழ்வை இழந்து, பள்ளிக்கூடப் படி ஏறினாள். தன்னுடைய வருங்காலத்தை வருத்துக் கொள்ள!"

"அப்பா, நடந்த கதை எதற்கு? அந்தத் துயரம் எனக்கு மறந்து விட்டதே!" பூமா ஆதரவுடன் தந்தையின் கையைப் பற்றினாள்.

"ஆமாம், அம்மா! அதெல்லாம் எதற்கு இப்போது? நீங்களாவது சொல்லுங்கள்." ராஜு தாயை நோக்கினான்.

கணவன் இதயத்தை முற்றும் படிக்கக் கற்ற பத்தினி நிமிர்ந்து நோக்கினாள். "அவர் சொல்வதில் தவறு என்ன? நீதான் சொல்லு. ஐந்து வருஷப் படிப்பென்று வெளி நாடு சென்றாய். அங்கு யாரையோ கலியாணம் செய்து கொள்வதாகக் கூறி, நாங்கள் மறுத்ததும், வேறு யாரையும் ஏற்க மாட்டேனென்று நின்று விட்டாய். ஆயுள் முழுதும் வாழ்வைக் கெடுத்துக் கொண்டாய்."

"ஏன் உன் தங்கை உமா குறைந்தவளா? இளம் வயதில் விபத்தில் கால் ஊனமாக, அதனால் இன்னொருவன் மனத்தை உறுத்திக் கொண்டு தான் வாழ விரும்பவில்லை என்று படித்துப் பட்டதாரியாகி, கை நிறையச் சம்பாதிக்கிறாள், ஏதேதோ பேசுகிறாள். ஊர் உலகத்தில் முடமானவர்கள்கூடக் கலியாண பந்தத்தில் ஈடுபட்டு, இல்லறம் நடத்தவில்லையா? இவளது போக்கே வேறு. இன்று அவள் என்னிடமிருந்து விலகித்தான் இருக்கிறாள்...." ராமய்யரின் குரல் தழுதழுத்தது.

"அவள் விரும்பாத போது நாம் என்ன செய்ய முடியும்?" வாசு குறுக்கிட்டான்.

"போதுமடா! உனக்கு மட்டும் பேச என்னவாம்? நீயாவது காலாகாலத்தில் பேரன் பேத்திகளை மடியிலிட்டு வம்சவிளக்கை ஏற்றிக் காட்டுவாய் என நினைத்தேன். முப்பது வயதாகப் போகிறது. இன்னும் உனக்கேற்ற பேரழகி, லட்சியப் பெண் அகப்படவில்லை! ஆக ஆண்டி பெற்ற ஐந்தும் குரங்கானபின், ஆண்டிக்கு என்னடா, ராஜ பார்வை வேண்டியிருக்கிறது?"

"அப்பா நீங்கள் வேண்டுமென்றே ஏதோ வாதம் செய்கிறீர்கள். நாங்கள் அதை ஒப்புக் கொள்ள முடியாது."

"நிறுத்தடா. நீங்கள் எங்கள் வயிற்றில் உதித்தவர்கள். இத்தனை அறிவாளிகளாகத் தங்களை நினைத்து நடந்து கொண்டால், உங்களைப் பெற்ற எனக்கும் சுதந்திர உணர்ச்சியும் மானமும் உண்டு. நான் முட்டாளல்ல."

"அப்படி இல்லை அப்பா. பெற்றோர்கள் அன்பு, பாசம் வேறு. காலா காலத்தில் கல்யாணம், குழந்தைகள் என்ற கோட்பாடு உங்கள் காலத்தில். உலகம் எவ்வளவோ மாறிவிட்டது. எங்கள் மனத்துக்கு ஏற்ப வாழ்க்கையை வகுக்கும் உரிமை கொண்டோம். அதில் எங்களுக்குத் திருப்தியும் அமைதியும் இருக்குமானால், அதுவே நிறைவு என்று கொள்ளலாமே?" உமா உண்மையிலே வருந்தினாள்.

"உரிமை! அப்படியானால் எனக்கு மட்டும் உங்களுக்குச் செய்யும் கடமைதான் உண்டா? பேரன் பேத்திகளைக் கொஞ்சும் ஆசை கூடாதா? உங்கள் தத்துவத்தை நானும் கைக்கொண்டிருந்தால், இந்தக் குடும்பம் ஏது? நீங்கள் மனித ஜன்மங்களாக வளைய வரும் வாய்ப்பு எங்கே? உங்கள் உருவை வளர்த்து, அறிவை வளர்த்து ஆளாக்கிவிட வேண்டிய கடமை எங்களுடையது. ஆனால் உங்களிடம் சந்ததியை எதிர்பார்ப்பதற்கு எங்களுக்கு உரிமை இல்லை! சந்நியாசிகள் போல் அவனவன் வாழும்போது, எங்களுக்கும் பாச பந்தம் அற்று. இந்தக் குடும்பம்

# வதந்தி!




மோதுகிறது. நான் பெற்ற குழந்தைகளை ஒட்டி இந்த வீட்டில் ஒரு மங்கள வாத்திய ஒலி கேட்காதபோது, இந்தக் கிழத்துக்காகக் கொட்டு முழக்கமா? நான் முடிவு செய்து - விட்டேன். என்னை யாரும் அசைக்க முடியாது!''

''அப்பா! கோபத்தைத் தணித்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு இஷ்டமில்லா விட்டால் சஷ்டியப்த பூர்த்தி வேண்டாம். அதற்காக உங்கள் உணர்ச்சிகளைப் பார்க்கும்போது பயமாக இருக்கிறது!''

''பயமென்ன? அப்பா ஓடிப் போய்விடுவேனு, தற்கொலை செய்துகொள்வேனு, இந்தப் பெண் பிள்ளைகளைப் பெற்றெடுத்ததற்காக?'' ராமையர் குரலில் ஆழ்ந்த அமைதி தொனித்தது.

''ஆமாம்! அறுபதாவது கல்யாணம்தான்!''

''ஆமாம்! மனித வாழ்க்கையின் கடைசிப் பருவம் துறவு. அவரவருக்குப் புத்தி தெரிந்த பின் நான் தேவையில்லை.''

''என்ன?'' சீதாலக்ஷ்மி திடுக்கிட்டாள்.

''துறப்பது உன்னையல்ல சீதா. என் குழந்தைப் பாசத்தை: குடும்ப பந்தத்தை. உன்னை, சுக துக்கம், எதிலும் உன் விருப்பின்றிக் கை விடேன் என்று அக்னி சாட்சியாகக் கூறியிருக்கிறேன். இந்த உறவு உணர்ச்சிகளை யெல்லாம்

ஏது? கடமை, பாசம் ஏது? பெற்றுப் பெருகி வாழ்ந்தால்தான் அன்பும் சுரக்கும். பெற்ற போது குழந்தைகளிடம் அன்பு. பெற்றவர்கள் முதியவர்கள் ஆனபோது. குழந்தைகள் முதிர்ந்து பெற்றவர்களாக வாழ்ந்து இனத்தை விருத்தி செய்யும்போதுதான் பாசம் சங்கிலி போலத் தொடருகிறது. குழந்தைகள் வயது ஆகியும் பெற்றோர்களாக மறுத்துவிட்டால் அந்தச் சங்கிலிக் கண்ணி முறிந்து விடுகிறது....

''இந்த நடைமுறை மீறப்பட்டபோது, அந்த நடைமுறைக்கு உட்பட்ட . அறுபதாவது . கல்யாணம் மட்டும் உங்களுக்கு உடன்பாடா? கொட்டு மேளத்தை என்று கேட்டாலும் என் நரம்பு அதிருகிறதடா. என் நெஞ்சத் தோலைப் பெயர்க்கிறாற் போல வந்து

துறந்து விட்டு மடத்தில் சேர்ந்து விடுவோம்.

கோவணாண்டியான குமரன் ஈசுவரனுக்கு உபதேசம் செய்தது போல் தனிக் கட்டைகளாகக் குடும்ப ஆசை யின்றி நிற்கும்—நம் குழந்தைகள் நம்மையும் பாச பந்தத்தினின்று தடுத்து விட்டனர். இனி முக்திக்கு வழி நாம்தான் தேடிக்கொள்ள வேண்டும்.''

கொட்டு மேளம் கொட்ட வேண்டிய முகூர்த்த நாளில் ராமையர் - மனைவியுடன் புறப்பட்டுவிட்டார். தனி மரங்களென நின்ற அவரது புத்திரச் செல்வங்கள், அவர் இதுவரை அனுபவித்த ஏமாற்றத் துயரத்தில் நூறில் ஒரு பங்கை உணர்ந்தவர்களாகத் தலை வணங்கி நின்றனர்.



# வாழ்வின் பயன்

வாசவன்

கோடை வெயில் அள்ளிக் கொண்டு போகிறது. இருந்தாலும் இப்படியா? கால் பொரிகிறது. உடம்பு எரிகிறது. தலை கொதிக்கிறது. நெருப்பாலேயே அபிஷேகம் செய்துகொண்டாற்போல் தகிப்பு மனத்துக்குள்ளும் ஊடுருவுகிறது.

சாமா தோளில் கிடந்த துண்டை வழித்துத் தலையில் போட்டுக் கொள்கிறார். உள்ளங் கையால் உலகத்தை மறைக்கிற பைத்தியக்காரத்தனம்தான்! வெயிலுக்கு வெங்காயத் தோலால் பூண் பிடித்த மாதிரி. அந்தத் துண்டு என்ன தர்ம கவசமா, தலையில் போட்டவுடன் வெயில் பிரண்டு ஓட?

அப்பா, கால் எப்படிப் பற்றிக் கொள்கிறது! வெயிலில் உருகிய தார் காலெல்லாம் அடை அடையாய் அப்பிக் கொண்டு உச்சந் தலை வரைக்கும் ஏறுகிற சூட்டின் ஊடுருவல்.. கண் விளிம்புகள் தகிக்கின்றன.

நேற்று எவ்வளவோ தேவலை, கால் சுட்டாலும் கண் கலங்கவில்லை. இன்று அவர் கண் கலங்க வேண்டும் என்று யாரோ நினைத்து விட்டிருக்கிறார்கள். இல்லாவிட்டால் கண்ணாடித் தூளைச் சாலையோரம் போட்டிருப்பார்களா? போட்டவர்களைச் சொல்ல என்ன இருக்கிறது? இவர் பார்த்து நடந்திருக்க வேண்டும். சற்று மிதந்த பார்வை. மிதித்து விட்டார். கண்ணாடித் தூள் காலில் பாய்ந்து கொட்டிய ரத்தம்..... எந்தப் புண்ணியவானோ அவரைக் கைத் தாங்கலாய் அழைத்துப் போய்க் காலில் ஒரு மருந்தை வாங்கிக் கொட்டி அனுப்பி வைத்தான். நேரத்தையும் செலவழித்து, கைக் காசையும் செலவழித்து உதவி செய்கிற குணம் ஆயிரத்தில் ஒருவருக்கு இருக்குமோ என்னவோ! மகாராஜன் நன்றாக இருக்க வேண்டும்!

சாமாவுக்கு ஒரு சௌகாரிடத்தில் வேலை. அடகு பிடிக்கிற வியாபாரம். தங்கக் கட்டுப்பாடு வந்ததற்குப் பிறகு அடகுத் தொழிலில் விழுந்த மண், சாமாவின் வயிற்றிலும் விழும் போல் இருந்தது. ரொம்ப நாட்களாக வேலை செய்கிறவர் என்று அவரிடத்தில் சௌகாருக்கு ஓர் அபிமானம். அவரை வேலையிலிருந்து நிறுத்த இவர் தயங்குகிறார். இனிமேல் நின்ற வரைக்கும் தான் நெடுஞ்சுவர்.

சாமா காலைக் கெந்திக் கெந்திக் கடைக்குப் போய்ச் சேர்ந்த பொழுது மணி ஒன்பதாகி விட்டது. ஒரு மணி நேரம் 'லேட்'! சௌகார் சாமாவின் காலைப் பார்த்தும், காயத்தைப் பார்த்தும் மனம் இளகவில்லை. ஒரு மணி நேரம் திட்டித் தீர்த்தார்.

சாமாவுக்கு இதற்கெல்லாம் வருந்திப் பழக்கம் இல்லை. அவர் இருபது வருஷங்களாய் வாங்குகிற இருபத்தைந்து ரூபாய்ச் சம்பளத்தில் திட்டுக்களும், வசவுகளும் மூன்றில் இரண்டு பகுதிகளாகும். செலவழிக்க முடியாத இந்தச் சம்பளத்தின் பகுதிகள்தாம் அவருடைய இருபது வருஷத்திய சேமிப்பு.

பதினொரு மணிக்குச் சௌகார் டீ வரவழைப்பது பழக்கம். எதிரே சாமாவை வைத்துக் கொண்டு குடிப்பது வழக்கம். இன்று அதிசயமே போல் சாமாவுக்கும் டீ வந்தது.

அதிசய டீ வந்ததைப் பற்றி நினைப்பதற்கோ, அதை எடுத்துப் பருகுவதற்கோ சாமாவுக்குப் புத்தி போகவில்லை. வலியால் பிராணன் போய்க் கொண்டிருந்தது.

''என்ன சாமா, கால் ரொம்ப வலிக்கிறதா?'' என்று பரிவுடன் கேட்டார் சௌகார்,



சாமாவுக்கு எப்பொழுதுமே நெஞ்சில் திரை போட்டுக் கொண்டு பேசித்தான் பழக்கம். "இல்லை" என்றார் மனத்தில் இருந்ததையெல்லாம் மறைத்துக் கொண்டு.

"நீ சொன்னால் நான் நம்பிவேனா? உன் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறதே! இன்று வேண்டுமானால் லீவு எடுத்துக் கொள்!" காலையில் கோபித்துக் கொண்டதற்குப் பரிகாரமே போல் அவர் குரல் பரிவுடன் ஒலித்தது.

பத்து வருஷங்களுக்கு முன்னால் இதே பரிவு இவருக்குத் தோன்றி, ஒரு நாள் லீவும் கொடுத்திருப்பாரானால் சாமாவின் வாழ்க்கை எவ்வளவோ தூரம் மாறி விட்டிருக்கும்.

சாமா குடியிருந்த வீட்டுச் சொந்தக்காரரின் பெண் சீதாவை அன்று பெண் பார்க்க வருகிறார்கள். அவர்கள் வருவதற்கு முன்னாலேயே அலைகோல வேண்டிய காரியம் ஒன்று அவருக்கு இருந்தது. அவருக்கும் சீதாவுக்கும் காதல்! இப்பொழுதாவது சீதாவின் அப்பாவிடம் விஷயத்தைச் சொல்லிவிட வேண்டும். அவருக்குத் தயக்கம்தான். ஆனால் சீதா கண்ணீர் விட்டுத் துளைத்து எடுத்து விட்டாள். பல முறை முயன்றும் அவரால் அவள் அப்பாவைப் பார்க்க முடிய வில்லை. சௌகார் இடத்தில் வந்து லீவு கேட்டுப் போகலாமென்றால், அவர் இவரை நாலு திட்டுத் திட்டி மூலையில் உட்கார வைத்து விட்டார்.

அவர் மத்தியானம் அறைக்குத் திரும்பிய போது கிடைத்த செய்தி இடியைப் போன்றது. வரன் குதிர்ந்து விட்டதாம். சாமா சீதாவின் அப்பாவிடம் கடைசிப் பட்சமாக முட்டிப் பார்த்தார். "அவள் திருமண விஷயம் முடிந்து விட்டது. நீ முன்பே சொல்லி யிருந்தாலும் சீதாவை உனக்குக் கொடுக்கச் சம்மதித்திருப்பேன். நீ ஏழைப் பையனாக இருந்தாலும் குணத்தில் தங்கம். இவ்வளவு காலமாக ஏன் வாயை மூடிக் கொண்டிருந்தாய்? இனிமேல் என்னால் பேசிய பேச்சை அழிக்க முடியாது. சீதாவை மறந்து விடு!" என்று கையை விரித்து, சாமாவின் நெஞ்சிலிருந்த சீதாவையும் அழித்துக் கொண்டு விட்டார்.

அடங்கி அடங்கி வாயை மூடிக் கொண்டு ஊமையாகி விட்டதால் எவ்வளவு பெரிய செல்வத்தை இழந்து நிற்கிறார். அழுது புலம்பி அவலமாய் நிற்கிற எதிர்காலம். சாமாவை மனத்தளவில் அடித்து வீழ்த்தியது.

சௌகார், "ஏன் சாமா! ஊமைச் சாமியாகி விட்டாய்? லீவு வேண்டுமானால் எடுத்துக் கொள்ளேன்" என்று மீண்டும் கேட்ட போதுதான், அவருக்கு நினைவு திரும்பியது.

"அன்பு என்பது தியாகமே. அது எதையும் எடுத்துக் கொள்வதில்லை; கொடுத்துக் கொண்டேயிருப்பதுதான் அதன் இயல்பு."

— சுவாமி விவேகானந்தர்

"எனக்கு எதற்கு விடிவு? வீட்டில் போய்ப் படுத்துக் கொண்டால் பார்ப்பதற்கு யார் இருக்கிறார்கள்?" என்று பெருமூச்செறிந்தார் சாமா.

பெருமூச்சை ஊடுருவிப் பிளந்து போய் அங்கு விண்டு கொண்டிருக்கும் ஓர் உள்ளத்தைப் பார்க்கச் சௌகாருக்கு உள்ளமுமில்லை; இஷ்டமும் இல்லை. மாடாய் உழைக்கும் மனிதர் ஒருவர், சற்று வாய் திறந்து பேசியதால் கொஞ்சம் ஆச்சரியப்பட்டார். பிறகு கணக்குகளில் மூழ்கி விட்டார்.

சாமாவுக்குச் சங்கரிப் பாட்டி வீட்டில் சாப்பாடு. வாங்குகிற சம்பளம் இருபத்தைந்து ரூபாயையும் அவள் கைகளில் கொடுத்துவிட்டு ஏதோ வயிற்றை நிரப்பிக் கொள்கிறார். வயிற்றுக்கு மேலே ஆயிரம் பதினாயிரம் விதங்களில் இதழ் விரித்திருக்கும் வாழ்க்கையை அவர் கண்டவரில்லை.

சீதாவின் தகப்பனாரிடத்தில் முன்னாலேயே சொல்லக் கூடிய துணிச்சல் இருந்திருந்தால், அவளைப் பெண் பார்க்க அவர்கள் வந்த தினத்தில் சௌகாரிடம் அடித்துப் பேசி விட்டுப் போய், விஷயத்தைச் சீதாவின் அப்பாவிடம் விளக்கி யிருந்தால் நிச்சயம் சீதா அவருக்குக் கிடைத்திருப்பாள்.

கிடைக்காமல் போனதுகூட நல்லதுதான். இந்த மாற்றுக் குறையாத இருபத்தைந்து ரூபாய் சம்பளத்தில் ஒருத்தியை வைத்துக் கொண்டு வாழ்ந்து, ஆசைக்கு ஒரு முழக் கதம்பம் வாங்கிக் கொடுக்க முடியுமோ?

"என்னடா, சாமா! தெருவிலே போகிற போது சிந்தனை?" என்று அந்த வெயிலில் வழி மறைக்கிறார் வேணுகோபால சர்மா. சாமாவுக்குத் தெரிந்தவர். கொஞ்சம் வாயரட்டை. பிறருடைய மனத்தைக் குத்திக் குளறி விளையாடுவது அவருக்குப் பொழுதுபோக்கு.

வேறு சமயமாக இருந்தால் ஓர் அரைச் சிரிப்புடன் நழுவிக் கொண்டிருப்பார் சாமா. இப்பொழுது அவருக்கு நழுவும் உத்தேசமில்லை "மனிதனாக இருக்கிறவன் எதையாவது சிந்தித்துத்தானாக வேண்டும். நீங்கள் சிந்திப்பதை விட்டு எவ்வளவு நாட்களாகின்றன?"

"அதைவிட நீங்கள் மனிதத் தன்மையை இழந்து எவ்வளவு நாட்களாகின்றன? என்று கேட்கலாமேடா!"

"எனக்கு அவ்வளவு சாமர்த்தியம் ஏது?"

"அதுதான் உன் நெற்றியில் எழுதி ஒட்டி இருக்கிறதே! சாமர்த்தியம் உள்ளவனாக இருந்தால் ஊர் உலகத்தைப் போலக் காலா காலத்தில் குடியும் குடித்தனமுமாகி இருக்க மாட்டாயோ? நீ ஒரு சோற்று மாடு. துருத்தியை நிரப்பிக் கொண்டால் சரி. — இந்த நாற்பது வயதுக் காலத்தில் நீ எதையடா சாதித்திருக்கப் போகிறாய்?"

சாமாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "சர்மா! வாயை மூடும்! நான் சோறு தின்கிறேன். நீர் எதைத் தின்கிறீர்?" என்றார்.

கோபம் வடிந்து ஆத்திரம் அடங்கி மனம் சாதுப் பிராணியாய் வந்து அடங்கிய பிறகு தான் சாமாவுக்குக் கூடப் புரிந்தது. சர்மா சொன்னதில் என்ன தவறு? நாற்பது வயது வரை வயிற்றுக்குக் கொட்டியது தவிர உருப்படியாய் என்ன காரியம் நடந்திருக்கிறது?

சௌகாரின் கடைக்குப் போவதற்கு இந்தத் தெரு குறுக்கு வழி. சாமா கெந்திக் கெந்தி நடந்து போய்க் கொண்டிருந்தார்.

பூதம் போல் ஒரு லாரி வந்து கொண்டிருக்கிறது. படுபாவிப் பயல்! என்னமாய் ஓட்டுகிறான்!

அட கஷ்ட காலமே! தெய்வ விக்கிரகம் போன்ற ஒரு நாலைந்து வயதுப் பெண் குழந்தை நடுத் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கிறதே! லாரி பாய்ந்து வருவதைப் பற்றி அந்தக் குழந்தை கொஞ்சமாவது லட்சியம் செய்கிறதோ? பன்னீர்ப் பூவைப் போல் நிச்சிந்தையாய் மண்ணை அளைந்து கொண்டிருக்கிறது. பெற்ற சண்டாளி குழந்தையை நடுத் தெருவில் விட்டு விட்டு வீட்டுக்குள் என்ன செய்து கொண்டிருக்கிறாள்? இப்படிப் பட்ட பொறுப்பற்ற தாய்மார்களுக்கும் இந்த மாதிரி தெய்வ மலர்கள் பிறக்கின்றனவே!

லாரிக்காரன் படு விரட்டாய் விரட்டிக் கொண்டு வருகிறான். குழந்தையோ நிச்சிந்தையாய் விளையாடிக் கொண்டிருக்கிறது!

லாரிக்கும் குழந்தைக்கும் குறுகிக் கொண்டு வரும் இடை வெளியில் யமன் நின்று கொண்டிருக்கிறான்!

அவ்வளவு சுலபமாக யமன் கையில் அந்தத் தெய்வ மலரைச் சிக்க விடுவதா?

குறுக்கே பாய்கிறார் சாமா.

லாரி சுவராய்த் தடைப்படுத்திய சாமாவின் மேல் ஏறிக் கதறிக் கொண்டே நிற்கிறது.

யமன் கையில் தன்னையே கொடுத்துக் கொண்ட சாமாவுக்கு, பிறகு நடந்த ஒவ்வொரு விஷயமும் நினைவு மங்கும் வேளையில் நன்றாகப் புரிகிறது.

கூட்டம் கூடி விடுகிறது. குழந்தைக்கு வந்த யமனை, தன் பக்கம் திருப்பிக் கொண்டு விட்ட சாமாவுக்கு நன்றி சொல்ல, அந்தக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு அதன் தாய் அவரை நோக்கி வருகிறாள், கூட்டத்தைப் பிளந்து கொண்டு.

அவள் சீதா அல்லவா? அவளுடைய குழந்தையா அது?

சாமாவைப் பார்த்ததும் அவள் திடுக்கிடுகிறாள். "நீங்களா?" என்கிறாள் விழிப் பெருக்கில் நீர் புரள.

அவர் ஏதோ சொல்ல முயலுகிறார்; முடியவில்லை. 'நான் நாற்பது வயது வரையில் வாழ்ந்தது வீண் போகவில்லை. என்னுடைய பிறப்புக்குச் சோற்றுக்கு மேலேயும் ஓர் இலட்சியம் இருந்திருக்கிறது' என்ற பெருமிதம், மரணத்தை எதிர்த்துக் கொண்டு அவர் முகத்தில் நிலவியது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

தனிப்பட்ட
சிறப்புக்கு
கைக்கொடுக்கிறது

**மபத்லால்**

**க்ரூப்**

பாப்ளின்கள்

ஷர்ட்டிங்குகள்




**மபத்லால் க்ரூப்**

நியு ஷோராக் (ஷோராக்) அஹமதாபாத் நியு ஷோராக், நடியாத் ● ஸ்டேன்டர்ட், பம்பாய் ● ஸ்டேன்டர்ட் (நியு சைனா) பம்பாய் ● ஸ்டேன்டர்ட், தேவாஸ் ஸாஸூன், பம்பாய் ● ஸாஸூன் (நியு யூனியன்) பம்பாய் ● ஸூரத், காட்டன் ஸூரத் ● மபத்லால் பைன், நவ்ஸாரி.

*Aiyars MGSP 316 TMA*

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

